# 1 சொல்லின் இலக்கணம்

மண்வெட்டியில் மண்ணை வெட்டுவது இரும்புத் தகடுதான். அதில் உள்ள மரப்பிடி மண்ணை வெட்டவில்லை. ஆனால், மரப்பிடி இல்லாமல் மண்ணை வெட்ட முடியுமா? முடியாது. ஆகவே, மண்வெட்டியில் இரும்புத்தகடும் வேண்டும், மரப்பிடியும் வேண்டும். பயன் இல்லாதது என்று அந்த மரப் பிடியை விடக்கூடாது. சொற்களிலும் அதேபோல் பொருள் உள்ள சொற்களும் உண்டு; பொருள் இல்லாத சொற்களும் உண்டு. பொருள் இல்லாத சொற்கள் என்று சிலவற்றை நீக்கிவிட்டால் நன்றாகப் பேசவும் முடியாது; எழுதவும் முடியாது; மொழி பயன் இல்லாமல் போகும்.

'அண்ணன் தம்பியைக் கண்டான்' என்பது ஒரு வாக்கியம். அந்த வாக்கியத்தில் மூன்று சொற்கள் உள்ளன. அண்ணன், தம்பி, கண்டான் என்பவை அந்த மூன்று சொற்கள். அந்த மூன்று சொற்களுக்கும் பொருள் உண்டு. ஆனால், 'தம்பியை' என்பதில் உள்ள 'ஐ' என்பது என்ன? அதற்குப் பொருள் உண்டா? 'ஐ' என்றால் யானையா, பூனையா? பெயரா? வினையா? ஒன்றும் சொல்ல முடியாது. அப்படியானால் பயன் இல்லாதது என்று அதை விட்டுவிடலாமா? அதுவும் முடியாது, விட்டுவிட்டால், 'அண்ணன் தம்பி கண்டான்' என்று சொல்லவேண்டும்.

அப்படிச் சொல்லும்போது, யார் யாரைக் கண்டார் என்பது தெரியவில்லை. பேசியும் பயன் இல்லாமல் போகிறது; எழுதியும் பயன் இல்லாமல் போகிறது. ஆகவே, இன்னது என்று தெரியாத அந்த 'ஐ' கட்டாயம் வேண்டியதாக இருக்கிறது. இதுவும் ஒரு சொல்தான். இதுபோன்ற எத்தனையோ சொற்கள் மொழிக்குப் பயன்படுகின்றன. இவற்றை எல்லாம் இடைச்சொல் என்று சொல்வார்கள். இவற்றை இலக்கணம் என்று சொல்லப்படும் பாடத்தில் கற்றுக்கொடுக்கிறார்கள்.

முன்னோர்கள் இப்படிப் பேசினார்கள், இப்படி எழுதினார்கள் என்று நமக்குத் தெரிவிப்பது இலக்கணம். ஆகவே, அதைத் தெரிந்துகொண்டால் நல்லதுதானே? வீட்டின் எதிரில் பெண் ஒருத்தி கோலம் போடுகிறாள். அவள் தன் கையில் இருக்கும் மாவை அவசரக் கோலமாக அள்ளித் தெளிக்கவில்லை. முன்னமே எண்ணிக்கொண்டு, திட்டமிட்டு, அங்கங்கே புள்ளிகளை வைத்து, பிறகு வளைவு வளைவாகக் கோடுகளை இழுக்கிறாள். அதன் பிறகு பார்த்தால், கோலம் அழகாகத் தெரிகிறது. முன்னமே திட்டம் இட்டுப் பழகாவிட்டால், அவளால் என்ன செய்ய முடியும்? கொண்டுவந்த மாவைக் கண்டபடி கொட்டிவிட்டுப் போகவேண்டியதுதான். கோலம் போடுவதற்கு எப்படித் திட்டம் பயன்படுகிறதோ, அதேபோல் சொற்களைப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் இலக்கணம் பயன்படுகிறது. ஆனால், இலக்கணம் வேண்டுமே என்று கவலைப்

பட்டுக்கொண்டிருக்க வேண்டியதில்லை. மற்றவர்களைப்போல் பேசியும் எழுதியும் பழகிவிட்டால், இலக்கணம் தானே வந்துவிடும். கோலம் போடுகிற பெண் எப்படிப் போடுவது என்று கவலையோடு நிற்பதில்லை. மற்றவர்கள் போடுவதைப் பார்க்கிறாள். அவர்களைப் போல் தானும் போடுகிறாள். முதலில் கொஞ்சம் தடுமாறுகிறாள். பிறகு, பழகப் பழகத் திறமை பெற்று விடுகிறாள். அதன்பிறகு, அவள் அறியாமலே அவளுடைய கை மாவை எடுத்து அழகான கோலங்களைப் போட்டுவிடுகிறது. அதுபோலவே, ஒருவர் நன்றாகப் பேசவும், எழுதவும் பழகிவிட்டால் அவர் அறியாமலே இலக்கணத்தில் வல்லவர்கள் ஆகிவிடுவார்.

படித்தவர்களுக்குத்தான் இலக்கணம் தெரியும் என்று பொதுவாகப் பலரும் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அது தவறு. படிக்காத மக்களும் பேசுகிறார்கள் அல்லவா? ஆகவே, அவர்களுக்கும் இலக்கணம் தெரியும். ‘அண்ணனும் தம்பியும் வந்தான்’ என்று படிக்காதவர்கள் யாரும் பேசுவதில்லை. ‘அண்ணனும் தம்பியும் வந்தார்கள்’ என்றுதான் அவர்களும் பேசுகிறார்கள். ‘நாளைக்கு வந்தேன்’,‘நேற்று வருவேன்’ என்று படிக்காதவர்களிடம் சொன்னால் அவர்கள் கேட்டுச் சிரிப்பார்கள். ‘மரம் விழுந்தான்’, ‘அவர்கள் வந்தது’ என்று சொன்னாலும் சிரிப்பார்கள். ‘உங்களுக்குத் தமிழே தெரியவில்லை’ என்று சொல்லிவிடுவார்கள். திணை, பால், எண், இடம் முதலான இலக்கணங்கள் படித்தவர்களுக்கு மட்டும் தெரியும் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். படிக்காதவர்களுக்கும் தெரியும். அதனால்தான் படித்தவர்கள் பிழையாகப் பேசினாலும் படிக்காதவர்கள் சிரிக்கிறார்கள்.

உண்மையைச் சொல்லப்போனால், இலக்கணத்தில் சில பகுதிகள், படித்தவர்களைவிடப் படிக்காதவர்களுக்கு நன்றாகத் தெரியும். இலக்கணம் அறிந்தவர்கள் சைக்கில் செய்கிறவர்களைப் போல உள்ளவர்கள். இலக்கணம் படிக்காமலே நன்றாகப் பேசுகிறவர்கள், சைக்கில் விடுகிறவர்களைப் போன்றவர்கள். சைக்கில் செய்கிறவர்களை விடச் சைக்கில் விடுகிறவர்களுக்கு அதனுடைய அருமை பெருமைகள் நன்றாகத் தெரியும். படித்தவர்களில் சிலர் எழுதும்போது, ‘அப்போது ஒருவள் வந்தாள்’ என்று எழுதுகிறார்கள். ‘ஒருவள்’ என்னும் சொல், தமிழில் இல்லாத சொல்; தவறான சொல். நாட்டுப்புறத்து மக்கள் யாரும் ‘ஒருவள்’ என்று பேசவே மாட்டார்கள். படிக்காதவர்கள் பேசும் போது,‘முயற்சி செய்கிறான்’ என்றுதான் பேசு கிறார்கள். படித்தவர்கள் சிலர் பேசும்போதும் எழுதும்போதும் ‘முயற்சிக்கிறான்’ என்று குறிப்பிடுகிறார்கள். அதுவும் தமிழுக்கு ஒத்துவராத பிழையான சொல்தான். இப்படி எத்தனையோ இலக்கியத் தவறுகள் படித்தவர்களிடம் உண்டு.

படிக்காதவர்களுக்கும் இலக்கணம் எப்படித் தெரியும்? என்று நீங்கள் கேட்கலாம். பலரும் பேசிப் பேசி, இந்தச் சொல்லை இன்ன இடத்தில் இப்படித்தான் வழங்கவேண்டும் என்று ஓர் அமைப்பு ஏற்பட்டு விடுகின்றது. அந்தச் சொற்களைப் பேசக் கற்றுக்கொள்ளும்போதே, அவற்றின் அமைப்பும் மனத்தில் பதிந்துவிடுகின்றது. அந்த அமைப்புத்தான் இயற்கையான இலக்கணம். 'அவர்கள்' என்னும் சொல் பலரைக் குறிக்கின்றது. அதோடு வினைச்சொல்லைச் சேர்க்கும்போது, பலரை உணர்த்தும்

வினைச்சொல்லையே சேர்க்கிறார்கள். அதனால்தான் 'அவர்கள் வந்தது' என்று சொல்லாமல்,'அவர்கள் வந்தார்கள்' என்று சொல்கிறார்கள்.

இவற்றை எல்லாம் தெளிவுபடுத்துவதற்குத்தான் இலக்கணம் எழுதியிருக்கிறார்கள். திணை, பால், எண், இடம், வேற்றுமை, காலம், முற்று, எச்சம், எழுவாய், பயனிலை முதலான பெயர்களை வைத்துச் சொற்களின் இலக்கணத்தை ஆராய்கின்றார்கள். எழுவாயின் திணை பால், பயனிலையின் திணை பாலோடு ஒத்திருக்கவேண்டும் என்றும், இன்ன வேற்றுமை உருபு இப்படி முடியவேண்டும் என்றும், எச்சம் இவ்வாறு முற்றோடும் பெயரோடும் முடியவேண்டும் என்றும் பலவாறு விரிவாக எழுதியிருக்கிறார்கள். இவற்றை எல்லாம் கற்றுக்கொண்டால் நல்லதுதான். சைக்கில் நன்றாக ஓட்டக் கற்றுக் கொண்டவர், சைக்கில் எப்படிச் செய்கிறார்கள் என்றும் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறார். அதுபோல், நீங்கள் பேசியும் எழுதியும் பழகிய தமிழ்ச்சொற்கள் என்ன இலக்கணத்தோடு அமைந்திருக்கின்றன என்று தெரிந்து கொள்ள ஆசைப்படுவது இயற்கை. ஒவ்வொரு மொழிக்கும் இலக்கணம் ஒவ்வொரு வகையாக இருக்கும்.மொழிகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது எவ்வளவோ வேடிக்கையான உண்மைகள் எல்லாம் தோன்றும்.

குழந்தைகள் பேசுகிற பேச்சையும் நாம் பேசுகிற பேச்சையும் ஒப்பிட்டுப்பாருங்கள். நாம் 'எனக்கு' என்று சொல்கிறோம். குழந்தை 'நானுக்கு' என்று சொல்கிறது. நாம் 'உனக்கு' என்று சொல்வதை குழந்தை 'நீக்கு' என்று சொல்கிறது. அதே குழந்தை வளர்ந்த பிறகு, நானுக்கு நீக்கு முதலான சொற்கள் தவறானவை என்று தெரிந்து கொள்கிறது. மற்றவர்கள் 'எனக்கு, 'உனக்கு' என்று பேசுவதைக் கவனிக்கிறது. தன்னைத்தானே திருத்திக்கொள்கிறது. பிறகு, நம்மைப் போலவே 'எனக்கு, 'உனக்கு' என்று தவறு இல்லாமல் பேசுகிறது. அந்தத் தவறு எப்படித் திருந்தியது? இலக்கணம் படித்து அதனால் திருந்தவில்லை. மற்றவர்கள் பேசுவதைக் கேட்டு அவர்களைப் போல் பேசி மதிப்புப் பெற வேண்டும் என்ற ஆசையால் திருந்தியது. சின்ன குழந்தை தலைமயிரைச் சரியாக வாரிக்கொள்வதில்லை. முகத்தையும் நன்றாகக் கழுவிக்கொள்வதில்லை. ஆனால் வளர்ந்த பிறகு, மற்றவர்கள் ஒழுங்காக அழகுபடுத்திக்கொள்வதைப் பார்த்துத் தானும் தலைமயிரை வாரிக்கொள்கிறது; முகத்தையும் அழகு படுத்திக் கொள்கிறது. மற்றவர்களைப் போல் ஒழுங்காக, மதிப்போடு வாழவேண்டும் என்ற ஆசைதான் அதற்குக் காரணம். சொற்களைப் பேசும்போதும் இந்த ஆசைதான் திருத்தமாகப் பேசச் செய்கிறது. அதனால்தான் சொற்களின் இலக்கணம் மக்களுக்கு இயல்பாகத் தெரிந்ததாகிவிடுகிறது.

சொற்களின் இலக்கணத்தைப் பொறுத்தவரையில், இன்னொன்று கவனிக்கவேண்டும். குழந்தைகளின் பேச்சில் தவறு உண்டு என்றும், வளர்ந்த மக்களின் பேச்சில் தவறு இல்லை என்றும் சொல்லிவிட முடியாது. அவர்-அவர்க்கு, இவர்-இவர்க்கு, தாய்-தாய்க்கு என்பவை போல, நீ-நீக்கு, நான்- நானுக்கு என்று சொல்ல வேண்டும். அதுதான் பொருத்தம். குழந்தை ஒன்று பேசும்போது பிழை கண்டு பிடிக்கிறோம். உனக்கு, எனக்கு என்று சொல்லித் திருத்துகிறோம்.

உண்மையாகப் பார்த்தால், உனக்கு,எனக்கு என்ற சொற்கள் தவறாக மாறிவிட்ட சொற்கள் என்பதை உணரலாம். ஆங்கில நாட்டிலும் 'கோ' (go), 'பய்' (buy) முதலான சொற்களின் இறந்த காலமாக 'வெண்ட்' (went), 'பாட்' (bought) என்று சொல்லாமல் 'கோய்ட்' (goed), 'பய்ட்' (buyed) என்று ஆங்கிலேயக் குழந்தைகள் பேசுகின்றனவாம். வளர்ந்த மக்கள் பேசும் சொற்கள் ஒழுங்கு இல்லாமல் தோன்றியபோதிலும், அவை களையே குழந்தைகளும் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்.' செல்வாக்கு உள்ளவர்கள் பேசும் சொற்களே சொற்கள். மீட்டர், லிட்டர் முதலியவை போலச் சொற்களின் இலக்கணத்தை அளந்து தரக்கூடிய பொதுவான கருவி ஒன்று இல்லை. இங்கே, பெரும்பாலோர் இட்டதே சட்டம். அதைத்தான் 'மரபு' என்று சொல்கிறார்கள். இது இலக்கணத்தில் ஒரு முக்கியமான பகுதி. நாய்க்கன்று, பசுக் குட்டி என்று சொல்லாமல் நாய்க்குட்டி, பசுக்கன்று என்று சொல்லியாகவேண்டும்.

இப்படிச் சொற்களின் இலக்கணத்தில் எவ்வளவோ கற்றுக்கொள்ள வேண்டியவை உள்ளன. ஆனால் அதற்காக அஞ்சவேண்டியதில்லை. வளர்ந்தவர்கள் பேசுவதைப் பார்த்துப் பேசினால்போதும். கற்றவர்கள் எழுதுவதைப் பார்த்து எழுதினால் போதும் நம்மை அறியாமலே இலக்கணம் நம் மனத்தில் பதிந்துவிடும்.

**டாக்டர் மு. வரதராசன்.**

# பந்தி அமைத்தல்

*தரம் 10 இல் பந்தி அமைத்தல் பற்றிய விளக்கம் தரப்பட்டது. இங்கு பந்தி அமைத்தல் பற்றிய சில மேலதிக தகவல்களும் பயிற்சிகளும் தரப்பட்டுள்ளன.*

*பின்வரும் பந்தியை அவதானியுங்கள்.*

**நீரிலிட்டு அவித்தல், அவித்து வேக வைத்தல், வறுத்து அவித்தல், சுடுதல், வற்றலாக்குதல், எண்ணெயிலிட்டுப் பொரித்தல், வேகவைத்து ஊறவைத்தல் ஆகியன சமையலின் முறைகள். நகர்ப்புறமயமாதல், தொடர்பு சாதனங்களின் விளம்பரத்தன்மை, பொருளியல் வளர்ச்சி, பயண அனுபவங்கள் ஆகியவை காரணமாகக் கடந்த ஒரு நூற்றாண்டு காலத்துக்குள் தமிழர்களின் உணவுமுறை மிகப்பெரிய அளவில் மாறுதல் அடைந்திருக்கிறது. நிகழ்கால உணவுப் பழக்கவழக்கங்களில் உடல்நலம் குறித்த அக்கறையைவிடச் சுவை குறித்த பார்வையே ஆளுமை செலுத்துகிறது.**

*( தொ. பரமசிவன், பண்பாட்டு அசைவுகள்)*

*மேலுள்ள பந்தியின் தலைமைக் கருத்து ''கடந்த ஒரு நூற்றாண்டில் தமிழர்களின் உணவுமுறை பெரிதும் மாறுதல் அடைந்திருக்கிறது.'' என்பதாகும்.*

*தலைமைக் கருத்தை வளர்த்தெடுப்பதற்கும் வாசிப்போர் மனதில் அக்கருத்து ஆழமாகப் பதிவதற்கும் துணைக்கருத்துக்கள் உள்ளன. உதாரணங் காட்டல், நியாயங்கூறல், விளக்கந்தருதல் என்பவற்றின் ஊடாக தலைமைக் கருத்து விரித்துத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இதேபோல ஒரு பந்தியமைப்பு அமைதல் வேண்டும்.*

**பயிற்சி**

*பின்வரும் பந்திகளை அவதானியுங்கள். அவற்றின் தலைமைக் கருத்தையும் துணைக் கருத்தையும் இனங்கண்டு எழுதுங்கள் :*

*பத்தொன்பதாம் நூற்றாண்டிற் சிறப்புற்று விளங்கிய ஆறுமுகநாவலர், தமிழ் வளர்ச்சிக்குச் செய்யுளிலும் உரைநடையே அவசியமென வற்புறுத்தினார். கிறிஸ்துமதப் பிரசாரத்தால் அக்காலஞ் சைவசமயத்திற்குண்டான தளர்ச்சியை நீக்கச் சென்னையில் அச்சியந்திரசாலையொன்றை அமைத்துப் பல நூல்களைத் திருத்தமாகப் பதிப்பித்தார். பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கட்டுரைகள், கண்டனங்கள், மாணவர் நூல்கள் முதலியவற்றை உரைநடையில் எழுதினார். இவ்வுரைநடைகளிற் பழைமையும், புதுமையும், கம்பீரமும், எளிமையும் அமைந்தன. அதனால் அவர் வசனநடை கைவந்த வல்லாளர் எனப் பாராட்டப்படுகின்றார்.*

*(பண்டிதர் வீ.ஏ. யோண்பிள்ளை, தமிழ் அறிவு)*

சிவசம்புப் புலவரின் கீர்த்தனைகள் ஈழத்துத் தமிழ்ப் பாரம்பரியக் கவிதை மரபையும் கீர்த்தனை மரபையும் இணைப்பனவாய் அமைந்துள்ளன. அத்துடன் ஆன்மாவுக்கும் கடவுளுக்குமான ஊடாட்டநிலையில் அவை உருப்பெற்றுள்ளதனையும் அவதானிக்கமுடிகிறது. புலவரது கீர்த்தனைகள் முருகனது குணங்களிலும் வடிவங்களிலும் ஈடுபாடு காட்டுதல், குறை இரத்தல், தன்னை அர்ப்பணித்தல், இறைவனுக்கு அடிமையாதல், இறைமயமாதல், புராண இதிகாசக் கதைகளை மீட்டுப் பேசுதல், தனது துன்பநிலை கூறல், கந்தவனத்துச் சூழலை விபரித்தல் முதலாய பல்வேறு அம்சங்களைக் கொண்டுள்ளன.

*(செ. சுதர்சன், உடுப்பிட்டி சிவசம்புப் புலவர் பிரபந்தப் பெருந்திரட்டு)*

ஆரியச் சக்கரவர்த்திகளின் சேது நாணயங்களின் வனப்பும், எழில் பொருந்திய தோற்றமும் அரசர்களது அக்காலங்களில் தொழில் புரிந்த தொழில் வினைஞர்களின் நுணுக்கமான வேலைப்பாட்டிற்கும், திறமைக்கும் எடுத்துக்காட்டாக அமைகின்றன. யாழ்ப்பாணத்து மக்கள் பிற்காலங்களைப் போல் ஆரியச்சக்கரவர்த்திகள் காலத்திலும் தங்க நகைகளைப் பெரிதும் பயன்படுத்தினார்கள். அதனால் நகைகளைச் செய்யும் தொழில் சிறப்புற்றிருந்தது. தங்களை அழகுபடுத்துவதற்கும் நகைகளை பெண்கள் விரும்பினார்கள். மேலும் சமுதாய நிலையினதும் செல்வத்தினதும் சின்னமாக ஆபரணங்கள் விளங்கின.

*(பேராசிரியர் செ. கிருஷ்ணராஜா, இலங்கை வரலாறு பாகம் 2)*

# கலைச்சொற்கள்

## கலை இலக்கியம் தொடர்பானவை

| | |
|---|---|
| Aesthetics | - அழகியல் |
| Archives | - ஆவணக்காப்பகம் / சுவடிகள் கூடம் |
| Autobiography | - தன்வரலாறு |
| Bibliography | - நூலடைவு |
| Concept | - கருத்தாக்கம் / எண்ணக்கரு |
| Character | - கதாபாத்திரம், கதைமாந்தர் |
| Column | - பத்தி |
| Colloquialism | - வட்டாரவழக்கு |
| Clan | - குலம் |
| Depression | - மனத்தளர்வு |
| Etymology | - சொல்பிறப்பியல் |
| Ego | - தன்முனைப்பு |
| Fable | - நீதிக்கதை |
| Fiction | - புனைவு |
| Folklore | - நாட்டாரியல் / நாட்டுப்புறவியல் |
| Form | - வடிவம் |
| Idealism | - கருத்து முதல்வாதம் |
| Logic | - தர்க்கம் |
| Lyric | - பா / பாடல் வரி |
| Myth | - தொன்மம் / புராணிகம் |
| Methodology | - முறைமை |
| Non - fiction | - புனைவுசாரா (அ - புனைவு) |
| Narrator | - கதைசொல்லி |
| Novelette | - குறுநாவல் |
| Poetics | - கவிதையியல் |
| Pamphlet | - துண்டுப்பிரசுரம் |
| Prologue | - முகவுரை |
| Structure | - கட்டமைப்பு |
| Symbol | - குறியீடு |
| Tragedy | - துன்பியல் |
| Theme | - கரு |
| Workshop | - பயிலரங்கு |

| | |
|---|---|
| Academic Year | - கல்வியாண்டு |
| Budget | - பாதீடு / வரவுசெலவுத் திட்டம் |
| Citizenship | - பிரஜாவுரிமை / குடியுரிமை |
| Demand | - கேள்வி |
| Encoding | - குறியாக்கம் |
| e-Publishing | - மின்பதிப்பாக்கம் |
| Gas | - வளிமம் |
| Green house effect | - பச்சைவீட்டு விளைவு |
| Globalization | - பூகோளமயமாக்கல் / உலகமயமாக்கல் |
| Image | - படிமம் |
| Internet | - இணையம் |
| Liquid | - நீர்மம் / திரவம் |
| Oxygen | - உயிரியம் / பிராண வாயு |
| Psychology | - உளவியல் |
| Solid | - திண்மம் |
| Super market | - சிறப்பங்காடி |
| Unicode | - ஒருங்குறி |
| User name | - பயனர் பெயர் |
| e - Bussiness | - மின்னியல் வணிகம் |

**பயிற்சி**

1. பின்வருவரும் கலைச் சொற்களுக்குரிய ஆங்கிலச் சொற்களைத் தேடி எழுதுக.

★ மின்கலம் ★ பேருந்து ★ கோப்பு ★ ஒலிவாங்கி ★ பல்லூடகம் ★ ஆழிப்பேரலை

2. பின்வரும் துறைகள் ஒவ்வொன்றும் சார்ந்த பத்து கலைச்சொற்களைத் தேடித் தொகுத்து எழுதுக.

★ விஞ்ஞானம் ★ தொடர்பாடல் ★ பொருளாதாரம் ★ அரசியல்
★ புவியியல் ★ கல்வி ★ கலை ★ விளையாட்டு

**செயற்பாடு**

ஒவ்வொரு குழுவும் ஒவ்வொரு பத்திரிகையை அல்லது சஞ்சிகையைத் தெரிவு செய்யுங்கள். செய்தித்தாள் அல்லது சஞ்சிகை ஒன்றிலுள்ள கலைச்சொற்கள் பத்தினை இனங்கண்டு எழுதுங்கள். பின்னர், தொகுத்தவற்றை ஆசிரியருடன் கலந்துரையாடிக் காட்சிப்படுத்துங்கள்.

# 2 தமிழில் சிறுவர் இலக்கியம்

நவீன காலம் சார்ந்த தமிழ் இலக்கிய வரலாற்றில் ஈழம் பல துறைகளில் தமிழகத்திற்கு முன் உதாரணமாகத் திகழ்ந்துள்ளது. இவை பற்றி போதிய ஆய்வுகள் இன்றுவரை நடைபெறவில்லை. அதிலும் சிறுவர் இலக்கியத்துறை தொடர்பில் - தமிழில் சிறுவர் இலக்கியம் தோற்றம்பெற்ற வரலாற்றில் ஈழத்தின் பங்கு முக்கியமானது. அதுபற்றி ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கமாகிறது.

1935 இல் ஈழத்தில் வெளிவந்த பிள்ளைப்பாட்டு என்ற தொகுப்பே ஈழத்துத் தமிழ் சிறுவர் இலக்கிய வரலாற்றில் மட்டுமன்றி தமிழகம் உள்ளிட்ட தமிழ்ச்சிறுவர் இலக்கிய வரலாற்றிலேயே முதல் சிறுவர் பாடல் தொகுப்பாக வெளிவந்தது. இது தமிழக சிறுவர் இலக்கிய ஆய்வாளர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட விடயமாகும்.



மேற்கூறியவாறு குறிப்பிடுகின்றபோது சிறுவர் பாடலாசிரியர் பலரது பாடல்கள் கொண்ட தொகுப்பு என்ற விதத்திலேயே அது பொருந்துகின்றதென்பதனை மனங்கொள்ள வேண்டும். அதாவது தனி ஒருவரது பாடல்கள் கொண்ட தொகுப்பொன்று 1918 ஆம் ஆண்டு ஈழத்தில் வெளிவந்திருப்பதாக இரசிகமணி கனகசெந்திநாதன் குறிப்பிட்டுள்ளமை பற்றி பலரும் அறிந்திருக்க மாட்டார். 1918 ஆம் ஆண்டிலே வித்தியாதிகாரி அவர்களின் விருப்பத்தின்படியும் அனுமதிப்படியும் இலங்கை அரசாட்சியாரின் பிரதான தமிழ் முதலியாராகிய ச. வைத்தியநாதரால் ‘‘தமிழ்ப் பாலபோதினி’’ என்ற குழந்தைப் பாடல்களின் தொகுதி ஒன்று தொகுத்து வெளியிடப்பட்டுள்ளது என்கிறார் கனக செந்திநாதன்.

*மேலும் அவர் கூறுவதாவது, ''சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு'', ''கைவீசம்மா கைவீசு'', ''கையின் விரல் ஐந்துமொன்றாய்'', ''என் தாயே என் தாயே'', ''குண்டிடுக்கி குடுகுடுக்கி'' முதலிய சிறந்த பாடல்களை உள்ளடக்கிய இருபத்தைந்து பாட்டுக்கள் இந்நூலில் இருக்கின்றன. இப்பாடல்கள் எக்காலத்திலும் புளிக்காமல் பாடக்கூடிய அருமையான பாடல்கள்.*

*கனகசெந்திநாதன் மேலே குறிப்பிடும் பாடல்களுள் சில நாட்டார் பாடல்களோ (எ-டு: ''சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு''அல்லது அவற்றை ஆரம்பமாக மட்டும்கொண்டு (புதிதாக) எழுதப்பட்டனவோ தெரியவில்லை. அவ்வாறு நாட்டார் பாடல்கள் என அவற்றைத் தவிர்த்தால் ''என் தாயே என் தாயே'' முதலியன சுயமான பாடல்களாக இருக்கக்கூடும். அந்நூல் பார்வைக்கு கிடைக்கின்றவரை முடிவாக எதையும் கூற முடியாவிடினும், சிறுவர் பாடல் தொகுப்பு முயற்சி ஒன்று 1918 இல் இடம்பெற்றுள்ளது என்பது தெளிவு.*

*அதேவேளையில் அண்மையில் இன்னொரு தகவலும் கூறப்படுகின்றது. ஈழத்தின் முக்கியமான தகவல் களஞ்சியங்களுள் ஒருவரான மயிலங்கூடலூர் நடராசா, 'தமிழில் வெளிவந்த முதலாவது சிறுவர் பாடல் நூலாக இருப்பது யாழ்ப்பாணம் தம்பிமுத்துப்பிள்ளை என்பவர் 1886 ஆம் ஆண்டு எழுதி வெளியிட்ட பாலியக்கும்மி' என்கிறார்.*

*1859 இல் பாலியர் நேசன் என்ற பெயரில் சிறுவருக்கான பத்திரிகை ஒன்று வெளியிடப்பட்டது. அதுவே முதல் சிறுவர் பத்திரிகை ஆகலாம். அது யாழ்ப்பாண அமெரிக்க மிஷனரிமாரால் வெளியிடப்பட்ட சூழலில் தொடர்ந்து முற்குறிப்பிட்ட ''பாலியக்கும்மி''யும் வெளிவந்திருக்க வாய்ப்பிருப்பதை மறுப்பதற்கில்லை. எனினும் இது ஆய்வுக்குரியதொரு விடயமாகிறது.*

*எவ்வாறாயினும் ''பாலியக்கும்மி'' பற்றியும் முற்குறிப்பிட்ட ''தமிழ்ப்பால போதினி'' பற்றியும் கூறப்படும் தகவல்கள் ஆதாரபூர்வமாக உறுதிப்படுத்தப்பட வேண்டியன என்பது உண்மையே. எனினும் இத்தகைய தகவல்கள் காரணமாக பிள்ளைப்பாட்டின் சிறப்பும் முக்கியத்துவமும் குன்றிவிடுவதில்லை. ஏனெனில் ''பிள்ளைப்பாட்டு'' தொகுப்பிலுள்ள சிறுவர் பாடல்கள் தமிழாசிரியர்களுக்கிடையே நடத்தப்பட்ட சிறுவர் பாடல் போட்டியினூடாகத் தெரிவுசெய்யப்பட்டவை. அத்தகைய போட்டி நடத்துவதற்குக் காரணகர்த்தாவாக விளங்கியவர் அன்றைய வட பெரும்பாக வித்தியாதரசியான கே.எஸ். அருணந்தி. (எம்எஸ்ஸி) உளவியல் புலமைமிக்க அன்னாரும் ஏனைய தமிழறிஞர்களான சுவாமி விபுலானந்தர், சுவாமி ஞானப்பிரகாசர், பண்டிதர் சி. கணபதிப்பிள்ளை, நவநீத கிருஸ்ண பாரதியார், பண்டிதர் வே. மகாலிங்கசிவம் ஆகிய தமிழ்ப்புலமையாளரும் பரீட்சகர்களாக தொடர்புபட்டிருந்த அப்போட்டியில் தெரிவுசெய்யப்பட்ட சிறுவர் பாடல்கள் தரம் மிக்கவையாக இருந்தமை காரணமாக முன்னைய நூல்களைவிட பிள்ளைப்பாட்டு*

சிறந்ததொரு தொகுப்பு நூலாக பரிணமிப்பதற்கு வாய்ப்பு ஏற்பட்டுள்ளது என்ற உண்மையை மறுப்பதற்கில்லை. இது பற்றி சற்று விரிவாக விளக்குவோம்.

சிறுவர் பாடல்கள் சிறுவர் உளவியலுக்கேற்ப உருவாக வேண்டும். இவ்வாறு நோக்கும்போது சிறுவர்களுக்கு விருப்பமான விடயங்கள் பாடுபொருளாக வேண்டுமென்பது அவசியமாகிறது. பொதுவாக வளர்ப்புப் பிராணிகள் (நாய், பூனை, ஆட்டுக்குட்டி) விழாக்கள் கொண்டாட்டங்கள் (தீபாவளி, ஆடிப்பிறப்பு) விளையாட்டுக்கள் (பந்து, பட்டம் விடுதல்) குடும்ப உறவினர் (அம்மா, அப்பா, பாட்டி) இயற்கைக் காட்சிகள் (அம்புலி, கடல்) முதலியனவே பெரும்பாலும் இத்தொகுப்பின் பாடுபொருளாகியுள்ளன.

சிறுவர் பாடல்கள் சிறுவர்களைக் கவரும் விதத்தில் சந்தம், ஓசை, இசைப் பண்பு முதலியன கொண்டனவாக அமைவது அவசியம். இத்தொகுப்பிலும் அத்தகைய பாடல்கள் பலவுள்ளமை கவனத்துக்குரியது.

சிறுவர்களின் வயது, அறிமுறைத்திறன், உள்வாங்கும் திறன், உளவியல் முதலானவற்றை மனங்கொண்டு ''பகுதி ஒன்று'', ''பகுதி இரண்டு'' என இப்பிள்ளைப் பாட்டுத் தொகுப்பு பகுக்கப்பட்டுள்ளமை முக்கியத்துவமானதொன்று. ஏனெனில் சிறுவர் வயது எல்லையை மனங்கொண்டு சிறுவர்பாடல் தொகுப்புக்கள் ஈழத்தில் வெளிவந்திருப்பது - இன்றும் வெளிவருவது குறைவென்பதை மறந்து விடுவதற்கில்லை.

''கதைப்பாடல்கள்'' சிறுவர்களால் பெரிதும் விரும்பப்படுவது எனினும் இம்முயற்சியும் ஈழத்தில் அருகியே காணப்படுகின்றது. மாறாக இத்தொகுப்பின் சுவையான கதைப்பாடல்கள் இடம்பெற்றிருப்பதும் இன்றும் நயப்பிற்குரியனவாக அவை திகழ்வதும் கவனத்திற்குரியதே!

அன்றைய சிறுவர் பாடல் போட்டி ஊடாக முக்கியமான சிறுவர் பாடலாசிரியர்கள் சிலரது (உதாரணம் - சோமசுந்தரப் புலவர்) அபார ஆற்றல் வெளியுலகத்திற்கு தெரிய வந்திருப்பதும் அவர்கள் தொடர்ந்தும் அத்துறையில் ஈடுபட்டுள்ளமையும் குறிப்பிடத்தக்கதே. சிறுவர் பாடல் போட்டியும் தொகுப்பும் தந்த உந்துதல்களால் தமிழாசிரியர் பலர் இம்முயற்சியில் ஈடுபட ஆரம்பித்தமையும் அது காரணமாக ஈழத்தில் சிறுவர் பாடல் முயற்சி இடையறாததொரு தொடர்ச்சி யையும் வளர்ச்சியையும் பெற்றிருப்பதும் இன்று பின்னோக்கிப் பார்க்கும்போது புலப்படுவது வற்புறுத்தப்பட வேண்டியதொன்று.

தமிழ்ப் பண்பாட்டு தனித்துவம் வழக்காறுகள், நம்பிக்கைகள் குன்றி வரும் இன்றைய ஆரோக்கியமற்ற சூழலில் இத்தொகுப்பிலுள்ள பாடல்களுள் சில (உதாரணம்: ஆடிப் பிறப்பு, கத்தரித் தோட்டத்து வெருளி) மென்மேலும் முக்கியத்துவம் பெறக்கூடியவை என்பதையும் இவ்வேளை குறிப்பிடுவது பொருத்தமானதே ஆகும்.

இத்தகைய சிறப்பிற்கும் சிந்தனைக்கும் உருவகுத்த அருள்நந்தி அவர்களின் முயற்சி வரலாற்றில் பதிவு செய்யப்பட வேண்டியதொன்று என்பதில் தவறில்லை.

இதுவரை கூறப்பட்டவற்றை தொகுத்து நினைவு கூரும்போது ஈழம் தமிழில் சிறுவர் பாடல் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் பெற்றுள்ள வரலாற்று முக்கியத்துவம் விதந்துரைக்கப்பட்டதொன்றாக இருப்பது நன்கு புலப்படுகின்றது.

**கலாநிதி செ. யோகராஜா.**

**பயிற்சி**

*1. தமிழின் முதல் சிறுவர் இலக்கியம் எப்போது வெளியிடப்பட்டது, அது எவ்வகையில் அமைந்திருந்தது?*
*2. தனியொருவரது படைப்பாக வெளிவந்த சிறுவர் இலக்கியம் என எதனை இக்கட்டுரை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்? அதனை முதல் வெளியீடாகக் கூற ஆசிரியர் தயக்கம் காட்டுவது ஏன்?*
*3. தமிழின் முதல் சிறுவர் பத்திரிகை எது?*
*4. சோமசுந்தரப் புலவர் பற்றி சிறுகட்டுரை எழுதுக.*

## கட்டுரை எழுதுதல்

கொடுக்கப்பட்ட வழிகாட்டல் குறிப்பினை அல்லது தலைப்பினை அடியொற்றி கட்டுரை எழுதுதல் அவசியம்.

★ கருத்துக்கள் ஒழுங்குறவும் கட்டுக்கோப்பாகவும் வெளிப்படுத்தப்பட வேண்டும்.
★ வழுக்களின்றி வளமான மொழிநடையில் எழுத வேண்டும்.
★ விளக்கமாகவும் கற்பனையாற்றலுடனும் புதிய பார்வை மற்றும் புத்தாக்கத் திறனுடனும் எழுதப்பட வேண்டும்.
★ தனித்துவமான மொழிநடை, தெளிவு, மொழிவீச்சு என்பன கைவரப் பெற்றதாய் அமைய வேண்டும்.
★ கட்டுரை வகை, அதன் தற்காலப் பொருத்தப்பாடு என்பன கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.
★ கட்டுரைக்கான அறிவுறுத்தல்கள் முழுமையாகப் பின்பற்றப்பட வேண்டும்.
★ கட்டுரை நுட்பங்கள் பிரயோகப்படுத்தப்பட வேண்டும்.

**பயிற்சி**

1. கட்டுரை ஒன்றினைத் தேர்ந்தெடுத்து அதில் அமைந்துள்ள கட்டுரைக்கான பண்புகளையும் மீறல்களையும் பகுத்தாய்ந்து பட்டியலிடுக.
2. குழுக்களாக அமைந்து ஆசிரியரால் வழங்கப்படும் கட்டுரைத் தலைப்புக்களில் எவ்வகையில் கட்டுரையைச் சிறப்பாக அமைக்க இயலும் என்பதைக் கலந்தாய்வு செய்து சிறுகுறிப்புகளாக அமையுங்கள். அதனை வகுப்பு முழுமையிலும் சமர்ப்பியுங்கள்.

## நிறுத்தக் குறியீடுகள்

ஒரு எழுத்தாக்கத்தை உருவாக்குவதற்கும், உருவாக்கிய ஆக்கங்களை கருத்துப் பிழையின்றி, தெளிவான பொருளை விளங்கிக்கொள்வதற்கும் நிறுத்தற்குறிகளே துணைபுரிகின்றன. இவற்றைக் கடைப்பிடிப்பது அனைவரதும் கட்டாயக் கடமையாகும்.

**பின்வரும் நிறுத்தற் குறிகளை அவதானிப்போம்:**

| | |
|---|---|
| அ) முற்றுப்புள்ளி அல்லது முடிப்பிசைக்குறி | ( . ) |
| ஆ) வினாக்குறி அல்லது வினாவிசைக்குறி | ( ? ) |
| இ) வியப்புக்குறி அல்லது மெய்ப்பாட்டுக்குறி | ( ! ) |
| ஈ) காற்புள்ளி அல்லது உறுப்பிசைக்குறி | ( , ) |
| உ) அரைப்புள்ளி அல்லது தொடரிசைக்குறி | ( ; ) |
| ஊ) முக்காற்புள்ளி அல்லது விளக்கிசைக்குறி | ( : ) |
| எ) சிறுகோடு அல்லது விட்டிசைக்குறி | ( - ) |
| ஏ) தனி நிலைத் தொடர் | (....) |
| ஐ) அடைப்புக்குறி | (  ) |
| ஒ) மேற்கோட்குறி அல்லது அனுவாதக்குறி | ( ‘‘....’’) |

இனி குறியீடுகளை தொகுத்து நோக்குவோம்

### 01. முற்றுப்புள்ளி அல்லது முடிப்பிசைக்குறி ( . )

முற்றுப்புள்ளி பயன்படுத்தப்படும் சந்தர்ப்பங்கள்.

அ. செப்பு, வியங்கோள், ஏவல் வாக்கியங்களின் இறுதியில்

★ மாணவர்கள் இன்று கணினித்துறையில் அதிக நாட்டங்கொண்டுள்ளனர். (செப்பு)

- வாழிய பல்லாண்டு. (வியங்கோள்)
- நேரத்திற்கு பாடசாலைக்கு வா. (ஏவல்))

ஆ. ஒரு விடயத்தை சுருக்கமுறையில் கூறும் போது

- இலங்கை போக்குவரத்து சபை - இ.போ.ச.
- கிறிஸ்துவுக்கு முன் - கி.மு.
- ஐக்கிய நாடுகள் சபை - ஐ.நா. சபை

இ. கடிதத்தின் முகவரி இறுதியிலும் திகதி இறுதியிலும்

47, சாரல் வீதி,
ஹட்டன்.
2015.02.10.

### 02. வினாக்குறி அல்லது வினாவிசைக்குறி ( ? )

இக்குறியீடு பயன்படுத்தப்படும் சந்தர்ப்பங்கள்

நேர் கூற்று வினாவாக்கியங்களின் இறுதியில்

- ***நீ ஒரு பேனையாவது தரமாட்டாயா?***

அயற்கூற்று வினா வாக்கியங்களின் இறுதியில் வினாக்குறி வராது.

- ***நான் அதைப் பார்த்தேனா, என்று அவன் கேட்டான்.***

ஐயத்துக்கிடமான யாதேனும் ஒரு கூற்றின் பின் அடைப்புக்குறிக்குள் வினாக்குறி இடப்படுகிறது.

- ***திருவள்ளுவர் காலம் கி.பி. 100 (?)***

### 03. மெய்ப்பாட்டுக்குறி அல்லது வியப்புக்குறி ( ! )

பல்வேறு விதமான மன உணர்ச்சிகளை வெளிக்காட்ட இக்குறி பயன்படுத்தப்படுகிறது. புதுமை, மகிழ்ச்சி, இரக்கம், துக்கம், கோபம், பயம், விருப்பம், நோ, துன்பம், அருவருப்பு, வெறுப்பு போன்ற உணர்ச்சிகளை வெளிப்படுத்துகின்ற இடைச்சொற்கள், சொற்றொடர்கள், வாக்கியங்கள் ஆகியவற்றின் பின்னர்

- ஆகா! மலையிலே வழிந்தோடும் நீரருவியின் அழகுதான் என்னே!
- பாவம்! வாயில்லாப் பிராணி!
- ஐயோ! எல்லாமே போய்விட்டனவே!

## 04. காற்புள்ளி அல்லது உறுப்பிசைக்குறி ( , )

இக்குறி பயன்படுத்தப்படும் சந்தர்ப்பங்கள்

அ. தொடர்ந்து வருகின்ற சொற்களையும் துணை வாக்கியங்களையும் பொருள் விளங்கும் வண்ணம் தனித்தனியாகப் பிரித்துக்காட்டுவதற்குப் பயன்படும்.

- தாய்மொழி, கணிதம், விஞ்ஞானம், சமயம், ஆங்கிலம், வரலாறு ஆகிய ஆறு பாடங்களும் தரம் பதினொன்றுக்கு கட்டாயப் பாடங்களாகும்.
- உயர்ந்த நட்புக்கு குசேலனும் கண்ணனும், குகனும் இராமனும், கர்ணனும் துரியோதனனும் சிறந்த எடுத்துக்காட்டுகளாவர்.
- மாணாக்கர் தாம் கேட்ட பாடங்களை நாடோறும் படித்தும், தாம் கேட்ட பொருள்களைப் பற்றி பல தரம் சிந்தித்தும் ஆசிரியரை சந்தித்து அவற்றின் குறைதீரக் கேட்டும், சக மாணவர்களோடு பலமுறை பழகியும் தமது கல்வியை விருத்தி செய்ய வேண்டும்.

ஆ. வாக்கியத்தில் எழுவாய் நெடுந்தொடராய் இருப்பினும், பயனிலைக்குத் தொலைவில் இருப்பினும் அந்த எழுவாய்க்குப்பின்

- நேர்மாறாக இலக்கியத் தரம் வாய்ந்த கதைகள், கருப்பொருளுக்கும், பாத்திரப்படைப்புக்கும், பாத்திரங்களின் உளவியலுக்கும் அழுத்தம் கொடுப்பதைப் பார்க்கிறோம்.
- காகம், கண்டதைத் தின்னும் ஒரு பறவையானபோதும், தனது உடம்பை தூய்மையாக வைத்துக்கொள்கிறது.

இ. வாக்கியங்களிலே விளக்கத்திற்காக வரும் இடைப் பிறவைப்பைப் பிரித்துக் காட்டுவதற்குக் காற்புள்ளிகள் முன்னும் பின்னும் இடப்படும்.

- நாம் மக்களிடம், குறிப்பாக ஏழைகளிடம், இரக்கத்துடன் பழக வேண்டும்.

ஈ. பொருள் மயக்கம் தோன்றக்கூடிய இடங்களில் அம்மயக்கம் தோன்றாதவாறு தெளிவுபடுத்துவதற்குக் காற்புள்ளி இடப்படும்.

- கண்ணன், கர்ணனிடம் பாண்டவருக்காகத் தூது போயினான்.
- கமலன், சாந்தன் புத்தகத்தில் ஒரு பகுதியை வாசித்து முடித்துவிட்டான்.

உ. ஒருவரை அல்லது ஒன்றை விளித்துக் கூறுமிடத்து விளிப்பெயரை அடுத்து காற்புள்ளி இடப்படும்.

- மாளிக், நீ ஏன் இன்று அதனைக் கொண்டுவரவில்லை?
- கண்ணே, கலங்குவது ஏன்?
- ஓடி வா, தம்பி!

(விளிப்பெயர் வாக்கிய இறுதியில் வந்தால் அதற்கு முன்பு காற்புள்ளி ஏற்படும்.)

ஊ. இணைப்பு இடைச்சொற்களான ஆதலால், ஆகையால், ஆகவே, ஆயினும், இனி, எனினும், என்றாலும், எனவே போன்றவற்றின் பின்பும் காற்புள்ளி ஏற்படும்.

- விதியை அறியாமல் வேள்வியை இகழுகின்றாய். ஆதலால், பசு மகன் என்பதற்குப் பொருத்தம் உடையை.
- எண்ணங்களையும் கருத்துக்களையும் மற்றவருக்குப் புலப்படுத்துவதற்காக நாம் எழுதுகின்றோம். ஆகவே, எமது எழுத்துக்கள் எழுத்துப்பொறிமுறையை அனுசரித்து எழுதப்படல் வேண்டும்.
- இனி, ஆகவேண்டிய கருமங்களை கவனிப்போம்.

எ. தொடர்வாக்கியமொன்றில் உள்தொடர்கள் நீண்டிருந்தால் இவை பொருள் விளங்க காற்புள்ளி இட்டு பிரித்துக் காட்டப்படும்.

- கம்பர், வள்ளுவர் கண்ட வீர சிகரமான அமிர்தத்தாரையில் ஈடுபாடுற்று அந்த வீரதீர அமிர்தத்தாரையை ஒரு அட்சய பாத்திரத்தில் ஏந்தி எடுத்து, வெகு பக்குவம் செய்து, அந்த உண்மையை ஓர் அமிர்த சஞ்சீவியாக்கி இந்த உலகிற்கு வழங்கியிருக்கிறார்.

ஏ. பெயரடைகளும் வினையடைகளும் ஒன்றுக்குமேல் அடுக்கி வரும்போது கடைசியாக நிற்கும் அடை, தொடர்ந்த ஏனைய அடைகள், தொடர்ந்தும் காற்புள்ளியால் பிரித்துக் காட்டப்படும்.

- அவதானமாகக் கேட்டு, கிரகித்து, மனந்திருத்தி எழுதி வெளியிடுவதானது பயன்தரத்தக்க உளச்செயற்பாடாகும்.

ஐ. ஒருவரின் நேர்கூற்று வாக்கியங்களை அப்படியே எழுதும்போது கூற்றுக்கு முன் காற்புள்ளி இடப்படும்.

- சிறுமி, ''என்னை இவ் அடக்குமுறையிலிருந்து காப்பாற்றுபவர்கள் யாருமில்லையா?'' என அழுதாள்.

ஒ. ஆம், இல்லை என்ற சொற்களோடு வாக்கியம் ஆரம்பிக்கும்போது காற்புள்ளி இடவேண்டும்.

- ஆம், நான் பரிபூரண ஒத்துழைப்பை நல்குவேன்.
- இல்லை, என்னால் அதை ஏற்றுக்கொள்ள முடியாது.

ஓ. கடிதம் எழுதும்போது விளிப்புக்குப் பின்னும், ஒப்பமிட முன்னும் முகவரி எழுதும்போதும், பெயர் முகவரி ஆகியவற்றின் பின்பும் காற்புள்ளி இடப்படும்.

- அன்புள்ள துணைவி, என்றும் மறவாத,
- பணிப்பாளர் நாயகம்,
  தேசிய கல்வி நிறுவகம்,
  மகரகம.

ஔ. திகதி; தொடரின் பகுதிகளை காட்டுவதற்கு காற்புள்ளி இடப்படும்.

- *1999,மார்கழி 01.*

## 05. முக்காற்புள்ளி அல்லது விளக்கிசைக்குறி (:)

அ. பிரதான கூற்றுக்குப் பின்னே வரும் கூற்று, அதன் விளக்கமாக அமையுமிடத்து முக்காற்புள்ளி இடப்படும்.

- இப்பாடலில் ஆசிரியர் கூறும் கருத்துக்கள் விழுமியமிக்கவை:
அயலாரின் இரகசியங்களை கேட்கலாகாது பிறர் மீது தீய பழிச்சொற்களை கூறலாகாது என்பவையே அவை.
- நூலகம் கவனிப்பாரின்றிக் கிடக்கின்றது: நூல்கள் செல்லரித்து நாசமாகி விட்டன.

ஆ. ஒரு பட்டியலை அறிவிப்பதற்கு முன்வரும். அவையாவன, உதாரணமாக, வருமாறு என்பன போன்ற தொடர்களுக்குப் பின் முக்காற்புள்ளி இடப்படும்.

- அந்த அறையில் காணப்பட்டவை:
உடைந்த கதிரைகள், சிதைந்த மேசை, தூசு படிந்த கரும்பலகை என்பனவாகும்.
- வினைத்தொகைக்கு உதாரணங்கள்:
கடிநாய், சுடுநீர், கொள்கலன், ஏவுகணை என்பனவாகும்.

இ. பட்டியல் அடுத்தவரியில் வந்தால் முக்காற்புள்ளியின் பின் ஒரு கோடு வரையவேண்டும்.

- நோபல் பரிசு வழங்கப்படும் துறைகளாவன:-
இலக்கியம்
பொருளாதாரம்
மருத்துவம்

ஈ. நீளமான மேற்கோட்பகுதியொன்றை அறிமுகம் செய்வதற்கு முக்காற்புள்ளி இடப்படும்.

- பிரதம விரிவுரையாளராக வந்தவரை அறிமுகம் செய்து தலைவர் பின்வருமாறு கூறினார்:

''தங்கம் சிலவேளைகளில் புடம் போட்ட நிலையில் நமக்குக் கிடைத்துவிடுவது உண்டு. அதுபோலவே பல்கலைக்கழகத்தில் நீண்டகாலம் ஆய்வுகளை மேற்கொண்டு பட்டம் பெற்ற நிலையில் நம் மத்தியில் உரையாற்ற வந்துள்ள செல்வி மணிமொழி அவர்கள் இன்று ...... நான் உங்களுக்கும் அவருக்கும் இடையில் நந்தி போல் நிற்காமல் விலகிக் கொள்கிறேன். இனி அவர் உரையாற்றுவார்.

## 06. அரைப்புள்ளி அல்லது தொடரிசைக்குறி (;)

இக்குறியீடு பயன்படுத்தப்படும் சந்தர்ப்பங்கள்

அ. ஓர் எழுவாய் பல பயனிலைகள் கொண்டமையும்போது ஒவ்வொரு பயனிலையின் பின்னும் இக்குறியீடு பயன்படுத்தப்படுகிறது.

- இராமன் கைகேயியின் கட்டளையை தலைமேற்கொண்டான்; காடேகினான்; வனவாசம் மேற்கொண்டான்; மனைவியை இழந்தான்; இராவணனோடு சமர் செய்தான்; மனைவியை மீட்டான்.

ஆ. உட்டொடர்களை இணைப்பதற்கு அரைப்புள்ளி பயன்படுகிறது.
சமரசம் உலாவும் மயானத்துக்கு ஆவி போனபின் ஆண்டியும் வருகிறான்; அரசனும் வருகிறான்; அசடனும் வருகிறான்.

## 07. சிறுகோடு அல்லது விட்டிசைக்குறி (-)

அ. உயிர்த்துடிப்பும் நாடக நயமும் தோன்ற எழுதும்போது காற்புள்ளி அல்லது அரைப்புள்ளி வரவேண்டிய இடத்தில் விட்டிசைக்குறி பயன்படுத்தப்படுகிறது.

- தீக்குளிப்பு நேரமும் நெருங்கியது; எல்லோரது பார்வையும் கோயிலின் வெளிப்பிரகாரத்தில் நிலைத்திருந்தது; ஆலய மணி அடித்தது; அரோகராச் சத்தம் வானைப் பிளந்தது; பக்த கோடிகள் ஆலய முன்றலில் திரண்டனர் - ஒரே அமர்க்களமாக இருந்தது.

ஆ. திடீரெனகருத்துமாற்றத்தைக்காட்டுவதற்குவிட்டிசைக்குறிபயன்படுத்தப்படுகிறது.

- கள்ளமறியாது துள்ளித்திரிந்த எங்களது பள்ளிக்காலம் தான் எவ்வளவு பசுமையானது - என்று எங்களுக்குச் சொல்லிக் காட்டப்படுகிறது.

இ. வேறு வேறாகக் கூறப்பட்ட பொருள்களை தொகுத்துக் கூறுவதற்கு விட்டிசைக் குறி பயன்படுத்தப்படுகிறது.

- பௌத்தர், இந்துக்கள், கிறிஸ்தவர், இஸ்லாமியர் - எல்லோரும் அந்த விழாவில் கலந்து கொண்டனர்.

ஈ. நேரிசை வெண்பாவின் இரண்டாம் அடியின் இறுதிச் சீர் இக்குறியால் குறிக்கப்படும். சிந்துப்பாடலில் முதலாம் அடியின் இறுதிச்சீரும், மூன்றாம் அடியின் இறுதிச்சீரும் இக்குறியால் பிரிக்கப்படும்.

- குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
  மஞ்ச ளழகும் அழகல்ல - நெஞ்சத்து
  நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையால்
  கல்வி யழகே அழகு

- அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் - அதை
  ஆங்கோர் காட்டிலோர் பொந்திடை வைத்தேன்;
  வெந்து தணிந்தது காடு - தழல்
  வீரத்திற் குஞ்சென்று மூப்பென்று முண்டோ?

உ. சொற்கள் சுருக்கப்படும்போது இக்குறி பயன்படுத்தப்படும்.

- உ - ம் : உதாரணம் எ - டு : எடுத்துக்காட்டு

### 08. தனி நிலைத் தொடர்குறி (- ........... -)

இரண்டு விட்டிசைக்குறிகள் கொண்ட இக்குறியின் பயன்பாடுகள்.

அ. தயங்கித் தயங்கிப் பேசுவதைக் காட்டல்.

1. நான் இங்கே வந்தது - என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் - உங்களால் எனக்கொரு கருமம் ஆகவேண்டி இருக்கின்றது.

ஆ. உணர்ச்சிக் குழப்பத்தைக் காட்டுவதற்கு.

1. எனக்கு வந்த கோபத்தில் - என்னசெய்வதென்று கூடப்பாராது அவன் கன்னத்தில் அறைந்துவிட்டேன்.

### 9. அடைப்புக்குறி ( )

சான்றாதாரம், வரைவிலக்கணம், விளக்கம்,மாட்டேற்றுக்குறிப்பு, மொழிப்பெயர்ப்பு போன்றவற்றைக் காட்டுவதற்கு.

- செங்கயல் பழனம் எங்கும் திருமகள் உறையும் எங்கும் (சேக்கிழார் பெரியபுராணம் திருநாட்டுச் நிறப்பு செய் - 30)
- கட்டுரை ( ஒரு பொருள் பற்றி சிந்தித்து, கருத்துக்களை விரித்து எழுதுவது )
- கல்யாணசுந்தரமுதலியார் (வி.க.)
- மின் பிறப்பாக்கி (Transformer)

### 10. மேற்கோட்குறி அல்லது அனுவாதகுறி (‘‘ ’’)

அ. ஒருவருடைய கூற்றை அப்படியே மேற்கொண்டு எடுத்தாளும்போது மேற்கோட்குறி பயன்படும்.

- ‘‘பெண்டிர் தமையுடையிர்! பெண்பாவமன்றோ? பெரியவசை கொள்வீரோ’’

ஆ. புத்தகம், சஞ்சிகை, கட்டுரை முதலியவற்றை பெயர் சுட்டிக் குறிப்பிடப் பயன்படும்.

- பார்த்தசாரதி அவர்கள் எழுதிய ''பொன்விலங்கு'' என்ற நாவல் கற்பவரைக் கவர வல்லது.

குறிப்பு : இரட்டை மேற்கோட்குறி இடுவது ''......'' அமெரிக்க முறையாகும்.

ஒற்றை மேற்கோட்குறி இடுவது'......' பிரித்தானிய முறையாகும்.

தமிழில் இரட்டை மேற்கோட்குறிக்குள் மேலும் ஓர் நேர் கூற்று வருமானால் அதனைக் காட்ட ஒற்றை மேற்கோட்குறி பயன்படுகிறது.

''இக்கவிதை சிந்தனைக்கு விருந்தளிக்கும் புதுமையான அணிகளில் நமது அழகியற் கலை நயப்பை ஆழமுறச் செய்கிறது. 'சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொற்புதிது, சோதி மிக்க கவிதை' எனப் பாரதி கவிதைக்கு விமர்சனம் செய்திருப்பதை கவனியுங்கள்.'' என்றார் பேச்சாளர்.

## பிரதேச வழக்குச் சொற்கள்

ஒரு மொழியில் எப்போதும் பேச்சுமொழி, எழுத்துமொழி ஆகிய இரண்டு வடிவங்களும் வழக்கில் உள்ளன.

மக்கள் அன்றாடத் தொடர்பாடல்களின்போது பேச்சுமொழியைக் கையாளுகின்றனர். அவை உயிர்ப்புடையனவாகவும் மக்களின் பண்பாட்டு அம்சங்களை வெளிப்படுத்துவனவாகவும் உள்ளன.

பேச்சுமொழி இரண்டு வகைப்படும்.

1. பிரதேச வழக்கு / பிரதேசக் கிளைமொழி

2. சமூக வழக்கு / சமூகக் கிளைமொழி

பிரதேச வழக்கு என்பது குறித்த பிரதேசத்திற்குரிய தனித்துவமான சொல்வழக்குகளைக் கொண்டிருப்பது ஆகும்.
உதாரணம் : குச்சொழுங்கை, பேந்து, விதானை, கிறுகி, உமல், லயம்

சமூக வழக்கு என்பது குறித்த பிரதேச மக்களின் தொழிலை அடிப்படையாகக் கொண்ட சொல்வழக்குகளைக் கொண்டிருப்பது ஆகும்.
உதாரணம் : நடையன், குல்லம், மண்டா,

பின்வரும் உரைப்பகுதிகளை வாசியுங்கள். அவற்றில் வந்துள்ள பிரதேச வழக்குச் சொற்களைக் குறித்துக் கொள்ளுங்கள்.

*(1) ''வம்மிமரத்துக்கு மேலயோ, தேங்குழல் கடைமேலயோ, சண்முகநாதன் ஸ்ரோருக்கு மேலயோ, உள்ள படத்தட்டிகள, எட்டியும் அண்ணாந்தும் பார்த்துக்கொண்டேயிருப்பாள் குலத்தழகி. பசைவாளியும் படத்தாளுமாகத் தியேர்ட்டர் காரன் வந்து போயிற்றானெண்டா, இவள் புண்ணுல புழுப் பட்டாப்போலநெளியத்தொடங்கிருவாள். விற்கக்கொண்டுவந்தசாமானுகளபுணத்த மூடினாப்போலச் சாக்கால மூடிவைச்சிற்று, மெல்ல மெல்ல நழுவிக் காணாமற் போயிற்றாளெண்டா அதுக்குப்புறகு அவள வெலிங்டன் தியேட்டருக்குள்ளயோ, அல்லது சாரதா தியேட்டருக்குள்ளயோதான் பார்க்கேலும். இவள் இப்பிடிக் களவுல படம் பார்க்கப்போறது புருசன் கறுவலுக்கு இண்டுவரைக்கும் தெரியாது. இதப்பற்றி அவளும்கூடக் கவலைப்பட்டதாகவேயில்ல. ஆனா இவளப்பத்தின கவலையெல்லாம் மைலிப்பெத்தாவுக்கும் வெள்ளும்மாவுக்கும்தான்.''*
*('கசகறணம்' - விமல் குழந்தைவேல்)*

*(2) ''இந்தா பாருங்க சிலுவைய்யா.. என்மேலே சந்தேகமா? நேத்து பெரியவரே என்கிட்ட சொன்னாரு.. மணலு செங்கல்லு எல்லாமா மெயின் ரோட்டு ஓரத்திலேயே குமிஞ்சுக் கெடக்கு. அதையெல்லாம் மேலே தூக்கி கொண்டு வந்து தலத்தில சேர்க்கணும். அப்புறம் அஸ்திவாரம் கட்டியிருக்கிற தளத்துக்கெல்லாம் மண்ண கொட்டி கெட்டியாக்கணும். சுத்த காடா இருக்கிற செடி கொடி எல்லாம் வெட்டியாகணும் இதுக்கெல்லாம் ஆட்கள் தேவை. அவுங்கள வச்சே.. மேசன் மார்களுக்கு சிமிந்தி குழைச்சிக் கொடுக்கவும், செங்கல் தூக்கிக் கொடுக்கவும் வச்சிக் கிட்டா.. நல்லம். புதுசு புதுசா ஆட்களை தேட வேண்டிய சிரமம் இருக்காதுன்னு சொல்லவும்தானே...''*
*('மண்ணோடு கலந்தவன்' - மல்லிகை சி. குமார்)*

*(3) ''வெள்ளையா ...... விலகு நான் பாக்கிறன்...... என்ன புத்துக்கை விழுந்திட்டுதே...... கொஞ்சம் விலகு வெள்ளையா! விலகவே மனமில்லாது நிற்கும் நாயைப் பலாத்காரமாக விலக்கிவிட்டுத் தமது கையிலுள்ள கத்தியினால் பற்றைகளை வெட்டி வழிசெய்து கொண்டு புற்றை நெருங்குகிறார் தம்பர். ''இது என்னடாப்பா...... இடைஞ்சலாய் கிடக்குது...... மம்பெட்டியாலை கூட வெட்டேலா போல கிடக்கு...... வெள்ளையா...... தம்பி...... வாடா...... வந்து விட்டு வீசாடியா நிண்டு பார்...... என்னாலை வெட்டேலா...... புத்துக்கை கிடக்குதுபோல...... வந்து பாரடி ராசா......'' ('வேட்டை' - நந்தினி சேவியர்)*

### வடக்குப் பிரதேச வழக்கு

ஆறுதலா - மெதுவாக
இயத்து, ஏதனம் - சமையற்பாத்திரங்கள்
எப்பன், ஓரெப்பன் - சிறிதளவு
கனக்க - நிறைய
கெதியா - விரைவாக
பேந்து, பிறகு - பின்பு
புழுகம் - மகிழ்ச்சி
முடக்கு - பாதைத்திருப்பம்
மோன் - மகன்
மோள் - மகள்
விறாந்தை - முன்கூடம்
வெள்ளாமை - வேளாண்மை

### கிழக்குப் பிரதேச வழக்கு

அத்தாங்கு - மீன் பிடிக்கும் கைவலை
அணியம் - தோணியின் முன்பக்கம் / துடுப்பு வலிப்பவர் இருக்கும் இடம்
அலவாய்க்கரை- கடற்கரையோரம்
ஆனம் - சொதி, குழம்பு
ஏனம் - பாத்திரம்
ஒண்ணா - முடியாது
ஒள்ளுப்பம் - எள்ளிலும் சிறியது
கக்கிசம் - தொல்லை
கடப்படி - வாசல்
களவட்டி - சூடுபோடுந்தளம்
கெறுவம் - கர்வம்
சங்கை - ரோசம்
சார் - ஏர் செல்லும் வழி
சிறாம்பு - பரண்
சும்மாடு - சுமை தூக்க தலையில் வைக்கும் அடை
சோங்கன் - சோம்பேறித்தனம்
தலைமுறி - வாய்க்கால் பிரிந்து செல்லும் வயற்பரப்பு
துறைக்காரன் - படகோட்டுபவன்
மண்டா - மீன்குத்தும் தடி
வெள்ளோடன் - தேங்காய்
வேலைக்காரன் கம்பு - சூடுபோடும் வைக்கோலைஇழுக்கும் கொழுத்தடி

**மலையக பிரதேச வழக்கு**

எலை - இலை
பொழப்பு - பிழைப்பு
வெரசா - விரைவாக
ஸ்ரோர் - தொழிற்சாலை

**பயிற்சி**

1. பின்வரும் சமூகக் கிளைமொழிகளின் பொருளை ஆசிரியரின் உதவியுடன் எழுதுங்கள்

   நடையன், உப்பட்டி, குல்லம், கேட்டி, பொலிக்கொடி, கோல், மண்டா, அம்மாறு, அட்டாளை, அணியம்

2. பின்வரும் பகுதியை உங்கள் பிரதேச பேச்சுமொழிக்கு மாற்றி எழுதுங்கள்.

   ''என்மேல் அனுதாபங் காட்டிய பெரியோரே! பிள்ளைகளைப் பெற்ற தகப்பன்மாரே! இன்று நான் எனது ஏழைச் சகோதரியின் நிமித்தமாக எவ்வளவு ஆக்கினைக்கும் நிந்தனைக்கும் ஆளானேனென்பது உங்களுக்குத் தெரியும். நீங்கள் எனக்குச் செய்த உபகாரத்திற்கு நான் என்ன பதில் உபகாரம் செய்யப்போகிறேனென்று எனக்குத் தெரியவில்லை. எனக்கு நீங்கள் செய்த உபகாரம் கல்லின்மேல் எழுத்துக்குச் சமமானதாய் என் நெஞ்சில் வரையப்பட்டிருக்கும்.'' (நொறுங்குண்ட இருதயம் - மங்களநாயகம் தம்பையா)

**குழுச்செயற்பாடு**

உங்கள் பிரதேசத்தின் தனித்துவமான பிரதேச வழக்குச் சொற்களை இனங்கண்டு சேகரித்துப் பட்டியற்படுத்துங்கள். அவற்றுக்குப் பொருத்தமான பொதுவழக்குச் சொற்களை எழுதுங்கள்.

# 3 ஈழநாட்டுப் புலவர்

ஈழநாட்டுப் புலவர்களைப் பற்றிக் கேட்டால், அரசகேசரியிலிருந்து தொடங்குவது தான் வழக்கம். நான் அந்த வழக்கத்தைக் கைக்கொள்ள விரும்பவில்லை. அரசகேசரி யாழ்ப்பாணத்து நல்லூரிலிருந்து அரசு செய்த பரராச சேகர மகாராசாவின் மருகர்; வடமொழியிற் காளிதாச மகாகவி இயற்றிய இரகுவமிசத்தைத் தமிழிற் பெயர்த்துப் பாடியிருக்கின்றார். பாடல்கள் வெகு கடினமானவை. பண்டிதர்களையே மலைக்கச் செய்பவை. அரசகேசரி ஒரு மகா வித்துவான். கோப்பாயிலிருந்தவர் சபாபதி நாவலர். அவரியற்றிய திராவிடப் பிரகாசிகை, வசன நூலேயாயினும் இரகுவமிசம் போல மிகக் கடினமானது. சபாபதி நாவலரும் அரசகேசரிபோலவே ஒரு மகா வித்துவான். இந்தப் பெரிய மகாவித்துவான்களைப் புலவர் வரிசையில் எடுத்துச் சொல்ல நான் விரும்பவில்லை. கவித்துவ சாமர்த்தியம் வாய்ந்தவர்களாய் இனித்த கவிகள் செய்தவர்களையே புலவர் வரிசையில் வைத்துக்கொள்ள விரும்புகிறேன். வித்துவான்களைப் பற்றிச் சொல்லுதற்கு வேறொரு வித்துவ வரிசையை வைத்துக்கொள்ளலாம்.

நீர்வேலியில் வாழ்ந்தவர் சங்கர பண்டிதர். அவருக்கு முன்னமே திருநெல்வேலியில் உள்ளவர் ஞானப் பிரகாச முனிவர். இவர்கள் தமிழிலேயன்றிச் சமஸ்கிருதத்திலும் மகா மேதைகள். தருக்கக் கோடரிகள். இவர்களையும் இவர்கள் வழியைப் பின்பற்றியவர்களையுஞ் சொல்லுதற்குப் பண்டிதர்கள் என்று மற்றொரு வரிசையை எடுத்துக் கொள்ளலாம். வித்துவ சிரோமணி பொன்னம்பல பிள்ளை நாவலரின் மருகர்; இலக்கிய இரசனையில் ஈடும் எடுப்பும் இல்லாதவர். அவர் இலக்கிய இரசத்தைச் சொட்டிக் கொண்டிருந்தார் என்று சொல்லுதல் தகாது. தாரை தாரையாகப் பொழிந்துகொண்டிருந்தார் என்றே சொல்ல வேண்டும். உரைநயம் சொல்லுகின்ற உரையாசிரியர்கள் வகுப்பிலேதான் அவரையும் அவர் வழிவந்தவர்களையும் வைத்துச் சொல்லலாம். சமீபத்தில் வாழ்ந்து போன மகாலிங்க சிவம் கற்பனா சக்திக்கு ஊற்றான ஓர் இனித்த உபநியாசகர். அவரைப்பற்றிச் சொல்லுதற்கு அவருக்கு என்று ஒரு தனித்த இடம் வேண்டும். சுவாமி விபுலாநந்தர் கவித்துவம் வாய்ந்த இனிய புலவரேயாயினும், அவருடைய விசேட ஆற்றல்கள் பற்றி அவருக்கு வேறு இடங் கொடுக்க வேண்டும். தெல்லிப்பழை வித்துவான் சிவானந்தையரின் கூரிய விவேகம், புலோலிக் கதிரைவேற்பிள்ளையின் மகா திறமை தனித்தனிப் பெருமைக்கு உரியவை. இன்னும் எத்தனையோ மதிநுட்பம் வாய்ந்தவர்கள் - தமிழ்ப்பணி செய்தவர்கள் இருக்கின்றார்கள். ஆறுமுக நாவலரின் தனிப்பெருமை பிரசித்தமானது.

இங்கே பெயர் குறித்துச் சொன்னவர்களும், குறிப்பிடாமல் உணர வைத்தவர்களும் ஆகிய எல்லாரும் ஈழமண்டலத்தின் அறிவுக் கண்கள். தவப்புதல்வர்கள். இவர்கள் ஒவ்வொருவரையும் தமிழ் மாணாக்கர் தெரிந்திருத்தல் வேண்டும்.

புலவர்கள் என்றால் அறிஞர்கள் என்று கருத்துச் சொல்லலாம். அக்கருத்தில் இவர்கள் எல்லாம் புலவர்களே. ஆனால் புலவர் என்ற சொல்லை அக்கருத்தில் உபயோகிக்கவில்லையென்று முன்னமே குறிப்பிட்டிருக்கிறேன். பாட்டுப் பாடுகிறவர்களைப் புலவர் என்று வழங்குவதை வழக்கிலே காணலாம். திரைப்படப் பாடல்கள் போன்ற நன்மை தீமை விசாரியாத வசீகரமான பாடல்கள் பண்ணுகிறவர்களையும் சாதாரணமான உலகம் புலவர்கள் என்கின்றது. அக்கருத்திலும் அச்சொல்லை உபயோகிக்க விரும்பவில்லை. நல்லறிஞர்களாய் நன்மைக்குப் பாதகம் இல்லாத இனிய கவிகள் புனைபவர்களையே புலவர்கள் என்று இங்கே எடுத்துக்காட்ட முயலுகின்றேன். தமிழ் அறிஞர்களின் பெயர்களை நாம் மறந்துவிடுதல் கூடாது. இப்பெயர்களை மனத்தில் இருத்திக் கொண்டாற் பிறகு வளர வளரப் பெரிய பயன் உண்டாகும். இவ்வளவில் நிறுத்தி இனிப் புலவர்களிடஞ் செல்லுவோம்.

ஈழமண்டலத்திலே நல்ல பேரறிஞராய்க் கவித்துவ சாமர்த்தியத்தில் தலை சிறந்தவர் சின்னத்தம்பிப் புலவர். இவர் காலத்தினாலும் முற்பட்டவர். இவருக்கு அடுத்தபடியில் வைத்து எண்ணுதற்குரிய புலவர் முத்துக்குமார கவிராசசேகரர். இவர் தமிழைப் பாதுகாத்த சி. வை. தாமோதரம்பிள்ளையின் உபாத்தியாயர், தமிழ் வளர்த்த சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவரின் பாட்டனார். முத்துகுமார கவிராச சேகருக்கு அடுத்தபடியில் சொல்லக்கூடியவர் இருபாலைச் சேனாதிராய முதலியார். இவர் ஆறுமுக நாவலரின் உபாத்தியாயர். அடுத்து, உடுப்பிட்டிச் சிவசம்புப் புலவர் வரத்தக்கவர். இந்த வரிசை இன்னும் வளரலாம். கத்தரித்தோட்டத்து வெருளியும், ஆடிப் பிறப்புக் கொழுக்கட்டையும் இன்றைக்குங் குழந்தைகள் வாயிலே தவழுகின்றன. இனிக்கின்றன. அதிரவரு மாணிக்க கங்கையையும் வண்ணானின் மொழிகேட்டு வனம்விடுத்த சீதையை, இந்நாளுந்தேடுகின்ற குரங்குகளையும் வட தேசத்து முதிர்ந்த அறிஞர்களும் புகழ்கின்றார்கள். இவைகளைப் பாடிய நவாலியூர் திரு. சோமசுந்தரப்புலவர் சில நாள்களுக்கு முன்பும் நமது மத்தியிற் பாடிக் கொண்டிருந்தவர். புலவர் பரம்பரையை இவ்வளவில் நிறுத்தி, இன்னும் இந்தப் பரம்பரை முளைகொள்ள வேண்டுமென்று ஒரு வாழ்த்துச் சொல்லிவிட்டு, முதலில் வைத்துப் பேசிய சின்னத் தம்பிப்புலவரிடம் போவோம்.


சி.வை. தாமோதரம்பிள்ளை


சின்னதம்பிப் புலவர்

சின்னத்தம்பிப் புலவரின் தந்தையார் ஒரு வித்துவான்; பெயர் வில்லவராய முதலியார்; பரராச சேகரனின் வமிசத்தில் உள்ளவர்; ஒல்லாந்தர் காலத்திலிருந்தவர். ஒல்லாந்த அரசாங் கத்தில் உத்தியோகமும் வகித்தவர். இக்காரணங்களினாலே வில்லவராய முதலியார் பெருஞ் செல்வாக்குடன் வாழ்ந்து வந்தார். முதலியாரின் செல்வாக்குக்குத் தக்கவாறு புதல்வராகிய சின்னத்தம்பியார் இளமையில் நடந்து கொள்ளவில்லை. படிப்பிலே கருத்துச் செலுத்தாமல் முழுக் கருத்தையும் விளையாட்டிலேயே செலவு செய்தார். இது முதலியாருக்குப் பெரிய மனவருத்தம். உத்தியோக முயற்சியினால் புதல்வர் மேற் கருத்துவைக்க முடியவில்லை. புதல்வனார் முதலியார் கண்ணிற்படாமல் விளையாட்டிற் காலங்கழித்து வந்தார். தாயாரின் இணக்கமும் இவருக்கு உண்டு. வயது ஏழு ஆயிற்று. ஒருநாள் வடதேசத்து வித்துவா னொருவர், வில்லவராய முதலியார் வீட்டை விசாரித்துக் கொண்டு வந்தார். தெருவிலே சிறுவர்கள் விளையாடிக் கொண்டு நின்றார்கள். இலக்கணத் தமிழிலே ''முதலியார் வீடு யாதோ?'' என்று வடதேசத்து வித்துவான் சிறுவர்களை வினாவினார். ஒரு சிறுவன் தலைநிமிர்ந்து விளையாட்டாக,

**''பொன்பூச் சொரியும் பொலிந்தசெழுந் தாதிறைக்கும்**
**நன்பூ தலத்தோர்க்கு நன்னிழலாம் - மின்பிரபை**
**வீசுபுகழ் நல்லூரான் வில்லவரா யன்கனக**
**வாசலிடைக் கொன்றை மரம்''**

என்று ஒரு பாட்டால் விடை சொன்னான். 'வில்லவராய முதலியாருடைய வீட்டு வாசலிலே ஒரு கொன்றை மரம், அவ்வாசலைத் தங்கமயமாக்கிக் கொண்டு நல்ல நிழலைச் செய்து நிற்கின்றது' என்பது பாட்டின் கருத்து.

வந்த வித்துவான் திகைத்துப்போனார். பாடலைப் பாடஞ் செய்து கொண்டே, முதலியாரிடம் போய் இந்த வியப்பைச் சொன்னார். முதலியாரின் மனைவியார் அப்பாடல் பாடியது தம் மகனாய்த்தானிருத்தல் வேண்டுமென்று கூறி 'ஈன்ற பொழுதிற் பெரிது உவந்தார்'. முதலியாரோ ''போ போ உன் மகனாவது வெண்பாப் பாடுகிறதாவது யாரோ பாடிவைத்த பழம் பாடலை வேறு யாரோ சிறுவன் படித்துக்காட்டியிருப்பான்'' என்று மழுப்பிவிட்டார். மகனுடைய படிப்பிற் கருத்து வைப்பதில்லை என்று மனைவியார் மீது முதலியாருக்குச் சிறு கோபமும் உண்டு என்றாலும் 'குல வித்தை கல்லாமலும் வரலாமே' என்ற ஒரு கருத்தும் உள்ளுக்குள்ளே முதலியாருக்கு இருந்தது. வெளிக்காட்டவில்லை.

சில வருடங்கள் கழிந்தன. ஒரு நாள் முதலியார் கல்வளை என்ற தலத்தில் எழுந்தருளிய விநாயகப் பெருமான் மீது ஒரு யமக அந்தாதி பாடவெண்ணி, முதலில் காப்புச் செய்யுள் பாடத்தொடங்கினார். காப்புச் செய்யுளில் முதல் இரண்டு அடி எழுதிவிட்டார். அப்பால் ஓடவில்லை. பாட்டைப் பூர்த்தி செய்யாமலே ஏட்டையும் எழுத்தாணியையும் இறப்பிற் சொருகிவிட்டு, முதலியார் வெளியிலே உலாவப் போய் விட்டார்.

சமயம் பார்த்துப் போசனஞ் செய்ய வருகின்ற சின்னத்தம்பியார், தாயாரிடம் வந்து போசனஞ் செய்துவிட்டுச் சற்றே புகையிலை வாய்க்குள் இட்டுக் கொள்ளும் பொருட்டு தந்தையார் புகையிலை சொருகிற இறப்பைப் பரிசோதனை செய்து கொண்டு வந்தார். புகையிலைக்கு முன் ஏடும் எழுத்தாணியும் எதிர்ப்பட்டன. ஏட்டை எடுத்துப் பார்த்தார். பாட்டொன்று பூர்த்தியாகாமல் இரண்டு அடி மாத்திரம் எழுதப்பட்டிருந்தது. உடனே மற்றைய இரண்டு அடியையும் பாடிப் பூர்த்தி செய்து பழையபடி சொருகிவிட்டுச் சின்னத்தம்பியார் போய் விட்டார். சம்பவம் யாருக்கும் தெரியாது. உலாவப்போன முதலியார் மற்றை இரண்டு அடிகளையும் ஆயத்தம் செய்துகொண்டு சற்று வேகமாக வந்தார். ஏட்டை எடுத்தார் பாட்டுப் பூர்த்தியாயிருந்தது. தாம் நினைத்துக் கொண்டுவந்த அடிகளிலும், பூர்த்தியாயிருந்த அடிகள் மிக நன்றாயிருந்தன. அது தமது அருமை மகனுடைய வேலையாய்த்தானிருக்கும் என்று முதலியாருக்குப் பெருமகிழ்ச்சி. ஆயினும் அதனை நிச்சயம் செய்யும் பொருட்டு சின்னத் தம்பி இந்தப் பக்கம் வந்தானா? என்ற தாழ்ந்த அன்புக்குரலில் மனைவியாரைக் கேட்டார்.

மனைவியார் புகையிலை எடுத்ததற்கு மகனைத் தண்டிப்பார் போலும் என்றெண்ணி 'கண்டதார் கேட்டதார்' என்று மறுத்து விட்டார். முதலியாருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை, நடந்ததைச் சொல்லி ஏட்டையுங்காட்டி ''அவன் இந்தப்பக்கம் வந்திருத்தல் வேண்டும். ஒளியாமற் சொல்'' என்று வேண்டினார். காரியத்தை அறிந்ததும் ''ஓம் ஓம்'' என்று மனைவியார் கூத்தாடினார். முதலியார் கண்ணீர்விட்டு அழுதுவிட்டார். அது ஆனந்த அழுகை. இருவருந் தெருவுக்குப் புறப்பட்டார்கள். சின்னத்தம்பியார் வழக்கம்போல் ஓடி மறையவில்லை. ''புலவர் சிகாமணியே வாடா கண்ணா'' என்று இருவருங் கட்டித்தழுவி முத்தமிட்டார்கள். முதலியார் ஏட்டையும் எழுத்தாணியையும் சின்னத்தம்பிப் புலவர் கையில் ஒப்பித்து ''நீயே நூலைப் பூர்த்தி செய்'' யென்று வேண்டிக் கொண்டார். சின்னத்தம்பிப்புலவர் தந்தையார் வேண்டுதலைச் சிரமேற் கொண்டு இன்னும் ஒரு காப்புச் செய்யுள் பாடி இரு காப்புக்களுடன் கல்வளை யமக அந்தாதி என்னும் அந்தப் பிரபந்தத்தைப் பாடி முடித்தார். அதன் பிறகு பாடிய பிரபந்தம் மறைசையந்தாதி. ஈழமண்டலப் பாடல்களுள்ளே வடதேச வித்துவான்களெல்லாம் மனமொத்து மதிக்கும் பிரபந்தம் அது. அதனைப் பதினைந்து வயதிற் பாடினார் என்று சொல்லுகிறார்கள். கரவை வேலன் கோவை என்ற பிரபந்தமும் இவர் பாடியதென்று சொல்லப்படுகின்றது.

**பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை.**
**(இலக்கிய வழி)**

**பயிற்சி**

1. ஈழநாட்டுப் புலவர் வரிசையில் சேர்க்கப்பட முடியாதவர்களாக பண்டிதமணி குறிப்பிடுவோரது பெயர்களைத் தருக. அவர்களை அவ்வாறு சேர்க்க இயலாமைக்காக அவர் கூறும் காரணங்கள் யாவை?
2. புலவர்கள் என்பதற்கு பண்டிதமணி வழங்கும் வரைமுறை யாது?
3. இங்கு குறிப்பிடப்படும் புலவர்களின் பெயர்களைத் தருக.
4. வில்வராய முதலியார் வாழ்ந்த காலப் பின்னணி எத்தகையது?
5. சின்னத் தம்பிப் புலவரால் பாடப்பட்ட பிரபந்தங்கள் எவை?
6. சின்னத் தம்பிப் புலவர் தமது கவியாற்றலை வெளிப்படுத்திய சந்தர்ப்பங்கள் பற்றி எழுதுக.
7. சின்னத் தம்பிப் புலவரின் தாய் தந்தையரைப் பற்றிய உங்கள் மனப் பதிவினை எழுதுக.

## கடிதம்

தரம் 10 இல் கடிதம் எழுதுதல் பற்றி விளக்கமாகத் தரப்பட்டுள்ளது. மேலும் சில பயிற்சிகள் இங்கு தரப்படுகின்றன. கடிதம் அதன் அமைப்பின் அடிப்படையில் இரண்டு வகைப்படும்.

1. உறவுமுறைக் கடிதம்
2. தொழில்முறைக் கடிதம்

உறவுமுறைக் கடிதம் ஒன்றில் அமையவேண்டிய உறுப்புக்கள்

- முகவரி
- விளிப்பு
- உடல் / விடயம்
- முடிப்பு
- பெயர் / உறவுப் பெயர்

தொழில்முறைக் கடிதம் ஒன்றில் அமையவேண்டிய உறுப்புக்கள்

- முகவரி
- உள்முகவரி
- விளிப்பு
- தலைப்பு
- உடல் / விடயம்
- நன்றி
- முடிப்பு
- ஒப்பம்

**பயிற்சி**

1. நீர் மேற்கொண்ட கல்விச் சுற்றுலா உமக்கு புதிய தகவல்களையும் புதிய அனுபவங்களையும் தந்தமையைக் குறிப்பிட்டு வெளியூரில் இருக்கும் உமது நண்பருக்கு ஒரு கடிதம் எழுதுக.

2. மனிதனின் ஆரோக்கிய வாழ்வுக்கு சுற்றுச்சூழல் தூய்மை இன்றியமையாதது என்பதனை வலியுறுத்தி, உமது சூழலில் நீர் அவதானித்த சீரின்மையைச் சபைச் செயலாளருக்கு எழுதுக.

# அறிக்கை எழுதுதல்

நடைமுறைத் தேவைகளுக்காக எழுதும் விடயங்களுள் அறிக்கை எழுதுவதும் முக்கியமான தொன்றாகும். மாணவரின் பாடசாலை வாழ்க்கையிலும் பிற்கால வாழ்க்கையிலும் அறிக்கைகள் எழுதுவதற்குப் பல சந்தர்ப்பங்கள் ஏற்படலாம். மாணவர் புதிதாக வாசித்த ஒரு புத்தகத்தைப் பற்றி அறிக்கை எழுதி வகுப்பிலே வாசிக்குமாறு கேட்கப்படலாம். இது நூலக வாசிப்பினை ஊக்குவிப்பதற்கான ஒரு சிறந்த முறையாகும். அதுபோல இலக்கியமன்றங்களின் கூட்ட அறிக்கை, ஆண்டறிக்கை போன்றவற்றை எழுதுவதற்கும் சந்தர்ப்பங்கள் ஏற்படும். பிற்காலத்தில் அரசாங்கத் துறையிலேயும் தனியார் துறையிலேயும் நிருவாகப் பதவிகள் வகிக்கும்போது குறிபிட்ட சில பிரச்சினைகள், சூழ்நிலைகள், வாய்ப்பு வசதிகள் போன்றவற்றை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம். ஆதலால் பாடசாலையிற் கல்வி பயிலும் காலத்திலே மாணவர் முறையாக அறிக்கை எழுதுவதிற் பயிற்சி பெறுதல் வேண்டும். எல்லா வகையான அறிக்கைகளுக்கும் தகவல்கள் திரட்டுவது முதற்படியாகும்.

**தகவல் திரட்டும் வழிமுறைகள்**

★ வாசித்தல்
★ உசாவுதல்
★ செவிமடுத்தல்
★ செவ்வி காணல்
★ அவதானித்தல்

தகவல் திரட்டும்போது நினைவிலே இருத்த வேண்டிய கருத்துகள் பல தோன்றும். அவை எல்லாவற்றையும் அப்படியே நினைவில் வைத்திருத்தல் எளிதன்று. அக்கருத்துகளை நினைவுகூர்ந்து பின்னர் பயன்படுத்துவதற்கு வசதியாக குறிப்பு எழுதுவது மாணவருக்குப் பயனுள்ள ஒரு பயிற்சியாகும். பின்வரும் முறையிலே குறிப்பை எழுதிப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

**குறிப்பு எழுதும் முறை**

பந்திகளின் மையக் கருத்தையும் அதற்கு ஆதாரமான துணைக் கருத்துக்களையும் தெரிந்து, அவற்றைச் சுருக்கமான வாக்கியங்களில் எழுதுதல்.

**ஒரு பந்தியின் கருத்துக்களை நினைவுகூர்வதற்குத் துணையான முக்கிய சொற்களைக் குறித்துக்கொள்ளுதல்**

சொற்களுக்கிடையே கீறிட்டுத் தொடர்ந்து எழுதுவதால் இத் தனிச் சொற்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு முழுக் கருத்தைக் குறித்து நிற்பன என்பது உணர்த்தப்படும்.

**சட்டகம் வரைதல்**

எழுதிய குறிப்புக்கள் சில நாள்களுக்குப் பின்பு மறதி காரணமாகப் பொருளற்ற சொற்கூட்டங்களாய் விடவும்கூடும். ஆதலால், வாசித்த விடயம் மனதை விட்டு அகலுமுன்பே முதலில் எழுதிய குறிப்புக்களை வைத்துக்கொண்டு ஒரு சட்டகம் வரைவது நன்று. சட்டகத்தை இருவகையாக வரையலாம்.

1. தலைப்புச் சட்டகம் - ஒவ்வொரு தலைப்பும் ஒரு முழுக் கருத்தை ஞாபகப்படுத்து வதற்குத் துணை புரியும்.
2. வாக்கியச் சட்டகம் - ஒவ்வொரு வாக்கியமும் ஒரு கருத்தை எடுத்துக்கூறுவதாக அமையும்.

**அறிக்கை எழுதுவதற்கான படிமுறைகள்**

★ முக்கிய அம்சங்களைத் தனித்தனியே குறித்துக்கொள்ளல்.
★ முக்கிய அம்சங்களுக்குப் பொருத்தமான விடயங்கள் பற்றிய குறிப்புக்களை எழுதிக்கொள்ளல்.
★ குறிப்புகளை மறுபரிசீலனை செய்தல். (சுவையற்றவை, செப்பமற்றவற்றை நீக்கிவிடுதல்)
★ எஞ்சிய குறிப்புக்களை முறைப்படி ஒழுங்குபடுத்திக்கொள்ளல் (முக்கிய அம்சங்கள் ஒவ்வொன்றும் பற்றிய குறிப்புக்களைத் தனித்தனி தொகுதிகளாகத் திரட்டிக்கொள்ளுதல். ஒவ்வொரு தொகுதிக்கும் சட்டகம் வரைதல்).
★ அந்த சட்டகத்தை வைத்துக்கொண்டு அறிக்கையின் முதல் வரைபை எழுதுதல்
  - அறிக்கை எது பற்றியது என்பதைச் சுருக்கமாகக் கூறும் முன்னுரை.
  - சட்டகத்திலுள்ள பிரதான அம்சங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பந்தி அல்லது உப தலைப்பு இட்டு எழுதுதல்
  - அறிக்கையிலுள்ள முக்கியமான செய்தியைத் தொகுத்து, அதுபற்றிய அபிப்பிராயத்தை அல்லது தீர்ப்பைச் சுருக்கமான ஒரு முடிவுரையாக எழுதுதல்.

★ சிலவகையான அறிக்கைகளில் விதப்புரைகள் செய்யப்படுவதுண்டு. அத்தகைய சந்தர்ப்பங்களில் முடிவுரைக்குப் பின் விதப்புரைகள் சுருக்கமாக, தெளிவாக எழுதுதல்

★ முதல் வரைவை மீள வாசித்து கவனக் குறைவினால் ஏற்பட்டிருக்கும் எழுத்துப்பிழை, சொற்பிழை, குறியீட்டுப் பிழை முதலியவற்றைத் திருத்துதல்.

★ புத்தகங்கள், சஞ்சிகைகள், செய்தித் தாள்கள் போன்றவற்றை ஆதாரமாகக்கொண்டு அறிக்கை எழுதப்பட்டிருக்குமாயின் உசாத்துணை நூற்பட்டியல் ஒன்றை இணைத்தல். விதிமுறையாக எழுதப்படும் சில அறிக்கைககளில் பின்வரும் அம்சங்கள் மேலதிகமாக இணைத்துக்கெள்ள வேண்டும்.
  - அறிக்கை யாருக்குச் சமர்ப்பிக்கப்படுகிறது
  - அறிக்கை எப்பொருள் பற்றியது
  - எழுதுபவரின் ஒப்பம், பதவி, எழுதப்பட்ட இடம், திகதி

## அறிக்கை எழுதுவதற்கான சந்தர்ப்பங்கள்

★ வெளிக்களப் பயணங்கள்
★ பரிசோதனைகள்
★ வானொலி நிகழ்ச்சிகள் பற்றியன
★ தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பற்றியன
★ இலக்கிய மன்ற கூட்டங்கள்/ செயற்பாடுகள்
★ நிகழ்வுகள்
★ வைபவங்கள்

## மாதிரி அறிக்கைகள்

★ உமது கிராமத்தில் உள்ள அரசாங்க வைத்தியசாலையில் காணப்படும் குறைகளை விளக்கி ஓர் அறிக்கை

- வைத்தியசாலை அமைவிடம்
- பார்வையிட்ட தினம்
- காணப்பட்ட குறைபாடுகள்

  (போதியளவு மருந்தின்மை, மருத்துவரின்மை, படுக்கை வசதிகளின்மை, உத்தியோகத்தர்களின் ஒழுங்கீனம், உள்ளக நோயாளர்கள் கவனிக்கப் படாமை, சுத்தம் பேணப்படாமை, போதிய நீர் - மலசலகூட வசதிகளின்மை, வெளிநோயாளர்கள் புறக்கணிக்கப்படுகின்றமை, நோயாளர்களுடன் நேயமாக நடந்துகொள்ளாமை போன்றன)
- இக்குறைபாடுகளைத் தீர்ப்பதற்கான ஆலோசனைகள்

★ இலங்கையின் 68 ஆவது சுதந்திர தினத்தை முன்னிட்டு உமது பாடசாலை கலை இலக்கிய மன்றம் நடத்தத் திட்டமிட்டுள்ள இலக்கியக் கலைவிழா பற்றிய அறிக்கை.

- கலை விழா எங்கே, எப்போது, யாருடைய தலைமையில் நடைபெறும்?
- வரவேற்புரை
- தலைமையுரை
- சுதந்திரம் தொடர்பான கலை நிகழ்வுகள்
- சுதந்திர தின சொற்பொழிவு
- சுதந்திரத்திற்காக உழைத்தோரை நினைவுகூர்தல்
- பிரதம அதிதி உரை
- போட்டிகளில் வெறிற்றியீட்டியோருக்குப் பரிசு வழங்கல்
- நன்றியுரை
- நிறைவு

★ விழிப்புலன், செவிப்புலன் அற்றோருக்கு உதவும் நோக்கமாக உருவாக்கப்பட்ட உதவும் கரங்கள் என்ற அமைப்பின் செயலாளராக உம்மைக் கருதிக்கொண்டு இவர்களுக்கு உதவுவதற்காக மேற்கொள்ளவிருக்கும் செயற்றிட்டங்கள் பற்றிய ஓர் அறிக்கை.

- உளவியல், உடலியல் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான நடவடிக்கைகள்
- செவிப்புலக் கருவி, மூக்குக் கண்ணாடி போன்றன வழங்கல், , கல்வி, தொழிற்பயிற்சி வசதிகள் ஏற்படுத்துதல்.
- நிதி வசதிகளைப் பெற்றுக்கொள்ளல் (அரச, அரச சார்பற்ற நிறுவனங்கள் மற்றும் பிரமுகர்கள்)

★ நீங்கள் வாழும் பிரதேசத்தில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்கள் குடிசைகளிலும் கூடாரங்களிலும், பாடசாலைகள் மற்றும் சமய நிறுவனங்களிலும் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு வீடுகள் அமைத்துத் தரவேண்டுமென வினயமாகக் கேட்டு, வீடமைப்பு அமைச்சருக்கு ஓர் அறிக்கை.

- விடயம் பற்றிய தலைப்பு இடுதல்
- யாருக்கு சமர்ப்பித்தல் எனக் குறிப்பிடுதல்
- நியம மொழியில் எழுதுதல்
- அறிக்கையைப் பந்தி பிரித்து எழுதுதல் அல்லது பந்திகளுக்கு உப தலைப்புகள் இட்டு எழுதுதல்
- அறிக்கையானது பிரச்சினைகளையும் அதற்கான தீர்வுகளையும் சுட்டிக்காட்டுவதாக அமைதல்.
- யாரால் சமர்ப்பிக்கப்படுகின்றது எனக் குறிப்பிடல்

**அறிக்கையில் இடம்பெற வேண்டிய விடயங்கள்**

- பாதிக்கப்பட்ட பிரதேசம்

- பாதிக்கப்பட்ட குடும்பங்கள் பற்றிய விபரம்

- தற்காலிக இருப்பிடங்களில் வாழ்வதினால் அனுபவிக்கும் சிரமங்கள்
    - அடிப்படை வசதிகள் அற்ற வாழ்க்கை
    - சுகாதாரச் சீர்கேடு
    - கல்விப் பின்னடைவு
    - ஒழுக்கச் சீர்கேடு மற்றும் பிற

- இது தொடர்பாக முன்னர் மேற்கொண்ட நடவடிக்கைகள் பயனளிக்காமை

- நிரந்தர இருப்பிடங்கள் அமைத்துக்கொடுக்கும்படி வினயமாக வேண்டல்

★ பாடசாலை நூலகப் பொறுப்பாளர் என உம்மைக் கருதி உமது பாடசாலை நூலகத்தை சீரமைப்புச் செய்வது பற்றி பாடசாலை அதிபருக்கு ஓர் அறிக்கை

- நூல்கள் வாசிப்பதன் அவசியம்
- வகுப்பறைகளில் நூலகங்கள் அமைத்தல்
- மாணவர்கள், பெற்றோர், நலன் விரும்பிகளிடம் இருந்து புத்தகங்கள் பெறல்
- நூலக வாரத்தை ஒழுங்கு செய்தல்
- வெளிநாட்டுத் தூதரகங்கள், தேசிய நூலகம், அரச, அரச சார்பற்ற நிறுவனங்கள் மூலம் நூல்களைப் பெற்றுக்கொள்ளல்.
- நூலகப் பயிற்சிகள் கொடுத்தல்
- முறையாகப் பட்டியலாக்கம் செய்து இலக்கம் இடல்
- நேரசூசியில் நூலகப் பயன்பாட்டிற்கு நேரம் ஒதுக்குதல்
- பல்வேறுபட்ட சஞ்சிகைகள், பத்திரிகைகள், நாளிதழ்கள் போன்றவற்றைப் பெற்று அனைவருக்கம் வாசிக்கச் சந்தர்ப்பம் அளித்தல்

**பயிற்சி**

1. அறிக்கை என்பது யாது?
2. அறிக்கையின் அவசியத்தையும் அதில் இடம்பெற வேண்டிய அம்சங்களையும் குறிப்பிடுக.
3. அறிக்கை எழுதுவதற்கு மேற்கொள்ள வேண்டிய முன் தயாரிப்புகள் யாவை?

**குழுச்செயற்பாடு**

ஒவ்வொரு குழுவும் ஒவ்வொரு விடயம் தொடர்பாக அறிக்கை தயாரித்து சமர்ப்பித்தலும் கலந்துரையாடலும்

## வாக்கியங்கள்

பொருள் தரத்தக்க வகையில் சொற்கள் குறிப்பிட்ட ஒழுங்குமுறைக்கு ஏற்ப ஒன்றுடன் ஒன்று அமைப்பு ரீதியாக இணைந்து முற்றுப் பொருளைத் தருமாயின் அதனை வாக்கியம் என்பர்.

பின்வரும் வாக்கியங்களை நோக்குவோம்:

★ தசரதன் அயோத்தியை ஆண்டான்.
★ சோமசுந்தரப் புலவரின் பாடல்கள் எளிமையும் இனிமையும் நிறைந்தவை.
★ உமறுப்புலவர் சொற்சுவை மிகுந்த முதுமொழிமாலையை இயற்றினார்.
★ சங்க காலத்திலே ஈழநாட்டுப் புலவர்கள் தென்னிந்தியாவுக்குச் சென்று அங்கு நிறுவப்பட்ட சங்கங்களில் பாக்களை அரங்கேற்றினரெனச் சங்க நூல்கள் வாயிலாக அறிகிறோம்.

இவ்வாக்கியங்களின் அமைப்பில் காணப்படும் வேறுபாடுகளை அவதானியுங்கள். இவ்வாக்கியங்கள் ஒவ்வொன்றிலும் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள், அடைமொழிகள் ஆகியவற்றை இனங்கண்டு குறித்துக் கொள்ளுங்கள்.

ஒரு வாக்கியத்தின் முழுமைக்கு சொற்றொடர்களின் அமைப்பு அவசியமானது. அது பற்றி நோக்குவோம்.

### சொற்றொடர் வகைகள்

ஒரு வாக்கியத்தில் பல வகையான சொற்றொடர்கள் அமைந்திருக்கும். அவற்றுள் பெயர்த்தொடர், வினைத்தொடர், பெயரடைத்தொடர், வினையடைத்தொடர் ஆகியவற்றை நோக்குவோம்.

### பெயர்த்தொடர்

ஒரு பெயர்ச்சொல்லை தலைமை உறுப்பாகக் கொண்ட தொடர் பெயர்த்தொடர் ஆகும்.

உ- ம் :

★ பறவை
★ அழகான பறவை
★ மிக அழகான பறவை

இங்கு 'பறவை' என்ற பெயர்ச்சொல் தலைமை உறுப்பு. ஏனையவை அதற்கு அடையாக வந்துள்ளன.

### வினைத்தொடர்

ஒரு வினைச்சொல்லை தலைமை உறுப்பாகக் கொண்ட தொடர் வினைத்தொடர் ஆகும்.

உ- ம் :

★ சென்றது.
★ பறந்து சென்றது.
★ அருகாகப் பறந்து சென்றது.

இங்கு 'சென்றது' என்னும் வினைச்சொல் தலைமை உறுப்பு. ஏனையவை அதற்கு அடையாக வந்துள்ளன.

### பெயரடைத்தொடர்

ஒரு பெயரடையை தலைமை உறுப்பாகக் கொண்ட தொடர் பெயரடைத்தொடர் ஆகும்.

உ- ம் :

★ அழகான
★ மிக அழகான
★ எல்லாவற்றையும்விட மிகவும் அழகான

இங்கு 'அழகான' என்னும் பெயரடை தலைமை உறுப்பாகச் செயற்படுகிறது. ஏனையவை அதற்கு அடையாக வந்துள்ளன.

### வினையடைத்தொடர்

ஒரு வினையடையைத் தலைமை உறுப்பாகக் கொண்ட தொடர் வினையடைத்தொடர் ஆகும்.

உ- ம் :
- ★ பறந்து
- ★ அருகாகப் பறந்து
- ★ மிக அருகாகப் பறந்து

இங்கு 'பறந்து' என்பது தலைமை உறுப்பாகும். ஏனையவை அதற்கு அடையாக வந்துள்ளன.

## வாக்கியங்களின் அமைப்பு

வாக்கியங்களை அமைப்பின் அடிப்படையில் தனிவாக்கியம், கூட்டு வாக்கியம், கலப்பு வாக்கியம் என்று தரம் 10 இல் கற்றுள்ளோம். அவற்றின் அமைப்பினை நோக்குவோம்.

### (1) தனிவாக்கியத்தின் அமைப்பு

ஒரு தனிவாக்கியம் பின்வரும் அமைப்பினைக் கொண்டிருக்கும்.

பெயர்த்தொடர் + பெயர்தொடர் அமைப்பு - பெயர்ப்பயனிலை கொண்ட வாக்கியம்
பெயர்த்தொடர் + வினைத்தொடர் அமைப்பு - வினைப்பயனிலை கொண்ட வாக்கியம்

பின்வரும் தனிவாக்கியங்களின் அமைப்பை அவதானியுங்கள்.
- ★ காவியத்தில் சிறந்தவன் கம்பன்.
- ★ மகாத்மாகாந்தி அகிம்சை வழியில் போராடினார்.

பெயர்ப்பயனிலை கொண்ட வாக்கியங்கள்
- ★ பிரமிள் சிறந்த கவிஞன்.
- ★ எஸ்.பொ. சிறந்த கதைசொல்லி.

பெயர்ப்பயனிலை கொண்ட வாக்கியங்களில் எழுவாயும் பயனிலையும் பெயர்த்தொடர்களாகவே அமைந்திருக்கும்.

பிரமிள், எஸ்.பொ. ஆகியன எழுவாய். கவிஞன், கதைசொல்லி ஆகியன பயனிலை. இங்கு எழுவாய் பயனிலை இரண்டுமே பெயர்தொடர்களாகும்.

வினைப்பயனிலை கொண்ட வாக்கியங்கள்
★ சாளினி நடனம் ஆடினாள்.
★ சுரேகா பாடிக்கொண்டிருந்தாள்.

வினைப்பயனிலை கொண்ட வாக்கியங்களில் பெயர்ச்சொல் எழுவாயாகவும் வினைச்சொல் பயனிலையாகவும் இருக்கும். பயனிலை தனிவினையாக அல்லது கூட்டுவினையாகவும் இருக்கலாம்.

மேலே உள்ள வாக்கியங்களில் ஆடினாள், பாடிக்கொண்டிருந்தாள் ஆகியன பயனிலை வினைகளாகும். பாடிக்கொண்டிருந்தாள் என்பது கூட்டுவினையாக அமைந்துள்ளது.

### (2) கூட்டுவாக்கியத்தின் அமைப்பு

இரண்டு வாக்கியத்தொடர்கள் சமநிலையில் இணைக்கப்படும்போது கூட்டு வாக்கியங்கள் உருவாகின்றன.

★ நான் கவிதை எழுதினேன்.
★ நண்பன் கவிதை எழுதினான்.
★ நானும் நண்பனும் கவிதை எழுதினோம்.

மேலே எடுத்துக்காட்டப்பட்ட வாக்கியத்தில் இணைப்பிடைச் சொல்லால் இரண்டு தனித்தனியான சமநிலை நிகழ்வுகள் இணைந்துள்ளதை அறிவீர்கள் . இந்த இணைப்புக்கு இணைப்பிடைச் சொற்களும் வினை எச்சங்களும் பயன்படுகின்றன. கூட்டு வாக்கியங்களில் பின்வரும் இடைச்சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

1. உம்
2. அல்லது, இல்லையென்றால், ஓ, ஆவது, ஆ,
3. ஆனால், ஆகவே

பின்வரும் வாக்கியங்களில் வந்துள்ள இடைச்சொற்களை அவதானியுங்கள்

அ) ★ இராமன் பர்ணசாலைக்குச் சென்றான்.
★ இலக்குமணன் ஆற்றுக்குச் சென்றான்.
★ இராமன் பர்ணசாலைக்கும் இலக்குமணன் ஆற்றுக்கும் சென்றனர்.

ஆ) ★ நான் மிகிந்தலை செல்வேன்
★ நான் கதிர்காமம் செல்வேன்
★ நான் மிகிந்தலை அல்லது கதிர்காமம் செல்வேன்

இ) ★ நீ என்னுடன் தேவாலயத்திற்கு வருகிறாயா?
★ நீ என்னுடன் தேவாலயத்திற்கு வரவில்லையா?
★ நீ என்னுடன் தேவாலயத்திற்கு வருகிறாயா? இல்லையா ?

ஈ) ★ நளன் தன் பிள்ளைகளை அறிந்திருந்தான்.
★ நளன் தன்னை வெளிப்படுத்தவில்லை.
★ நளன்தன்பிள்ளைகளைஅறிந்திருந்தான் ஆனால் தன்னை வெளிப்படுத்தவில்லை.

உ) ★ உமறுப்புலவர் இயற்கையழகில் மிகுந்த விருப்புடையவர்.
★ உமறுப்புலவர் சீறாப்புராணத்தில் அழகிய அணிகளைப் கையாண்டுள்ளார்.
★ உமறுப்புலவர் இயற்கையழகில் மிகுந்த விருப்புடையவர் ஆகவே சீறாப்புராணத்தில் இயற்கையை அழகுற வர்ணித்துள்ளார்.

### கலப்பு வாக்கியம்

ஒரு தலைமை வாக்கியத் தொடரும் ஒன்று அல்லது பல சார்புநிலைத் தொடர்களும் கொண்ட வாக்கியம் கலப்பு வாக்கியமாகும்.

பின்வரும் வாக்கியங்களை வாசியுங்கள்
★ நாளை வருவான் ஒரு மனிதன் என்று நீலாவணன் பாடினார்.
★ அம்மா காய்கறி வாங்க சந்தைக்குச் சென்றார்.
★ சீதை இராமன் வந்ததைக் கண்டாள்.

முதலாவது வாக்கியத்தை நோக்குவோம். ''நீலாவணன் பாடினார்'' என்பது தலைமை வாக்கியத் தொடர். ''நாளை வருவான் ஒரு மனிதன்'' என்பது சார்புநிலைத் தொடராகும். இச்சார்பு நிலைத்தொடர் 'என்று' என்னும் இணைப்பால் தலைமை வாக்கியத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

இதேபோல ஏனைய இரண்டு வாக்கியங்களிலும் உள்ள தலைமை வாக்கியத் தொடரையும் சார்புநிலைத்தொடரையும் அவதானியுங்கள்.

| **தலைமை வாக்கியத் தொடர்** | **சார்புநிலைத்தொடர்** |
|---|---|
| அம்மா சந்தைக்குச் சென்றார். | காய்கறி வாங்க |
| சீதை கண்டாள் | இராமன் வந்ததை |

ஒரு கலப்பு வாக்கியத்துள் அமையும் சார்புநிலைத் தொடர்கள் பின்வரும் மூன்று வகையாக இருக்கலாம்.

1. முற்று வாக்கியத்தொடர்
2. எச்சவாக்கியத்தொடர்
3. பெயர்த்தொடராக்கப்பட்ட முற்றுவாக்கியத் தொடர்

மேலே உள்ள மூன்று வாக்கியங்களில் முதலாவது வாக்கியத்தில் வரும் சார்பு நிலைத்தொடர் முற்று வாக்கியமாக இருப்பதை அவதானிக்கலாம்.

இரண்டாவது வாக்கியத்தில் உள்ள சார்புநிலைத் தொடர் எச்சவாக்கியத் தொடராகும். மூன்றாவது வாக்கியத்தில் உள்ள சார்புநிலைத்தொடர் பெயர்த்தொடராக்கப்பட்ட முற்றுவாக்கியத்தொடராகும். 'இராமன் வந்தான்' என்னும் சார்புநிலைத்தொடர் 'இராமன் வந்தது' என பெயர்த்தொடராக்கப்பட்டு தலைமை வாக்கியத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

**பயிற்சி**

*(அ)* பின்வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்த்தொடர், வினைத்தொடர், பெயரடைத்தொடர், வினையடைத்தொடர் ஆகியவற்றை இனங்கண்டு எழுதுக.

1. அழகான ஒரு மான் ஓடியது.
2. அழகான ஒரு மான் காட்டில் குட்டியுடன் ஓடியது.
3. அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்துக்கு மிகச் சிறந்த உரை எழுதினார்.
4. சி.வை தாமோதரம்பிள்ளை ஓலைச்சுவடிகளில் சிறைப்பட்டிருந்த தமிழ் இலக்கியங்களை நூல்களாகப் பதிப்பித்தார்.

*(ஆ)* பின்வருவனவற்றில் கூட்டுவாக்கியங்களையும் கலப்பு வாக்கியங்களையும் வேறுபடுத்திக் காட்டுக.

1. கண்ணன் வியர்வை சிந்தி வேலை செய்தான்.
2. நானும் நீயும் கொழும்புக்குப் போனோம்.
3. எனக்கு குடிக்க கொஞ்சம் தண்ணீர் தாருங்கள்.
4. நான் தினமும் உடற்பயிற்சி செய்து ஆரோக்கியமாக இருக்கிறேன்.
5. வயலுக்கு குளத்திலிருந்தும் வாய்க்காலிலிருந்தும் தண்ணீர் இறைத்தார்கள்.
6. அவன் ஒரு நல்ல மனிதன் என்றால் இப்படிச் செய்திருப்பானா?
7. மகன் இன்னும் வீட்டுக்கு வரவில்லை என்று தாய் கவலைப்பட்டாள்.
8. நீங்கள் நேரில் வந்தால் அல்லது ஆள் அனுப்பினால் தருவேன்.

# பிறமொழிச் சொற்கள்

## போர்த்துக்கேய மொழிச் சொற்கள்

அலவாங்கு
ஆசுப்பத்திரி
கரந்தை
சப்பாத்து
துவாய்
வாங்கு
பாண்
விறாந்தை (வராந்தா)

## ஒல்லாந்து மொழிச் சொற்கள்

இலாச்சி
கந்தோர்
கேத்தில்
நொத்தாரிசு
தோம்பு
சாக்கு

## பிரான்சிய மொழிச் சொற்கள்

பீரோ
துருப்பு

## அரபு மொழிச் சொற்கள்

இலாகா
தகவல்
வசூல்

## மராட்டி மொழிச் சொற்கள்

அட்டவணை
அபாண்டம்
குண்டான்
பட்டாணி
சாம்பார்

### பாரசீக மொழிச் சொற்கள்

அந்தஸ்து
அலாதி
குமாஸ்தா
சமுக்காளம்
சுமார்
தயார்
துப்பாக்கி
புகார்
முலாம்
வாபஸ்

### பாளி மொழிச் சொற்கள்

விகாரை
துக்கம்
சீலம்
பிக்கு
தூபி
போதி

### ஆங்கில மொழிச் சொற்கள்

கோப்பி
பென்சில்
விசுக்கோத்து
மைனர்
மைல்
ஏக்கர்
தார்

### உருது மொழிச் சொற்கள்

கச்சேரி
சப்பாத்தி
பாக்கி
ரொக்கம்

# 4 பாதுகாப்பு

**தெணியான் (1942)**

இவரது இயற்பெயர் கந்தையா நடேசு. யாழ்ப்பாணத்தில் பொலிகண்டியைச் சேர்ந்தவர். இலங்கை முற்போக்கு எழுத்தாளர்களில் ஒருவர். 'விவேகி' சஞ்சிகையில் வெளியாகிய 'பிணைப்பு' என்ற சிறுகதை மூலம் எழுத்துலகிற்கு வந்தவர். 1973 இல் வீரகேசரிப் பிரசுரமாக வெளிவந்த 'விடிவை நோக்கி' இவரது முதல் நாவல் ஆகும். இதுவரை பத்துக்கும் மேற்பட்ட நூல்கள் வெளியாகியுள்ளன.



நான் அப்ப ஐந்தாம் வகுப்பில் படித்துக்கொண்டிருக்கிறேன்.

எங்களுக்கு வந்து வாய்த்த வகுப்பாசிரியர் சற்று வித்தியாசமான ஒருவர். வெகு குதூகலமான ஆள். வகுப்பில் எங்களை எப்பொழுதும் கலகலப்பாக வைத்திருப்பார்.

அவர் வகுப்பறைக்குள் வந்து சேரும் காட்சியைக் காண்பதற்கு நாங்கள் பெரும் ஆவலுடன் காத்திருப்போம். அந்த அரிய காட்சியைத் தினமும் காண்பது நாங்கள் பெற்ற பெரும்பேறு என்று சொல்ல வேண்டும்.

அவர் ஒரு நாடக நடிகன்போல அங்கு வந்து தோன்றுவார். வரவுப்பாடல் ஒன்றைப் பாடிய வண்ணம் நடிகன் அரங்கில் வந்து சேருவது போல அவர் பாட்டோடுதான் வருவார். அப்பொழுது நிமிர்ந்த மெட்டான ஒரு துள்ளல் நடை இருந்தாற்போல அவரிடம் வந்து சேர்ந்துவிடும். அது அவருக்கு இயல்பான ஒரு நடை அல்ல என்பது சற்று உன்னிப்பாக நோக்கினால் மெல்லப் புலப்படும்.

அன்றும் அவர் வழமைபோல நடந்து வந்தார்.

''வணக்கம் ஸேர்'' நாங்கள் அனைவரும் பணிவாக எழுந்து நிற்கின்றோம்.

''இருங்கள் இருங்கள்....''

மஹரிஷியின் திவ்விய தரிசனத்துக்காகக் காத்துக்கிடக்கும் பக்தர்கள் முன்னே திடீரெனத் தோன்றி இரு கரங்களையும் மேலே தூக்கி ஆசீர்வாதிப்பதுபோல தாளலயத்துடன் கரங்களை அசைக்கின்றார். நாங்கள் ஆசீர்வதிக்கப் பெற்றவர்களாக மெல்ல அமருகின்றோம்.

அவர் எங்களை முகம் நோக்கி நிற்கின்றார். அவருக்குப் பின்னே அவருக்குரிய மேசை. இரண்டு அடிகள் பின்னோக்கி மெல்ல நகர்ந்து அந்த மேசை விளிம்பில் மெதுவாகத் தனது பிருஷ்டத்தை வைக்கின்றார். பின்னர் வலது காலைத் தூக்கி சற்று மடித்து இடது தொடையின் மேல் போட்டுக்கொண்டு ஒற்றைக் காலில் ஊன்றி நிற்கின்றார். ஆகா.. ஆகா.. என்ன அற்புதம் என்ன அற்புதம்! வேய்ங்குழல் ஊதும் கண்ணனை நேரில் கண்டதில்லை. ஓவியங்களில் அவரைப் பார்த்திருக்கிறோம். சாட்சாத் அந்தக் கண்ணபிரானே பூமிக்கு இறங்கி வந்து காட்சி தருவது போல அவர் எங்கள் முன் தோன்றுகின்றார்.

அவரின் சிரித்த விழிகள் மெதுமெதுவாக எங்களை நோக்கி நோட்டமிட்டு மேய்ந்து வருகின்றன. பின்னர் ஏதோ ஒரு இராகத்தைப் பாடப்போகும் பாவனையில் தொண்டையைச் செருமிச் செருமி சரிசெய்து கொள்ளுகின்றார். நாங்கள் எதிர்பார்க்கிறோம். வழமைபோல ஒரு இராகம் பிறக்கப் போவதை. அப்படி எதுவும் நடக்கவில்லை. மீண்டும் ஒரு செருமல் அதன் பிறகு ''பிள்ளைகளே உங்களுக்குச் சந்தோஷமான ஒரு செய்தி சொல்லப் போகிறேன்'' எனக் கூறிக்கொண்டு எங்கள் முகங்களை துல்லியமாக மீண்டும் நோக்குகின்றார்.

எங்களுக்கு மனதில் திடீரென ஆவல் எழுந்து பொங்கி வழிகிறது. அவர் தனது முகத்தில் புன்னகை ஒளிரவிட்டு மௌனமாக நிற்கின்றார்.

மகிழ்ச்சியான செய்தியானால் காலந்தாழ்த்தாது உடனே சொல்லி வைத்துவிட வேண்டும். துயரமான செய்தியானால் கொஞ்சம் தாமதித்து மெல்லச் சொல்லலாம்.

இதுகூடவா அவருக்குத் தெரியாது?

எங்கள் உள்ளங்களில் ஆவலைத் தூண்டிவிடும் உத்திதான் இந்த மௌனம்.

எங்கள் எல்லோருடைய கவனமும் தன்னை நோக்கித் திரும்பி இருக்கின்றது

என்பதை அவர் அவதானித்துத் தீர்மானித்துக் கொண்டு திருப்தியாக மெல்லத் தலை ஆட்டுகிறார்.

திரும்பவும் ஒரு சங்கீதச் செருமல்.

அதன் பின்னர் ''உங்களை நான் ஒரு ரூர் கூட்டிக்கொண்டு போகப் போகிறேன். ரூர் என்றால் சுற்றுலா, தெரியுந்தானே! வர விருப்பமானவர்கள் கை உயர்த்துங்கோ!'' என்று கேட்கின்றார். அட அதற்கா இத்தனை ஆலாபனைகள்! சட்டென்று சொல்லி இருக்கலாமே!

நான் பட்டென்று எழுந்து நிற்கின்றேன். அவருக்கு வெற்றிப் பெருமிதம் குறிப்பாக என்னைப் பார்த்து சொண்டுக்குள் சிரிக்கின்றார். பிறகு, ''கையைத்தான் உயர்த்தச் சொன்னேன்'' என்கின்றார்.

வகுப்பில் எல்லோரும் என்னைத் திரும்பிப் பார்க்கிறார்கள். கேலியாகச் சிரிக்கிறார்கள். எனக்குப் பெரிய வெட்கமாப் போச்சு. சட்டென்று வாங்கின் மீது திரும்பவும் குந்துகின்றேன். ஆனால் மனதில் எழுந்த ஆவல் அடங்குவதாக இல்லை. வலது கரத்தைத் தூக்கி நல்ல உயரமாக உயர்த்திக் காட்டுகிறேன். என்னைப் பார்த்துச் சிரித்தவர்கள் இப்ப சிரிக்கவில்லை. கொஞ்சம் சுணங்கி தயங்கித் தயங்கி ஒவ்வொருவராகக் கை உயர்த்துகின்றார்கள். இப்ப வகுப்பறைக்குள் கைகளை நட்டு வைத்தது போல எல்லோருடைய கைகளும் உயர்ந்து நிற்கின்றன.

ஆசிரியர் முகம் மலருகின்றது. இணக்கமாக என்னைப் பார்த்துச் சிரிக்கின்றார். அவர் சிரிப்பு எனக்குத் தெரிவிக்கும் நன்றிச் சிரிப்பு என்பது எனக்குத் தெரியும். எனக்கு மனதளவில் சொல்ல முடியாத பெருமை. பெரிய காரியமொன்றைச் சாதித்துவிட்டதான புளுகம். ஆசிரியர் மாணவன் எனக்கு நன்றி தெரிவிப்பதென்பது சாதாரணமான ஒரு காரியமா? அதன் பிறகு வகுப்பில் என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியாது. வகுப்பு எப்ப முடியும்? வீட்டுக்கு எப்ப போய்ச் சேருவேன்? என்று துடித்துக் கொண்டிருந்தேன்.

நான் வீடு வந்து சேர்ந்தேன். எப்படி வந்தேன் நடந்தா, பறந்தா? அதுவும் எனக்குத் தெரியாது. வீட்டுப் படலையைத் திறந்தடித்துக்கொண்டு துள்ளிக்குதித்து உள்ளே ஓடி வருகிறேன். ''அம்மா.. அம்மா.. அம்மோய்..'' அம்மாவின் அசுகை இல்லை. ''இந்த நேரம் அம்மா எங்கே போயிருப்பா? அடுக்களைக்குள்ளேதானே இருப்பா! அம்மோய்.. அம்மோய்'' அடுக்களைக்குள் பாய்கிறேன்.

அம்மா அடுப்புக்கு முன் குந்தியிருக்கின்றா. அடுப்பில் மீன் குழம்பு கொதித்துக்கொண்டிருக்கிறது. அகப்பையை வைத்து அம்மா துழாவிக் கொண்டிருக்கிறா. அம்மாவுக்கு வியர்த்துக் கொட்டுகிறது. அம்மாவின் மூக்குத்திக் கல்லு மாதிரி வியர்வைத் துளிகள் நெற்றியில் கன்னத்தில் கழுத்தில் மின்னுகிறது.

வியர்வையால் குளித்து அம்மாவின் சட்டை நனைந்து கிடக்கிறது. அடுப்பு வெளிச்சம் முகத்தில் விழுந்து அம்மா நல்ல ஓவியமாகத் தோன்றுகின்றா. அம்மா நல்ல வடிவு. இப்ப அம்மாவுக்கு அவசரம். ஐயா சாப்பாட்டுக்கு வருகிற நேரம். எனக்குள்ள அவசரம் அம்மாவுக்குத் தெரியாது. திரும்பவும் ''அம்மா...'' என அழைக்கிறேன். அம்மாவின் முழுக் கவனமும் குழம்பு பொங்கி வழிந்து விடக்கூடாது என்பதில். எனக்குள் ஆவல் பொங்கி வழிந்து கொண்டிருப்பது அம்மா அறியமாட்டா.

''அம்மா நாங்கள் ஏுர் போகிறம்''

''முதல் புத்தகத்தைக் கொண்டுபோய் வைச்சிட்டு உடுப்பை மாத்து. உனக்கு எல்லாத்துக்கும் அவசரக்குணம்''

''அம்மா நானும் போகப் போறன்''

''முதலில் சொன்னதைச் செய். உனக்காக அம்மியிலே அரைச்சுக் குழம்பு காய்ச்சி வைச்சிருக்கிறன். கால் முகம் கழுவிக்கொண்டு வா''

''ஓமெண்டு சொன்னால்தான் சாப்பிடுவன்''

''ஓகோ... இப்பவே பிடிவாதம் பிடிக்கத் துவங்கிவிட்டாய்''

''அம்மோய்... சொல்லுங்கம்மோய்''

''நான் என்ன சொல்லுகிறது? ஐயா வாற நேரம், வந்தாப் போல கேள்''

சட்டிக்குள்ள குழம்பு இப்பத்தான் கொதி அடங்கிப் போனது. அம்மா இப்பத்தான் என்னைத் திரும்பிப் பார்க்கிறா. 'என்னவாம்..?' முற்றத்தில் சயிக்கிளை நிறுத்திக்கொண்டு ஐயா கேட்கிறார். கடையைப் பூட்டிக்கொண்டு மத்தியானச் சாப்பாட்டுக்காக இப்ப வந்திருக்கிறார்.

''பிறகு கேளுங்கோ.. முதல் வந்து சாப்பிடுங்கோ''

''என்னவாம் பிள்ளை?'' கேட்டுக்கொண்டு அடுக்களை விறாந்தைக்கு ஏறி வருகிறார்.

அம்மா அடுக்களைக்குள். ஐயா விறாந்தையில். நான் அம்மாவுக்கு அருகே மௌனமாகி நிற்கின்றேன்.

''சொல்லன்'' - அம்மா.

''அம்மா சொல்லுங்கோ..'' மெல்லச் சிணுங்குகிறேன்.

''எல்லாத்துக்கும் ஆயித்தம். சொல்லத்தான் பயம். ரூர் போகப் போகினமாம்''

''சின்னப் பிள்ளைக்கு என்ன ரூர்? நீ துருதுரெண்டு இதிலே நிக்கிறன் எண்டு அதிலே நிப்பாய்..''

''வகுப்பிலே எல்லாரும் போகினம் ஐயா''

''வகுப்பிலே எத்தினை பேர்?''

''முப்பது''

''எங்கை கூட்டிக்கொண்டு போகப் போகினம்?''

''யாழ்ப்பாண குடாநாடு''

எனக்கு மனதில நம்பிக்கை பிறந்துவிட்டது.

''கைதடி செவிடர் - குருடர் பாடசாலை, யாழ்ப்பாணம் தொல்பொருட்காட்சி சாலை, கோட்டை, காங்கேசன்துறை சீமேந்து தொழிற்சாலை, கீரிமலைக்கேணி..'' மூச்சு விடாமல் நான் அடுக்கிக்கொண்டு போகின்றேன்.

''ஆர் உங்களைக கூட்டிக்கொண்டு போறது?''

''எங்கடை ஸேரும், இங்கிலீசு ரீச்சரும்..''

''வேறை''

''ஐயா, அம்மா விரும்பினால் வரலாமாம்''

''அப்ப நானும் வருகிறன்''

எனக்கு மனதில் ஒரே வியப்பு. ஐயாவுக்கும் இந்த இடங்கள் தெரியாது என்று நினைத்துக்கொள்ளுகிறேன். மனதில் எழுந்த சந்தேகத்தை சட்டென்று கேட்டுவிடுகின்றேன்.

''ஐயாவை ஸேர் மார் ரூர் கூட்டிக்கொண்டு போகயில்லை. அதுதான் ஐயாவுக்கு இந்த இடங்கள் தெரியாது''

ஐயா வாய் திறந்து 'ஹ..ஹ..ஹ' என்று வெற்றிலைக் காவி தெரியக் குலுங்கக் குலுங்கப் பெரிதாகச் சிரிக்கின்றார். ஐயாவின் செல்ல வண்டி மேலும் கீழும் ஆடுகிறது.

அம்மா முந்தானையை இழுத்து வாயைப் பொத்திக்கொண்டு மெல்லச் சிரிக்கிறா.

இருவரும் ஏன் சிரிக்கின்றார்கள் என்று எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. சிலசமயம் இவர்கள் இப்படித்தான் எனக்கு விளங்காமல் கள்ளச் சிரிப்புச் சிரிப்பார்கள். நான் இருவருக்கும் நடுவில் பேந்தப் பேந்த முழித்துக்கொண்டு நிற்கின்றேன்.

பிறகு அம்மா சொல்லுகின்றா ''உனக்குத் துணையாக ஐயா வரப் போகிறார்''.

''முப்பது பேர் எல்லாரையும் அவையளுக்குக் கட்டி மேய்க்க ஏலாது. எங்கடை பிள்ளையை நாங்கள்தானே பார்க்க வேண்டும்?''

கடையைப் பூட்டிவிட்டு ஐயா புறப்பட்டு என்னோடு ரூர் வந்தார்.

கதிரை ஒன்றைத் தூக்கி வந்து முற்றத்தில் வைத்து அதில் அம்மா அமர்ந்திருந்து கூந்தலைக் குலைத்து இடது தோளின் மேலாக மார்பினில் தொங்கவிட்டு சீப்பினால் வாரிக் கொண்டிருக்கிறா. தலைவாரி முடிந்ததும் நேரே கிணற்றுக்குப் போவா குளிப்பதற்கு. புழுக்க காலமானால் அம்மா மாலையில் குளிப்பதுதான் வழக்கம். இதுதான் சரியான சந்தர்ப்பம் என தீர்மானித்துக்கொண்டு நான் அம்மாவை அணுகுகின்றேன்.

''அம்மா குளியுங்கோவன். நான் அள்ளித் தாறன்''

''என்ன இருந்தாப் போல அம்மாவிலே இரக்கம் வந்துவிட்டுது? சுத்தி வளைக்காமல் சங்கதியைச் சொல்லு?''

''ஒண்டுமில்லை அம்மா''

''கள்ளா பொய் சொல்லாதே. உன்னை எனக்குத் தெரியும்''

''அம்மா எல்லோரும் படம் பார்க்கப் போறான்கள். நானும் போகப் போறன்''

அம்மா கூந்தல் வாருவதை நிறுத்திக்கொண்டு தலைநிமிர்ந்து கோபமாக என்னைப் பார்த்துச் சொல்லுகின்றா,

''ஓ.. ஓ.. நீ இப்ப கடுக்கண்டிட்டாய். இரவு நேரம் படம் பார்க்க தியேட்டருக்கு வெளிக்கிட்டிட்டாய்''

''இரவு இல்லை. நாளைக்குச் சனிக்கிழமை. பகல் மெற்னி ஸோவுக்கு''

''உந்தப் படங்களை உண்மையான வாழ்க்கை எண்டு நம்பி இந்தக் காலத்துப் பெடியள் பெட்டைகள் கெட்டுப் போகுதுகள்''

''இது நல்ல படம். ஸேர்தான் போய்ப் பார்க்கச் சொன்னவர்''

''என்ன படம்''

அம்மா கொஞ்சம் இறங்கி வந்துவிட்டா போல எனக்குப் புலப்படுகின்றது. நம்பிக்கையுடன் சொல்லுகின்றேன்.

''சம்பூரண ராமாயணம்''

அம்மா அடுத்து என்ன சொல்லப் போறா என்பது எனக்குத் தெரியும். நான் எதிர்பார்த்தது போல ''ஐயா வந்தாப்போல கேளன்'' என்கிறா. எனக்கு உள்ளூர எரிச்சல் வந்துவிடுகிறது.

''என்ன கேட்டாலும் ஐயாவைக் கேள்.. ஐயாவுக்குச் சொல்லு.. பகல் நேரந்தானே! ஐயாவுக்குத் தெரியாமல் போய்விட்டு வந்தால் என்ன?''

அம்மா தலையை வேகமாக சீவி கூந்தலை பின்புறம் எடுத்து இரு கரங்களையும் தூக்கி குடுமியை முடிந்த வண்ணம் பற்களை நெருடிக்கொண்டு எழுகின்றா.

''என்ன சொன்ன நீ.. என்ன சொன்ன நீ.. பொய்யும் புரட்டுமாக நடக்கப் போகிறியே? ஐயாவைக் கேட்காமல் வேறை ஆரைக் கேட்கிறது? தோளுக்கு மிஞ்சி னால் தோழன் எண்டது பொய் இல்லை. நீ உன்ரை எண்ணப்படிதான் நடக்கப் போறாய் போலக் கிடக்கு''

''நான் அப்படி நடக்க மாட்டன் நீங்கள் சொல்லுங்கோ எண்டுதானே கேட்டனான்!'' அம்மாவை மெல்லச் சமாதானம் பண்ணப் பார்க்கிறேன்.

''தலை இருக்க வால் ஆடக்கூடாது. எல்லாத்துக்கும் ஐயா வரட்டும்'' சொல்லிக்கொண்டு அம்மா கிணற்றடியை நோக்கிப் போகின்றா.

ஐயாவின் வருகையை நான் ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருக்கின்றேன். ஐயா வீடு வந்து சேர இரவு ஒன்பது மணி ஆகிப் போனது.

''நான் சொல்லுவேனே... உனக்கு எல்லாத்துக்கும் அவசரமெண்டு. நீ கொஞ்சம் பொறுமையாய் இரு. ஐயா சாப்பிட்டு முடிஞ்சு ஆறுதலா இருக்கேக்க கேட்க வேணும்.

இப்ப கதைச்சால் எல்லாம் பிசகிப் போகும்''.

அம்மா அனுபவப்பட்டவ. வாழ்க்கையை விளங்கிக் கொண்டவ. ஐயாவை எப்படி வழிக்கு கொண்டு வருவது என்பது அவவுக்குத் தெரியும். எனக்குத்தான் பொறுமையாக இருக்க இயலவில்லை. மேசைமீது புத்தகத்தை விரித்து வைத்துக்கொண்டு படிப்பதுபோலப் பாசாங்கு பண்ணிக்கொண்டிருக்கிறேன்.

ஐயா சாப்பாடெல்லாம் முடிந்து விறாந்தைக்கு வந்து கன்வேஸ் கட்டிலில் ஆசுவாசமாக மெல்லச் சரிந்து கண்களை மெல்ல மூடுகிறார். விறாந்தையில் கம்பியில் தொங்கும் அரிக்கன் லாம்பு மின்னிமின்னிக் கண் சிமிட்டிக் கொண்டு கிடக்கிறது.

எனக்கு வேகமாக இதயம் அடித்துக்கொண்டிருக்கிறது. ஐயா கட்டிலில் கிடந்து அப்படியே சில சமயம் கண் அயர்ந்து விடுவார். பின்னர்தான் எழும்பிச் சென்று படுக்கையில் ஒழுங்காகப் படுத்துக்கொள்வார்.

இன்றும் அப்படி நடந்துவிட்டால்...? சற்றுநேரம் கழிந்து ''இஞ்சாரப்பா... அந்தத் தீப்பெட்டியைக் கையோடை கொண்டுவா'' ஐயா குரல் கொடுக்கின்றார்.

அம்மா அடுக்களையைப் பூட்டி கையில் திறப்பை எடுத்துக்கொண்டு தீப்பெட்டியுடன் ஐயாவை நோக்கி ஒரு மந்தகாசச் சிரிப்புடன் வருகின்றா. இந்தச் சிரிப்பு ஐயாவை வசியப்படுத்தும் போதைப் பொருள். இந்தச் சாகசங்கள் எல்லாம் எங்கே படித்தாவோ?

தீப்பெட்டியை ஐயா கையில் கொடுத்துவிட்டு கட்டில் அருகே அம்மா குந்திவிடுகின்றா.

எப்போதாவது ஒருநாள் அம்மா இப்படிப் போய்க் குந்திவிடுவது வழக்கம். அன்று முக்கியமான சங்கதி ஏதோ இருக்கிறது என்பது ஐயாவுக்குத் தெரியும்.

ஐயா சுருட்டை மூட்டி மெல்ல மெல்லப் புகையை இழுத்து விட்டுக்கொண்டு அம்மாவைப் பார்த்துக் கேட்கிறார்.

''என்ன சங்கதி?''

''ஒண்டுமில்லை. தம்பி படம் பார்க்கப் போறானாம்'' அம்மா இழுத்துப் பறித்து மெல்லச் சொல்லுகிறா.

''எல்லாம் நீ அவனுக்கு குடுக்கிற செல்லம்''

''இல்லையப்பா.. கூடப்படிக்கிற பெடியள் எல்லாம் போகுதுகள்''

''போகட்டன். இவருக்கு இப்ப வால் முளைச்சிட்டுது'' ஐயாவின் குரலில் கொஞ்சம் காரம் ஏறுகிறது.

''கோபிக்காதையுங்கோ. சொல்லுகிறதைக் கேளுங்கோ. சம்பூரண ராமாயணம்... பாக்கத்தானே வேணும். நாளைக்கு மெற்னி ஷோவுக்கு போறானாம்''

''சிநேகிதன்மாரோடை ரவுணுக்கு சயிக்கிளிலே போக வெளிக்கிட்டிட்டார். எத்தனை கார்.. லொறி வரும். வேறை கதை வேண்டாம். போகேலாது எண்டு சொல்லு''

ஐயா கட்டிலில் பின்புறமாகச் சார்ந்து கண்களை மூடிக்கொண்டு சுருட்டுப் புகையை இழுத்துவிட ஆரம்பித்துவிட்டார். இனி அவரோடு பேசுவதில் பயனில்லை என்று அம்மா உணர்ந்துகொண்டு சிறிது நேரம் பொறுத்து அங்கிருந்து எழுந்து போகின்றா.

எனக்கு குமுறிக்கொண்டு வருகிறது. நண்பர்களுடன் சேர்ந்து வருவதாக நான் அவர்களுக்குச் சொல்லி வைத்தேன். அவர்கள் முகத்தில் இனி நான் எப்படி முழிப்பது? அவர்கள் என்னைக் கேலியும் கிண்டலும் பண்ணப் போகிறார்கள். என்ன செய்யலாம்? நான் ஒரு முடிவுக்கு வந்தேன்.

மற்றையவர்களை எதிர்த்து நின்று காரியம் சாதிக்க இயலாத பலவீனமானவன் அவர்களின் கருணையைப் பெற்றுக்கொள்வதற்கான ஒரு வழி, தன்னைப் பட்டினி போடுதல். நான் உண்ணாவிரதப் போராட்டம் ஆரம்பித்து விட்டேன்.

மறுநாள் காலை நான் பட்டினி. அம்மாவும் பட்டினி. மதியம் நான் பட்டினி. அம்மாவும் பட்டினி.

காலையில் கடைக்குப் போன ஐயா மதியம் வந்தார். வழமைபோல உணவு உண்டு முடிந்த பின் வெற்றிலையைப் போட்டுக்கொண்டு திரும்பிப் போய்விட்டார். நான் பட்டினி இருப்பது அவருக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. அவர் அறிந்தால்... குடலைக் கலக்கிக்கொண்டு வருகிறது. மாலை நேரம் கடையைப் பூட்டிக்கொண்டு திடீரென்று ஐயா வீட்டில் வந்து நிற்கின்றார். எனக்கு அது வியப்பாக இருக்கிறது. எனக்குள் எழுந்த வியப்பு அடங்குவதற்குள்ளே ''தம்பி இஞ்சை வா. படத்துக்குப் போகலாம் வெளிக்கிடு'' என்கிறார்.

அம்மாவை அழைத்து, ''முதல் அவனுக்குச் சாப்பாடு குடு. நீயும் சாப்பிடு'' சொல்லிக்கொண்டு கால்முகம் கழுவ கிணற்றை நோக்கிப் போகின்றார். எனக்கு இப்ப எல்லாமே விளங்கிவிடுகின்றது. அம்மா முகம் மலர்ந்து அடுக்களைக்குள் நுழைகின்றா. நான் அம்மாவைத் தொடர்ந்து பின்னால் போகின்றேன்.

ஐயா தனது சயிக்கிளில் என்னை ஏற்றிக்கொண்டு படம் பார்க்க தியேட்டருக்கு அழைத்துச் செல்லுகின்றார்.

★★★★★

நான் நேர்த்தியாக உடுத்து வெளியே செல்வதற்குத் தயாராகப் புறப்பட்டு வீட்டு வாசலில் வந்து நிற்கின்றேன். மகனைப் பார்க்கின்றேன். அவன் விளையாடுவதற்கு ஓடிப்போய்விட்டான்.

அவனுக்காகத்தான் நான் தாமதித்துக் காத்திருந்தேன் அல்லது ஒருமணி நேரத்துக்கு முன்னதாக நான் இங்கிருந்து புறப்பட்டுப் போயிருக்கலாம்.

நேற்று படுக்கைக்குப் போன சமயம் கலாவிடம் அவன் விசாரித்தான்.

''அம்மா நாளைக்கு லீவுதானே?''

''காலையிலே நேரத்தோடு எழும்பாமல் படுத்துக் கிடக்கலாம் அப்படித்தானே?'' கன்னத்தில் கிள்ளி முத்தமிட்டா.

வேலை நாட்களில் கலாவுக்குப் பள்ளிக்கூட அவசரம். எனக்குக் கந்தோர் அவசரம். காலை உணவு, மத்தியான உணவு சமைத்து முடித்து கட்டி எடுத்துக்கொண்டு போக வேணும். மகனைக் குளிப்பாட்டி உடுத்து உணவு ஊட்டி கலா தன்னோடு பாடசாலைக்கு அழைத்துக்கொண்டு செல்ல வேண்டும். காலையில் திருப்பள்ளி எழுச்சி பாடி அவனைப் படுக்கையில் இருந்து எழுப்புவது கலாவுக்குப் பெரிய வேலை. அவனைக் கடிந்து கட்டாயப்படுத்தி எழுப்ப முடியவில்லை. முதலாம் வகுப்பில் படிக்கும் ஐந்து வயது நிரம்பிய சின்னப்பிள்ளை. காலை வேளையில் அவனால் நன்றாகத் தூங்க முடிவதில்லை. வீட்டில் அப்படி ஒரு பரபரப்பு.

இன்று காலையில் நான் இடைஇடையே போய்ப் பார்த்தேன். பஞ்சு மெத்தையில் சுகமாகப் புரண்டு புரண்டு படுத்துக்கிடந்தான். அவன் உறக்கத்தைக் குழப்ப நான் விரும்பவில்லை. அவன் படுக்கையிலிருந்து எழும்பி வருகின்றவரை நான் காத்திருந்தேன்.

எனக்கு மேசையில் உணவு பரிமாறிக்கொண்டு அவனுக்கும் கலா ஊட்டிவிட்டாள். நான் அறைக்குள் சென்று உடை மாற்றிப் புறப்படுவதற்குள் அவன் இங்கிருந்து மாறிவிட்டான். பொல்லாத சுட்டிப்பயல். வெகு சுழியன் சட்டென்று விளங்கிக்கொண்டு விடுவான். இன்றைய தலைமுறையின் அசல் வாரிசு.

எனக்கு நேரம் கடந்து போய்க்கொண்டிருக்கிறது. இரண்டு தினங்களுக்கு முன்னரே நான் திட்டமிட்டிருந்தேன். யாழ்ப்பாணநகரம் போய் இன்று அந்த அவசர

காரியத்தை முடித்துக்கொண்டு வர வேண்டும். சாதாரணமாகப் போய்வர எனக்கு இரண்டுமணி நேரம் போதும்.

''எந்த நாளும் ஆவி போன சாப்பாடுதான் சாப்பிடுகிறோம். லீவு நாளிலேயாவது சுடச்சுட உயிரோடை சாப்பிட வேணும். தாமதிக்காமல் வாருங்கோ... நீங்கள் வந்துதான் கோழி வெட்டித்தர வேணும்'' கலா வீட்டுக்குள்ளிருந்து சொல்லிக்கொண்டிருக்கிறா.

எனக்கு சினம் மூளுகிறது.

''எந்த நேரமும் சாப்பாடு பற்றித்தான் எண்ணமும் கதையும். இப்ப கோழிக்கென்ன அவசரம்? தம்பி எங்கே?''

''ஏன் அத்தான் கோவிக்கிறியள்?'' கலா வீட்டு வாசலுக்கு உடனே வருகிறா. கலாவுக்கு முகம் சுண்டிப் போச்சு.

''எனக்கு நேரம் போகுது'' - நான் சிடுசிடுக்கிறேன்.

''பிள்ளை இஞ்சைதான் நின்றவன். அதுக்கிடையில விளையாடப் போயிருப்பான். நில்லுங்கோ வாறன்''

கலா அடுத்த வீட்டுக்கு ஓடிப் போகிறா. போன வேகத்தில் மகனைக் கையில் பிடித்து அழைத்துக்கொண்டு வருகிறா.

அவன் தூர வரும்பொழுதே முற்றத்தில் மோட்டார் சயிக்கிள் நிற்பதை கவனிக்கிறான். வெளியே செல்வதற்குத் தயாராகப் புறப்பட்டு நிற்கும் என்னைப் பார்க்கிறான்.

அவன் சிணுங்கி அடம்பிடிக்க ஆரம்பிக்கிறான்.

''அம்மா நான் மாட்டன்.. நான் மாட்டன்..''

''அப்பாவோடை போய்விட்டு வாடி.. எங்கடை செல்லமெல்லே''

''நான் போகேல்லை''

''ஏன் போகேல்லை''

முன்னர் என்றால் நான் வெளியே செல்லச் சயிக்கிள் எடுத்தால், மோட்டார் சயிக்கிள் எடுத்தால்போதும் ஓடி வந்து தொத்திக் கொள்ளுவான். கலா தடுத்தாலும்

கேட்க மாட்டான். அவன் என்னோடு வெளியே சென்று வந்தால் அம்மாவுக்குக் கதை கதையாகச் சொல்லுவான்.

''அம்மா, துவக்கு வைச்சுக்கொண்டு சென்றியிலே நிக்கிற அங்கிள் என்னைப் பாத்துச் சிரிச்சவர்'' என்பான். இன்னொருநாள் ''அங்கிள் கை ஆட்டி பாய் சொன்னார்'' என்பான். பிறகொருநாள் ''சொக்கிலே கிள்ளிச் சிரித்தவர்'' என்பான்.

இப்ப அப்படி எல்லாம் சொல்வதை நிறுத்திக்கொண்டுவிட்டான். என்னோடு வருவதில் அவனுக்கு இப்ப கொஞ்சமும் ஆர்வம் இல்லை.

''செல்லம் கூடப்போய்விட்டு வாங்கோ'' கலா கெஞ்சுகிறா.

''எனக்கு சலிப்படிக்கு அம்மா. அப்பா தான் போற இடமெல்லாம் என்னைக் கூட்டிக் கொண்டு திரியிறார். என்னை விளையாட விடுங்கோ''

''செல்லத்துக்கு என்ன வாங்கித் தாறது சொல்லுங்கோ'' மகனை அணைத்து தலையைத் தடவுகிறேன்.

''எனக்கு ஒண்டும் வேண்டாம் நான் வரயில்லை''

''கேக்''

''வேண்டாம்''

''கஜூ''

''வேண்டாம்''

''முந்திரி''

''வேண்டாம்''

''அப்பிள்''

''வேண்டாம்''

அண்மையில் ரி.வி இல் அவன் கிரிக்கெட் விரும்பிப் பார்ப்பது என் நினைவுக்கு வருகிறது. என்னிடம் வந்து ''அப்பா நான்தான் கங்குலி.. நான்தான் ஜெயவர்த்தனா.. நான்தான் ஜெயசூரியா'' என இடையிடையே சொல்லிக் கொண்டிருப்பான். கிரிக்கெட்டை வைத்து அவனை வழிக்கு கொண்டுவர எண்ணுகிறேன்.

‘‘அப்பா ஒரு விளையாட்டுச் சாமான் வாங்கித் தருவேன்’’

‘‘என்ன வாங்கித் தருவியள்?’’ ஆர்வமாகக் கேட்கின்றான்.

‘‘கிரிக்கட் போளும் பற்றும்’’

‘‘உண்மையா?’’ அவன் விழிகள் ஆவலுடன் விரிகின்றன. அந்த விழிகள் அவன் இப்ப என்னுடன் வருவதற்குச் சம்மதம் என்பதைச் சொல்லுகின்றன.

கலா அவனை உள்ளே அழைத்துச் சென்று உடுப்பு மாற்றி காலுக்குச் சப்பாத்துப் போட்டு தலைக்குத் தொப்பி அணிந்து அழைத்து வருகிறா.

நான் சென்று மோட்டார் சயிக்கிளை எடுத்து அதில் ஏறி அமர்ந்து கொள்ளுகிறேன்.

கலா போய் வெளி கேற்றைத் திறந்து வைத்துவிட்டு திரும்பிவந்து மகனைத் தூக்கி எனக்கு முன் சயிக்கிளில் இருத்துகின்றா.

நான் மோட்டார் சயிக்கிளில் மகனோடு புறப்பட்டுப் போகிறேன்.

**தெணியான்.**

**பயற்சி**

1. ‘‘ஓர் அம்சத்தை அடிப்படையாக வைத்து ஒரே வீச்சில் படித்து முடிக்கத் தூண்டும் ஆவலுடன் வளர்க்கப்படுவது சிறுகதை’’ என்ற கூற்றினை இச்சிறுகதை எவ்வகையில் பின்பற்றியுள்ளது?
2. சிறுவனுடன் சுற்றுலாவுக்கும் படம் பார்க்கவும் தந்தை சென்றமைக்கான காரணங்கள் என எவற்றையெல்லாம் ஊகிக்கும்படி கதை தூண்டுகின்றது?
3. கதையின் முற்பகுதிக்கும் இறுதிப் பகுதிக்கும் இடையிலான வேறுபாடுகள் யாவை?
4. வினா மூன்றில் உள்ள வேறுபாட்டை உணர்த்தும் வகையில் ஆசிரியர் காட்டியுள்ள வாழ்க்கைக் கோலங்களை எழுதுக.
5. கதைத் தலைப்பு எடுத்துக்கொண்ட கருவுக்கு எவ்வகையில் பொருந்துகிறது?

# அழைப்பிதழ்

அழைப்பிதழ் ஒன்றை எழுதும்போது அவதானிக்க வேண்டியவை

- தலைப்பு (குறித்த விடயம் தொடர்பானது)
- நிகழ்விடம்
- காலம் (திகதி, நேரம்)
- விளிப்பு (திரு, திருமதி, செல்வி முதலிய மரியாதை அடைமொழிகள்)
- விடயம் ( சுருக்கமாக அமைதல் வேண்டும்)
- அழைப்பவர் அல்லது அழைக்கும் நிறுவனம்
- பண்பான வார்த்தைப் பிரயோகம்
- கவரக்கூடியவகையில் அழகாக வடிவமைத்தல்

**பயிற்சி**

விளம்பரம், துண்டுப்பிரசுரம், சுவரொட்டி, அழைப்பிதழ் ஆகிய மாதிரி வடிவங்கள் சிலவற்றைச் சேகரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துங்கள். அவற்றுக்கிடையே அமைப்பில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை அவதானித்து எழுதுக.

**குழுச்செயற்பாடு**

உமது பாடசாலையில் இடம்பெறவிருக்கும் மாணவர் மன்றத்தின் 'கலை விழா' ஒன்றுக்கான அழைப்பிதழைத் தயாரிக்குக.

# மாதிரி அழைப்பிதழ்

சோமசுந்தரப்புலவர் தமிழ்மன்றம் வழங்கும்

## பாரதி விழா



**காலம்** : 12.09.2016 திங்கள், மாலை 4.00 மணி

**இடம்** : சோமசுந்தரப் புலவர் அரங்கம், பூங்கா வீதி, மன்னார்

**தலைமை** : திரு க.அன்புச் செல்வன் (தலைவர் – தமிழ்மன்றம்)

### நிகழ்ச்சி நிரல்

1. மங்கள விளக்கேற்றல்
2. தமிழ்மொழி வாழ்த்துப் பாடல்
3. வரவேற்புரை - செல்வி கு.கோகிலவாணி (செயலாளர், தமிழ்மன்றம்)
4. வரவேற்பு நடனம் - பாரதி கலைக்கழக மாணவர்கள்
5. தலைமையுரை
6. மயில் நடனம் - செல்வி எம்.எப் அனிசாபானு
7. பேச்சு - "மானுடம் பாடிய கவிஞன்" செல்வன் சி.கமலக்கண்ணன்
8. வில்லுப்பாட்டு - "காலத்தை வென்ற கவிஞன்" (சோமசுந்தரப் புலவர் தமிழ்மன்றம்)
9. பரிசில் வழங்குதல்
10. நாட்டிய நாடகம் - 'பாஞ்சாலி சபதம்" (நிருத்திய மன்றம்)
11. நன்றியுரை - செல்வி தே.மோகனா (பொருளாளர், தமிழ்மன்றம்)

# பத்திரிகைச் செய்தி

வெகுஜனத் தொடர்பு ஊடகங்களில் பத்திரிகைகள் பிரதானமானவை. பெருநகரங்கள் முதல் குக்கிராமங்கள் வரை சமூகத்தின் அனைத்துத் தரப்பினரையும் ஒன்று சேர்ப்பது பத்திரிகைகளின் மகத்தான பணியாக இருக்கிறது.



## ஹியூக்சுக்கு சச்சின் அஞ்சலி

தனது துடுப்பு மூலம் பிலிப் ஹியூசுக்கு, சச்சின் டெண்டுல்கர் தனது இரங்கலை தெரிவித்துள்ளார். ஆஸ்திரேலிய அணி வீரர் பிலிப் ஹியூக்ஸ், உள்ளூர் தொடரில் பவுன்சர்' பந்து தாக்கி உயிரிழந்தார். இந்தச் சம்பவம் உலகம் முழுவதிலும் உள்ள ரசிகர்களைச் சோகத்தில் ஆழ்த்தியுள்ளது. பலரும் தங்களது இரங்கலை தெரிவித்து வருகின்றனர். இந்நிலையில் இந்திய அணி ஜாம்பவான்' சச்சின், ஹியூக்ஸ் 25 வயதில் சாவு அடைந்ததை நினைவுபடுத்தும் வகையில், தனது 25 வயதில் விளையாடிய துடுப்பு மீது தொப்பியை வைத்து அஞ்சலி செலுத்தியுள்ளார். இது குறித்த படத்தை சச்சின், தனது டுவிட்டர்' இணையத்தளத்தில் வெளியிட்டுள்ளார். இந்த செய்தியில், எனது 25ஆவது வயதில் விளையாடிய துடுப்பு இது. ஹியூக்ஸ் ஆன்மா சாந்தியடையட்டும் என தெரிவித்துள்ளார். இதேபோல மேற்கிந்திய ஜாம்பவான்' விவியன் ரிச்சர்ட்ஸ், பாகிஸ்தான், நியூசிலாந்து மற்றும் இங்கிலாந்து அணி வீரர்கள், தென்னாபிரிக்காவின் டுபிளசி உள்ளிட்டோர் அஞ்சலி செலுத்தியுள்ளனர். (த)

*30.12.2014 - உதயன்*

பத்திரிகைகள்; நாளாந்தம், வாராந்தம், மாதமிருமுறை, மாதாந்தம் என்ற ஒழுங்கில் வெளிவருவன. செய்திகள், கட்டுரைகள், கதைகள், கவிதைகள், ஆசிரியர் தலையங்கம், தகவல்கள், பத்தி எழுத்துக்கள், விளம்பரங்கள் முதலிய பல்வேறு வடிவங்களையும் பல்வேறு துறைகளையும் உள்ளடக்கமாகக் கொண்டு வெளிவருவன.

பத்திரிகைச் செய்தி எழுதப்படும்போது அவதானிக்க வேண்டிய அம்சங்கள்:

- தலைப்பு
- விடயத் தெளிவு
- எளிய மொழிநடை (வழக்கிழந்த சொற்களைத் தவிர்த்தல்)
- தனித்துவமான சொற்பிரயோகம் (உ- ம் :- அப்பாவி மக்கள், கசிப்பு வேட்டை)
- தேவைக்கு ஏற்ப சுருக்கியும் விரித்தும் அமைதல்
- பக்கச் சார்பின்றி அமைதல்
- நம்பகத்தனமான அல்லது உறுதிப்படுத்தப்பட்ட செய்திகளை வெளியிடுதல்
- சமூகஅக்கறையை வெளிப்படுத்துதல்

**பயிற்சி**

ஒரு நாளாந்தப் பத்திரிகையிலும் ஒரு வாராந்தப் பத்திரிகையிலும் இடம்பெறும் விடயங்களை பட்டியற்படுத்துக.

**செயற்பாடு**

1. உமது பாடசாலையில் இடம்பெற்ற ஒரு கலைநிகழ்வு பற்றி பத்திரிகைச் செய்தி எழுதுக.
2. உமது பிரதேசம் தொடர்பான பாரம்பரியத் தகவல்களைத் திரட்டி அவற்றில் ஏதாவது ஒன்றைப் பற்றி எழுதுக.

## எழுத்துக்களின் ஒலிப்புமுறை

### மாற்றொலி

ஓர் எழுத்து வெவ்வேறு எழுத்துக்களுடன் சேர்ந்து சொற்களில் வரும்போது நுட்பமான ஒலிவேறுபாட்டைக் கொண்டமைகின்றது. அவ்வாறு வெவ்வேறு ஒலிகளைக் கொண்டு அமைவதை மாற்றொலிப்பு என்பர். வல்லின மெய் ஆறும் ஒன்றுக்கு மேற்பட்ட ஒலிப்புடையனவாக அமைகின்றன.

உதாரணம் :-

'க' என்ற வல்லின மெய் மூன்று வகையான ஒலிப்புடையனவாக அமைவதை நோக்குவோம்.

கடல், கப்பல் - இங்கு 'க' k போன்று ஒலிக்கின்றது.
தங்கம், பங்கம் - இங்கு 'க' g போன்று ஒலிக்கின்றது.
முகம், வேகம் - இங்கு 'க' h போன்று ஒலிக்கின்றது.
இதேபோன்று ஏனைய வல்லின மெய் எழுத்துக்களும் ஒலிப்பு வேறுபாடுகளுக்கு ஏற்ப ஒலிப்பதை வேறுபடுத்தி அறியலாம்.

**செயற்பாடு**

பின்வரும் சொற்களை ஒலிப்பு வேறுபாடுகளுக்கு ஏற்ப பகுத்து எழுதுங்கள்
க - அகல், பங்கம், கத்தி, கதவு, சிங்கம், இகல்
ச - சபை, அச்சம், பஞ்சம், சத்தம்
ட - வடம், மட்டம், வட்டம், இடம்
த - தம்பி, பதவி, இதயம், தாளம்
ப - சபலம், பட்டு, கோபம், பந்து
ற - பறவை, வெற்றி, பற்று, அறம்

## முதலெழுத்து

தமிழ்மொழிக்கு அடிப்படையான ஒலிகளையும் அவற்றின் வரிவடிவங்களையும் குறிக்கப் பயன்படும் எழுத்துக்கள் முதலெழுத்துக்கள் எனப்படும்.

அ,ஆ,இ,ஈ,உ,ஊ,எ,ஏ,ஐ,ஒ,ஓ,ஔ ஆகிய பன்னிரண்டு உயிரெழுத்துக்களும் க்,ங்,ச், ஞ்,ட்,ண்,த்,ந,ப்,ம்,ய்,ர்,ல்,வ்,ழ்,ள்,ற்,ன் ஆகிய பதினெட்டு மெய்யெழுத்துக்களும் கொண்ட முப்பது எழுத்துக்கள் முதல் எழுத்துக்கள் ஆகும்.

உயிரெழுத்துக்களை குறில், நெடில் என வகைப்படுத்துவர்.

குறுகிய ஓசையுடைய அ,இ,உ,எ,ஒ ஆகிய ஐந்து எழுத்துக்களும் குறில் அல்லது குற்றெழுத்து எனப்படும். இவற்றுக்குரிய மாத்திரை அளவு ஒன்று ஆகும்.

நெடிய ஓசையுடைய ஆ,ஈ,ஊ,ஏ,ஐ,ஓ,ஔ ஆகிய ஏழு எழுத்துக்களும் நெடில் அல்லது நெட்டெழுத்து எனப்படும். இவற்றுக்குரிய மாத்திரை அளவு இரண்டு ஆகும்.

மெய்யெழுத்துக்களை வல்லினம், மெல்லினம், இடையினம் என வகைப்படுத்துவர்.
வல்லினம் - க்,ச்,ட்,த்,ப்,ற்
மெல்லினம் - ங்,ஞ்,ண்,ந்,ம்,ன்
இடையினம் - ய்,ர்,ல்,வ்,ழ்,ள் **இவற்றிற்கான மாத்திரை 1/2 ஆகும்.**

# சார்பெழுத்து

*முதலெழுத்துக்களைச் சார்ந்து அவை பிறக்குமிடங்களிலே தோன்றி அவற்றின் மாத்திரை குறைந்தோ கூடியோ ஒலிக்கும் எழுத்துக்களை சார்பெழுத்துக்கள் என்பர். நன்னூல் பத்து வகையான சார்பெழுத்துக்களைக் கூறுகின்றது.*

1. உயிர்மெய்
2. ஆய்தம்
3. உயிரளபெடை
4. ஒற்றளபெடை
5. ஐகாரக் குறுக்கம்
6. ஔகாரக் குறுக்கம்
7. மகரக் குறுக்கம்
8. ஆய்தக் குறுக்கம்
9. குற்றியலுகரம்
10. குற்றியலிகரம்

## (1) உயிர்மெய்

மெய்யெழுத்துக்களும் உயிர் எழுத்துக்களும் ஒன்றுடன் ஒன்று இணைவதனால் ஏற்படும் ஒலிச் சேர்க்கைகளினால் உயிர்மெய் எழுத்துக்கள் என்ற ஒலிவடிவங்கள் பிறக்கின்றன. அவற்றையே உயிர்மெய் எழுத்துக்கள் என்பர்.

*க் + அ = க*
*க் + ஆ = கா*

*உயிர்மெய்க் குறில் 18 × 5 = 90*
*உயிர்மெய் நெடில் 18 × 7 = 126*
*உயிர்மெய் எழுத்துக்கள் 18 × 12 = 216*
*உயிர்மெய் குற்றெழுத்துக்கள் (க, ங, ச, ஞ) ஒரு மாத்திரை அளவினையும், உயிர்மெய் நெட்டெழுத்துக்கள் (கா, ஙா, சா, ஞா) 2 மாத்திரை அளவினையும் உயிரேறிய அளவாகக் கொள்ளும்.*

## (2) ஆய்தம்

முப்புள்ளி கொண்ட முக்கோண வடிவ ஃ எழுத்து ஆய்த எழுத்து எனப்படும். இது குற்றெழுத்துக்கும் வல்லின மெய் எழுத்துக்கும் இடையில் அவற்றைச் சார்ந்து வரும். இவ்வாறு சார்ந்து வருகையில் தமது அரை மாத்திரை அளவிலிருந்து குறுகாது ஒலிப்பதனால் இதனை முற்றாய்தம் எனவும் கூறுவர். ***முற்றாய்தம் மாத்திரை 1/2 ஆகும்.***

*உதாரணம் :- எஃகு, அஃது*

### (3) அளபெடை

அளபெடை என்பது ஓர் எழுத்து தனக்குரிய மாத்திரையில் இருந்து நீண்டு ஒலித்தலாகும். இது இரு வகைப்படும்.

உயிரளபெடை - செய்யுள்களிலே ஓசை குறையுமிடத்து நெட்டுயிர்கள் அச்சொல்லின் முதலிலும் இடையிலும் கடையிலும் தமக்குரிய மாத்திரையில் இருந்து நீண்டு ஒலித்தல் உயிரளபெடை எனப்படும். இதற்கு அடையாளமாக அதன் இன எழுத்து அருகில் வரும்.

முதல் - ஓஒதல்
இடை - தொழாஅள்
கடை - நசைஇ

இங்கு நெட்டெழுத்துக்கள் நீண்டு ஒலிக்கும்போது தமது இனமாகிய உயிரெழுத்துக்கள் முதலிலும் இடையிலும் கடையிலும் எழுதப்படுவதை அவதானிக்கலாம். எனவே உயிரளபெடை மூன்று மாத்திரை அளவு ஒலிக்கும். சில சந்தர்ப்பங்களில் மூன்று மாத்திரை அளவைவிடக் கூடியும் ஒலிக்கும்.

உதாரணம் :- ஒருவரை தூரத்தில் நின்று அழைக்கும்போது
வியாபாரிகள் பொருட்களை விற்கும்போது
இராக ஆலாபனையின்போது

### (4) ஒற்றளபெடை

செய்யுள்களிலே ஓசை குறையுமிடத்து மெல்லின எழுத்துக்களும் ர், ழ் தவிர்ந்த இடையின எழுத்துக்கள் நான்கும் ஆய்தமும் தமக்குரிய மாத்திரையில் இருந்து நீண்டு ஒலித்தல் ஒற்றளபெடை எனப்படும். (ங்,ஞ்,ண்,ந்,ம்,ன்,ய்,ல்,வ்,ள்). **ஒற்றளபெடைக்கு மாத்திரை ஒன்று.** உ- ம்: இலங்ங்கு வெண்ண்பிறை, அஃஃது, அரண்ண் கொண்ட வடுதோளினர்

### (5) ஐகாரக்குறுக்கம்

'ஐ' காரம் தன் மாத்திரையிலிருந்து குறுகி ஒலித்தல் ஐகாரக் குறுக்கம் எனப்படும். 'ஐ' என்ற எழுத்து தனித்து சுட்டும்போதும் அளவெடுக்கும்போதும் மட்டும் நெடிலுக்குரிய இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும். ஏனைய இடங்களில் குறில்போல ஒரு மாத்திரை அளவே ஒலிக்கும்.

ஐ காரம் மொழிக்கு முதல், இடை, கடை என்ற மூன்று நிலைகளிலும் ஒலிக்கும்
முதல் - வையகம், தையல்
இடை - இளைஞன், கலைஞன்
கடை - தவளை, தலை

இங்கு மூன்று நிலைகளிலும் 'ஐ' காரம் தனது இரண்டு மாத்திரையில் இருந்து குறுகி ஒரு மாத்திரையாக ஒலிக்கிறது.

### *(6)* ஔகாரக் குறுக்கம்

‘ஔ’ காரம் தன் மாத்திரையில் இருந்து குறுகி ஒலிப்பது ஔகாரக் குறுக்கம் ஆகும். ‘ஔ’ என்ற எழுத்து தன்னைச் சுட்டும்போதும் அளபெடுக்கும்போதும் மட்டும் நெடில்போல இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும். ஏனைய இடங்களில் குறில்போல ஒரு மாத்திரை அளவே ஒலிக்கும்.

உதாரணம் :- ஔவை, வௌவால், சௌகரியம், கௌரி

### *(7)* மகரக்குறுக்கம்

‘ன’கர, ‘ண’ கரங்களை அடுத்தும் ‘வ’கரத்தின் முன்னும் ‘ம’கரம் தன் மாத்திரையில் இருந்து குறுகி ஒலித்தல் மகரக் குறுக்கம் எனப்படும்.

போன்ம்
கேண்ம்
தரும் வளவன், மூழ்கும் வள்ளம்

தற்காலத் தமிழில் போன்ம் என்பது போலும் எனவும் கேண்ம் என்பது கேளும் என்றும் வழங்கப்படுகிறது. அதேபோல தற்கால தமிழில் வகரத்தின் முன்பு மகரம் குறுகி ஒலிப்பதில்லை.

அவன் வரும் வரை இருப்போம்
அவர்களும் வந்தார்கள்

### *(8)* ஆய்தக் குறுக்கம்

நிலைமொழி ஈற்றுச் சொற்களில் ‘ல’ கர ‘ள’ கரம் வந்து வருமொழியில் ‘த’கரம் வருமாயின் ஆய்தம் தன் மாத்திரையில் இருந்து குறுகி ஒலிக்கும். அவ்வாறு ஆய்தம் தன் அரை மாத்திரையில் இருந்து கால்மாத்திரையாக குறுகி ஒலித்தல் ஆய்தக் குறுக்கம் எனப்படும்.

அல் + திணை = அஃறிணை
முள் + தீது = முஃடீது

### *(9)* குற்றியலுகரம்

தனிக்குற்றெழுத்து அல்லாத மற்றைய எழுத்துக்களின் பின் சொல்லின் இறுதியில் வல்லின மெய்யின்மேல் ஏறிவரும் உகரம் குற்றியலுகரம் எனப்படும்.
இது ஆறு வகைப்படும்.

1. நெடில் தொடர்க் குற்றியலுகரம் - ஆடு, நாடு
2. ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம் - எஃகு, இஃது
3. உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் - வரகு, பயறு

4. வன்றொடர்க் குற்றியலுகரம் - கொக்கு, பேச்சு
5. மென்றொடர்க் குற்றியலுகரம் - சங்கு, பஞ்சு
6. இடைத்தொடர்க் குற்றியலுகரம் - பெய்து, மார்பு

### சுட்டெழுத்து

அ, இ, உ என்ற மூன்று உயிரெழுத்துக்களும் சொல்லின் முதலில் நின்று பொருள்களைச் சுட்டிக்காட்டும்போது சுட்டெழுத்து எனப்படும். இவற்றை அகச்சுட்டு, புறச்சுட்டு என இரண்டு வகைப்படுத்துவர்.

#### அகச்சுட்டு

சொல்லின் அகத்துறுப்பாய் நின்று சுட்டப்படும் பொருளை உணர்த்துவது அகச் சுட்டு ஆகும். இங்கு சுட்டெழுத்தையும் சுட்டப்படும் பொருளையும் பொருள்தரப் பிரிக்கமுடியாது.

உதாரணம் :- அவன், இவன், உவன்
அது, இது, உது

#### புறச்சுட்டு

சொல்லின் புறத்துறுப்பாய் நின்று சுட்டப்படும் பொருளை உணர்த்துவது புறச் சுட்டு ஆகும். இங்கு சுட்டெழுத்தையும் சுட்டப்படும் பொருளையும் பொருள்படப் பிரிக்கலாம்.

உதாரணம் :- அவ்வீடு, இவ்வீடு, உவ்வீடு
அக்குதிரை, இக்குதிரை, உக்குதிரை

- தற்காலத்தில் 'உ' கரச்சுட்டு பெரிதும் பயன்பாட்டில் இல்லை. யாழ்ப்பாணப் பேச்சுவழக்கில் 'உது', 'உந்த' என பயன்படுத்தப்படுகிறது.

### இனவெழுத்து

இடம், ஒலிக்கும் முயற்சி, மாத்திரை அளவு, பொருள், வரிவடிவம் ஆகியவற்றில் பெரிதும் ஒற்றுமையுடைய எழுத்துக்கள் இனவெழுத்துக்களாகும்.
குற்றெழுத்துக்கு நெட்டெழுத்து இனவெழுத்து ஆகும்.

**உயிரெழுத்துக்கள்**

| | |
|---|---|
| அ | ஆ |
| இ | ஈ |

| | |
|---|---|
| ஊ | ஊ |
| எ | ஏ |
| ஒ | ஓ |
| ஐ - | இ |
| ஔ - | உ |

- ஐ, ஔ இரண்டு நெட்டெழுத்துக்களும் ஒலிப்பின் அடிப்படையில் முறையே இ, உ ஆகியவற்றை இனமாகக் கொள்ளுகின்றன.

## சந்தியக்கரம் அல்லது கூட்டுயிர்

ஐ, ஔ ஆகிய இரண்டு உயிரெழுத்துக்களும் சந்தியக்கரம் என அழைக்கப்படுகின்றது. இவற்றை கூட்டுயிர், கூட்டொலி எனவும் அழைப்பர். பண்டைக்காலத்தில் ஐ என்பது அஇ எனவும் ஔ என்பது அஉ எனவும் எழுதப்பட்டன. தற்காலத்தில் இவை அய், அவ் என்றும் எழுதப்படுகின்றன.

உதாரணம் :- அய்யர், அவ்வை

வல்லினத்திற்கு மெல்லினம் இனவெழுத்து ஆகும். இடையின எழுத்துக்களுக்கு இனவெழுத்துக்கள் இல்லை.

| **வல்லினம்** | **மெல்லினம்** |
|---|---|
| க் | ங் |
| ச் | ஞ் |
| ட் | ண் |
| த் | ந் |
| ப் | ம் |
| ற் | ன் |

## வினாவெழுத்து

வினாப்பொருளை உணர்த்திவரும் எ, யா, ஆ, ஓ, ஏ ஆகிய ஐந்து உயிர் எழுத்துக்களும் வினாவெழுத்துக்கள் ஆகும்.

- எ, யா இரண்டும் மொழிமுதலில் வினாவெழுத்துக்களாகும்
  என்ன? யார்?
- ஆ, ஓ இரண்டும் மொழி இறுதியில் வினாவெழுத்துக்களாகும்.
  அவனா? அவனோ?
- ஏ - மொழி முதலிலும் மொழி இறுதியிலும் வினாவெழுத்தாக வரும்.
  ஏன்? அவனே?

## முதனிலை எழுத்துக்கள்

ஓர் எழுத்து சொல்லாக்கத்தில் முதலில் இடம்பெறுதல் முதனிலை எழுத்து எனப்படும். பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும் க், ச், த், ப், ந், ம், ய், வ், ஞ் என்னும் உயிரேறிய ஒன்பது மெய்யெழுத்துக்களும் மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்களாகும்.

உதாரணம் :-

***(அ - ஔ)***

அன்னை, ஆடு, இலை, ஈதல், உரல், ஊசி, எது, ஏறு, ஐந்து, ஒன்று, ஓடு, ஔவை.

க், ச், த், ப் என்னும் வல்லின மெய்கள் நான்கும் பன்னிரண்டு உயிர் எழுத்துக்களுடனும் சொல்லில் முதலில் வரும் .

***(க -கௌ)***

கடல், காடு, கிளி, கீரி, குயில், கூடு, கெடு, கேடு, கை, கொக்கு, கோடு, கௌரி

***(ச - சௌ)***

சத்தம், சாதனம், சினம், சீற்றம், சுகம், சூறாவளி, செல்வம், சேவை, சைவம், சொல், சோறு, சௌக்கியம்

***(த - தௌ)***

தடி, தாகம், திகதி, தீது, தும்பு, தூது, தெளிதல், தேகம், தையல், தொழில், தோகை, தௌவை (தமக்கை)

***(ப- பௌ)***

பசு, பாடு, பிடி, பீடு, புத்தகம், பூடு, பெரிது, பேசு, பை, பொங்கு, போதனை, பௌராணிகர்

★ ந், ம் என்னும் மெய்கள் இரண்டும், பன்னிரண்டு உயிர் எழுத்துக்களுடனும் சொல்லில் முதலில் வரும்

***(ந - நௌ)***

நண்பன், நாள், நிலம், நீளம், நுங்கு, நூல், நெற்றி, நேரம், நைடதம், நொடி, நோன்பு, நௌவி (மான்)

***(ம - மௌ)***

மரம், மான், மிளகு, மீன், முயல், மூலை, மென்மை, மேகம், மையல், மொழி, மோதகம், மௌனம்.

★ வகர மெய் அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ, ஔ என்னும் எட்டு உயிருடனும் சேர்ந்து மொழிக்கு முதலில் வரும். **உ -ம்** - வயல், வாசல், விறகு, வீடு, வெயில், வேலை, வையகம், வௌவால்

★ யகர மெய் அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ என்னும் ஆறு உயிருடனும் சேர்ந்து மொழிக்கு முதலில் வரும். **உ -ம்** - யமன், யானை, யுகம், யூகம், யோகம், யௌவனம் (இளமை)

★ ஞகர மெய் அ, ஆ, எ, ஒ என்னும் நான்கு உயிருடனும் சேர்ந்து மொழிக்கு முதலில் வரும். **உ -ம்** - ஞமலி (நாய்), ஞானம், ஞெகிழி ( நெருப்பு), ஞொள்கு (அஞ்சு)

மேலே குறிப்பிட்டவை தவிர்ந்த சில மெய்யெழுத்துக்கள் தமிழுக்கு வந்து சேர்ந்த ஆங்கிலம், கிரந்தம் முதலான பிறமொழிச் சொற்களுடன் மொழி முதலாக வருகின்றன.

உதாரணம் :- ட - டாக்டர், டிரைவர், டீசல், டை
ற - றாத்தல், றாக்கை, றீகன், றேடியோ, றைவர், றோட்டு
ர - ரஜனி, ராசி, ரிஷபம், ரீட்டா, ருசி, ரெடி
ல - லதா, லாச்சி, லிங்கம், லீலை, லுங்கி, லூர்து, லேஞ்சி, லைலா, லொத்தர், லோட், லௌகீகம்

கிரந்த எழுத்துக்களும் தமிழுக்கு வந்து சேர்ந்த பிறமொழிச் சொற்களில் மொழி முதலாக வருகின்றன.

உதாரணம் :- ஜ - ஜனாதிபதி, ஜானகி
ஷ - ஷரத்து, ஷாஜகான்
ஸ - ஸலாம்
ஹ - ஹர்த்தால், ஹஜ், ஹோமியோபதி,

## இறுதிநிலை எழுத்துக்கள்

ஓர் எழுத்து சொல்லாக்கத்தில் சொல்லின் இறுதியில் இடம்பெறுதல் இறுதிநிலை எழுத்து எனப்படும்.

(1) எ தவிர்ந்த பதினொரு உயிர் எழுத்துக்களும் சொல்லாக்கத்தில் இறுதிநிலை எழுத்துக்களாக வரும்.

உதாரணம் :- பல, பலா, படி, தீ, கொக்கு, பூ, அவனே, பை, நொ (வருத்தம்), போ, வௌ

*(2)* மெய் எழுத்துக்களில் ண், ம், ன் ஆகிய மூன்று மெல்லின எழுத்துக்களும் ய், ர், ல், ள், ழ் ஆகிய ஐந்து இடையின எழுத்துக்களும் சொல்லாக்கத்தில் இறுதிநிலை எழுத்துக்களாக வருகின்றன.

| | | |
|---|---|---|
| உதாரணம் :- | ண் | - மண் |
| | ம் | - மணம் |
| | ன் | - மான் |
| | ய் | - மெய் |
| | ர் | - பார் |
| | ல் | - கால் |
| | ள் | - வாள் |
| | ழ் | - தமிழ் |

*(3)* வல்லின மெய் எழுத்துக்கள் இறுதிநிலையில் வருவதில்லை. ஆனால் தற்காலத்தமிழில் பிறமொழிச் சொற்களுடன் இணைந்து வருகின்றன.

| | | |
|---|---|---|
| உதாரணம் :- | க் | - ஈராக் |
| | ச் | - டோச் |
| | ட் | - டேவிட் |
| | த் | - பக்தாத் |
| | ப் | - ஜோசப் |
| | ற் | - கரற் |

## போலி

ஒரு சொல்லிலே வரும் ஓர் எழுத்துக்குப் பதிலாக வேறு எழுத்து நின்று பொருள் வேறுபடாதிருப்பின் அது போலியாகும். இது சொல்லின் முதலிலும் இடையிலும் இறுதியிலும் வரும்.

| | **இயல்பு** | **போலி** |
|---|---|---|
| மொழிமுதல் | யமன் | நமன் |
| | மையல் | மையல் |
| மொழி இடை | இலஞ்சி | இலைஞ்சி |
| | அரசு | அரைசு |
| மொழி இறுதி | பந்தல் | பந்தர் |
| | அறம் | அறன் |

## மெய் மயக்கம்

சொல்லின் இடையில் வரும் மெய்யெழுத்துக்கள் இரட்டித்து அல்லது பிறமெய்களுடன் இணைந்து வருவது மெய்மயக்கம் எனப்படும். இது உடனிலை மெய்மயக்கம், வேற்றுநிலை மெய்மயக்கம் என இரண்டு வகைப்படும்.

### உடனிலை மெய்மயக்கம்

ஒரே மெய்யெழுத்து சொற்களின் இடையில் இரட்டித்து வருவது உடனிலை மெய்மயக்கம் எனப்படும். ர், ழ் தவிர்ந்த பதினாறு மெய்யெழுத்துக்களும் தம்முடன் தாம் சேர்ந்து வரும்.

க்க் - பக்கம்
ச்ச் - மச்சம்
ட்ட் - விட்டம்
த்த் - பத்து
ப்ப் - வெப்பம்
ற்ற் - வெற்றி
ங்ங் - இங்ஙனம்
ஞ்ஞ் - விஞ்ஞானம்
ண்ண் - தண்ணீர்
ந்ந் - அந்நியன்
ம்ம் - அம்மன்
ன்ன் - மன்னன்
ய்ய் - வெய்யில்
ல்ல் - பல்லி
வ்வ் - செவ்வி
ள்ள் - வெள்ளம்

### வேற்றுநிலை மெய்மயக்கம்

ஒரு மெய்யெழுத்து சொற்களின் இடையில் குறிப்பிட்ட சில பிற மெய்களுடன் இணைந்து வருதல் வேற்றுநிலை மெய்மயக்கம் எனப்படும்.

க், ச், த், ப் தவிர்ந்த பதினான்கு மெய்யெழுத்துக்களும் சொற்களின் இடையில் இணைந்து வரும்.

ட் - நட்பு
ற் - சொற்கள்
ங் - பங்கு

ஞ் - பஞ்சு
ண் - வண்டு
ந் - பந்து
ம் - அம்பு
ன் - மன்று
ய் - பாய்க
ர் - தேர்தல்
ல் - வெல்க
வ் - காவ்யம் (காவியம்)
ழ் - கீழ்மை
ள் - கள்வன்

- சொற்களில் ய், ர், ழ் ஆகிய மெய்கள் வரும்போது மூன்று மெய்கள் சேர்ந்து வருதலும் உண்டு. மூன்றாவது மெய் உயிர்மெய்யாக இருக்கும்.

வாய்க்கால்
தேர்ச்சி
வாழ்க்கை

**பயிற்சி**

1. மாத்திரை என்பது யாது?
2. பின்வருவம் சொற்களில் முதற்போலி, இடைப்போலி, கடைப்போலி ஆகியவற்றை வேறுபடுத்தி எழுதுக.
   கோயில், மையல், பக்கல், சாம்பர், நேயம், கலன், அறன்

# முன்னொட்டுக்களும் பின்னொட்டுக்களும்

நக்கீரன், மீயுயர், விஞ்ஞானம், அனுகூலம் முதலான சொற்கள் கீரன், உயர், ஞானம், கூலம் எனும் சொற்களின் முன்னால் ந, மீ, வி, அனு முதலிய ஒட்டுக்களை முன்னால் சேர்த்தமையால் உருவானவை.

*ந + கீரன் = நக்கீரன்*

*மீ + உயர் = மீயுயர்*

*வி + ஞானம் = விஞ்ஞானம்*

*அனு + கூலம் = அனுகூலம்*

இதேபோல பாற்காரன், குணவதி, கொடையாளி, பண்பாடு முதலான சொற்கள் பால், குணம், கொடை எனும் சொற்களுடன் காரன், வதி, ஆளி முதலிய ஒட்டுக்களை பின்னால் சேர்த்தமையால் உருவானவை.

*பால் + காரன் = பாற்காரன்*

*குணம் + வதி = குணவதி*

*கொடை + ஆளி = கொடையாளி*

இவ்வாறு தமிழ்ச் சொல்லாக்கத்தில் முன்னொட்டுக்களும், பின்னொட்டுக்களும் இணைந்து சொல்லாக்கம் பெறுவது மொழியாக்க வளத்துக்கு முக்கியமானதாகும்.

பொதுவாக முன்னொட்டுக்கள் தமிழில் குறைவு. பின்னொட்டுக்களே அதிகம்.

இங்கு சில முன்னொட்டுக்களும் பின்னொட்டுக்களும் தரப்பட்டுள்ளன. மேலும் புதுப்புதுச் சொல்லாக்கத்திற்கு இவை எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன என்பதை மாணவர்கள் அறிந்து கொள்ளலாம்.

## முன்னொட்டுக்கள்

*அல் - அஃறிணை, அல்வழி, அன்மொழி*

*மறு - மறுமலர்ச்சி, மறுதலை*

முன் - முன்னோக்கு

அ - அநீதி

பிர - பிரயோகம்,பிரவாகம்

அவ - அவமதி, அவமானம்

சுய - சுயவரம்

## பின்னொட்டுக்கள்

ஆளி - நோயாளி
- பாட்டாளி
- முதலாளி
- விருந்தாளி

வாதி - அரசியல்வாதி
- நியாயவாதி
- யதார்த்தவாதி

மார் - குருமார்
- தம்பிமார்
- தங்கைமார்

வான் - கனவான்
- சத்தியவான்
- நீதவான்

மான் - கோமான்
- பக்திமான்
- கல்விமான்

மை - பெருமை
- அடிமை
- குடிமை
- தலைமை
- பொறுமை

பாடு - இடர்பாடு
- உடன்பாடு
- தலைப்பாடு
- புறப்பாடு
- வெளிப்பாடு

ஈடு - இடையீடு
- காப்பீடு
- குறியீடு
- முதலீடு

கோள் - எடுகோள்
- கடல்கோள்
- கருதுகோள்
- மேற்கோள்

அம் - ஆட்டம்
- கூட்டம்
- மயக்கம்
- விளக்கம்

படை - அடிப்படை
- ஆற்றுப்படை
- வெளிப்படை

உறை - உள்ளுறை
- கையுறை
- வாயுறை

# 5 அட்டியல்

**கே. எஸ். சிவகுமாரன் (1936)**

*இவர் மட்டக்களப்பில் பிறந்தவர். கொழும்பை வாழ்விடமாகக் கொண்டவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதி வருபவர். விமர்சனம், பத்தி எழுத்து, இலக்கியம், சினிமா தொடர்பான 30 ற்கும் மேற்பட்ட நூல்கள் இதுவரை வெளியாகியுள்ளன.*

*மத்தில்ட்டா ஓர் அழகி. மனதைக் கவரும் தோற்றம். எவரையும் வசீகரிக்கும் குணம். ஆனால் அவளுக்கென்று ஆஸ்தியொன்றும் கிடையாது. மணஞ்செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது, பிரஞ்சு பொதுக்கல்வி அமைச்சில் பணிபுரியும் ஓர் எழுதுவினைஞரைக் கைப்பிடிக்க வேண்டியதாயிற்று. அவனுக்கோ சம்பளம் மிகக்குறைவு.*

*மத்தில்ட்டா கற்பனையில் இன்ப சுகங் கண்டாள். ஆடம்பரமும், சொகுசும், ஐஸ்வரியமும் கொண்ட வாழ்க்கையை அவள் விரும்பினாள். கனாக் கண்டாள். புகழ் பூத்த பிரமுகர்களுடன் கைகோர்த்துப் பவனி வருவது என்றெல்லாம் அவள் மனோபாவனை செய்துகொண்டாள்.*



*உல்லாசவாழ்க்கை நடத்தும் மேல்தட்டு மக்கள்போல தானும் வாழ விரும்பி அந்த வாழ்க்கைக் கோலங்களைத் தானும் பூண தன்னைத் தயார்ப் படுத்திக்கொண்டாள்.*

*அவள் கணவன் சில நாணயங்களை கஷ்டப்பட்டுச் சேமித்து வைத்திருந்தான். அவற்றில் 400 பிராங்குகளை அவள் தனக்கென எடுத்துக்கொண்டு ஒரு புதிய ஆடையை வாங்கிக்கொண்டாள்.*

*மடாம் பொரஸ்டியே என்றொரு பணக்காரச் சிநேகிதி இருந்தாள். அவளிடமிருந்து வைர அட்டியல் ஒன்றை மத்தில்ட்டா கடனாகப் பெற்றுக் கொண்டாள். இத்தனை ஆடம்பரமும் எதற்காக?*

பொதுக் கல்வித்துறை அமைச்சர், அவளையும் அவள் கணவனையும் விருந்தொன்றுக்கு அழைத்திருந்தார். அவ்விருந்தில் கலந்துகொள்ளும் மற்றவர்களைப் போலத் தானும் தன் கணவனும் ஆடம்பரமும் நாகரிகமும் கொண்டவர்கள் என்பதைக் காட்ட வேண்டாமா? அதற்காகத்தான்.

விருந்தில் (அதாவது 'பார்ட்டி'யில்) மத்தில்ட்டா எல்லோரையும் விடச் சோபித்து நின்றாள். மயங்கினாள் அந்த மாது. ஆசையும் உணர்ச்சியும் ஒருங்கே அவளை ஆட்டிப் படைத்தன. ஆனந்த மிகுதியினால் அவள் கிளர்ச்சியுற்றாள். அவள் அழகின் பெருமிதம், அவள் முயற்சியின் பலிதம் யாவுமே அவளை மகிழ்ச்சி என்ற மனோரதிய மேகக் கூட்டங்களிடையே தவழவிட்டன. அவள்மீது பிறர் காட்டும் கரிசனை, பிறர் அவளைப் போற்றிப் புகழல், அவள் லாவண்யத்தில் மருண்டவர் பிதற்றிய ரசனை மொழிகள் யாவுமே அவள் ஆசைக் கதவுகளைத் திறந்துவிட்டன. அந்தப் பூரண சுகம் அம்மங்கையின் இதயவீட்டில் இனிமையைச் சூழவிட்டது.

ஆனால் மத்தில்ட்டா ஓர் அப்பாவிப் பெண். அந்த ஆனந்தமான இரவின் பின் வீடு திரும்பியபொழுது கடனாக வாங்கிக் கட்டியிருந்த வைர அட்டியலைக் காணோம். பகீரென்றது அவளுக்கு. வீட்டில் எல்லா இடங்களிலும் தேடியாயிற்று. கடன் சொத்து காணாமலே போயிற்று. அவள் கணவன் அடைந்த துயரும் அவஸ்தையும் அவலமும் சொல்லொணா. அந்த வைர அட்டியலின் பெறுமதி 36 ஆயிரம் பிராங்குகள்.

ஒரு சிறிய உத்தியோகத்தன் இந்தத் தொகைக்கு எங்கு போவான்? கடன், கடன், கடன். கடனாகவே வாங்கிச் சேர்த்த தொகையுடன் ஒரு வைர அட்டியலை வாங்கி, பொரஸ்டியேயிடம் மத்தில்ட்டா கொடுத்தபொழுது, அது வித்தியாசமான தனக்குச் சொந்தமில்லாத நகை என்பதை முன்னையவள் அறியவில்லை. தான் கடனாகக் கொடுத்த நகைதான் திரும்பி வந்திருக்கிறது என்று பொரஸ்டியே நினைத்தாள்.

மத்தில்ட்டாவும் கணவனும் துன்பக் கேணியில் நீந்தினார்கள். வறுமை அவர்களைத் தொடர்ந்தது. வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க மாடாக உழைத்தார்கள். தன் கணவனுக்கு உதவ அவளும் மனம் மாறினாள். தனக்காகக் கணவன் செய்த தியாகங்களை நினைத்துப் பார்த்தாள். அவனுடைய உழைப்பில் தானும் பங்குகொண்டாள்.

தனது தேவைக்கென வைத்திருந்த வேலையாளை நீக்கித் தானே வீட்டு வேலைகளைச் செய்தாள். தனக்கென்று செலவுகள் எதனையும் அவள் வைத்துக்கொள்ள விரும்பவில்லை. தனது ஆடம்பரத்தையும் சொகுசையும் துறந்தாள்; மறந்தாள்.

கிழிந்து கசங்கிய உடைகளைத்தான் அவள் தரித்தாள்.

பூஞ்சணமும் பாசியும் பிடித்த சட்டி, பானைகள் போன்றவற்றைத் தானே

தேய்த்து அலம்பினாள். அவள் பொன்னான கை புண்ணாக மாறுமட்டும் அவள் உழைத்தாள்.

ஒரு காலத்தில் கண்டவர் மயங்கும் கட்டழகியாக இருந்த மத்தில்ட்டா இப்பொழுது நடைப்பிணமானாள். தேய்ந்து போனாள்.

பத்து வருடக் கடும் உழைப்பு, கட்டவேண்டிய கடன் தொகையை அவர்களுக்குத் திரட்டித் தந்தது. அப்பாடா! கடனை அவர்கள் தீர்த்துவிட்டார்கள்.

ஒரு ஞாயிற்றுக்கிழமை - யதேச்சையாக மடாம் பொரஸ்டியேயை மத்தில்ட்டா சந்தித்தாள். சந்தித்தபோது, பத்து வருடங்களாக தானும் தன் கணவனும் பட்ட பாட்டை எடுத்துரைத்தாள். பொரஸ்டியே கொடுத்த வைர அட்டியல் காணாமற் போனமை, கடன் வாங்கியமை, புதிய நகை வாங்கியமை, கடனைத் தீர்க்கக் கடும் உழைப்பு, உழைப்பின் பயனாகப் பணம் சேர்ந்தமை போன்ற விபரங்களை மத்தில்ட்டா எடுத்துக் கூறினாள். பொரஸ்டியே அதிர்ச்சியானாள். தன்னிடம் திருப்பிக் கொடுக்கப்பட்ட அட்டியல் தான் கொடுத்த அதே அட்டியல் என்றுதான் அவள் இவ்வளவு காலமும் நினைத்து வந்திருக்கிறாள். ஆனால் மத்தில்ட்டா கூறும் கதையைப் பார்த்தால் கதை வேறெங்கோ அல்லவா போய்விட்டது என நினைத்தாள்.

பின்னர்தான் அவள் அந்த உண்மையை மத்தில்ட்டாவிடம் கூறினாள்.

தான் கடனாகக் கொடுத்த வைர அட்டியல் உண்மையில் வைர அட்டியலே அல்ல. அது ஒரு இமிட்டேஷன் நகை. விலை ஆக 10 பிராங்குகள்தான்.

**மூலம் - கீ.டீ. மோப்பஸான் (பிரான்ஸ்)**
**மொழிபெயர்ப்பு - கே.எஸ். சிவகுமாரன்.**
**'பிறமொழிச் சிறுகதைகள் சில'**

**பயிற்சி**

1. ஆடம்பர மோகம் ஒருவரது வாழ்வில் ஏற்படுத்தும் தாக்கம் பற்றி இச்சிறுகதை எவ்வாறு எடுத்துக்காட்டுகின்றது?
2. மனிதர்களது நல்ல உணர்வுகள் கதை முழுவதிலும் எவ்வகையில் வெளிப் படுத்தப்படுகின்றன?
3. இயல்பாக ஒரு தமிழ்ச்சிறுகதை வாசிப்பது போன்ற அனுபவம் ஏற்படும் வகையில் தமிழாக்கம் செய்யப்படுவதற்கு மொழிபெயர்ப்பு ஆசிரியர் கையாண்டுள்ள உத்திகள் எவை?
4. இக்கதையைப் படித்து முடித்த பின்னர் உங்களுக்குள் ஏற்படும் உணர்வலைகளை அடிப்படையாகக் கொண்டு அடுத்தகட்டங்கள் குறித்த சிறு கட்டுரை வரைக.

# சிறுகதை எழுதுவது எப்படி?

அன்பு மாணவர்களே! இதுவரை பல கதைகளை படித்திருப்பீர்கள். கதை எழுத வேண்டும் என்ற ஆர்வத்தை பெற்றிருப்பீர்கள். அதற்கான வழிகள் பற்றி வல்லுநர்கள் கூறுவதை படித்துப்பாருங்கள்.

சிறுகதைகள் குறுகிய காலத்தில் படித்து முடிப்பதற்காகவே தோன்றின; எனினும், அது ஒன்று மட்டுமே அதன் இலக்கணமாகி விடவில்லை. இலக்கியம் பல பிரிவுகளை உடையது; ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு வடிவம் உண்டு. தனித்தனியே சில இலக்கணங்கள் உள்ளன. எனவே, குறுகிய காலத்தில் படித்து முடிக்க கூடியது. என்பது சிறுகதைகளின் வெளி வடிவமைப்புக்குரிய இலக்கணமேயன்றி, அதன் உள்ளமைப்புக்குரிய இலக்கணங்கள் வேறு. இந்த இருவகை அமைப்புகளுக்கும் உரிய இலக்கணங்களை ஒன்று சேர்த்து, 'ஸாமர்ஸெட் மாம்'' என்ற மேலைநாட்டு சிறுகதை ஆசிரியர் கூறுகிறார்:

''சிறந்த சிறுகதையில் நல்ல கதையம்சம் இருக்க வேண்டும். அது ஏதாவது ஒரு நிகழ்ச்சியை மட்டுமே விவரிப்பதாக இருக்க வேண்டும். ஒரு மூச்சில் படித்து முடிக்கக்கூடியதாக அதை அமைக்க வேண்டும். அது தனக்கென ஒரு தனிப்பண்பைக் கொண்டிருக்க வேண்டும். படிப்போர் மனதில் ஆழப் பதிந்து கிளுகிளுப்பை ஏற்படுத்த வேண்டும். ஆரம்பத்திலிருந்து முடிவு வரையில் தொய்வின்றி ஒரே சீராகச் செல்ல வேண்டும்.''

'' சிறுகதை என்பது இலக்கியத்தில் ஒரு பகுதி; இலக்கியத்தின் ஒரு வடிவம். இலக்கியம் என்பது ஓர் கலை. கலையைப் படைப்பது படைப்புத்திறன். படைப்புத்திறனை ஒருவன் இன்னொருவனுக்குக் கற்பிக்க முடியாது; ஒருவனிடமிருந்து இன்னொருவன் கற்றுக்கொள்ளவும் முடியாது. அப்படிக் கற்பிக்க முடியாமலும் கற்றுக்கொள்ள முடியாமலும் இருப்பதுதான் படைப்புத்திறன்.''

படைப்புத்திறனைக் கற்பிக்க முடியாதா? இதுஎன்ன புதிர்? என்று சிலர் ஆச்சரியப்படலாம். ஆம்! அதைக் கற்பிக்க முடியாதுதான். விருத்தப்பாவை இயற்றுவது எப்படி என்று ஒருவன் மற்றொருவனுக்குக் கற்பிக்கலாம். கற்றுக்கொண்டவன் விருத்தப்பாவை இயற்றிவிடலாம். ஆனால் அந்த விருத்தப்பா ஒரு கலைப்படைப்பாக, ஒரு சிறந்த கவிதையாக அமைவது, இயற்றியவரின் திறமையைப் பொறுத்த விஷயம். உலகில் எல்லா நாடுகளிலும் கோடிக்கணக்கானவர்கள் இலக்கிய இலக்கணங்களைக் கற்றிருக்கிறார்கள். ஷேக்ஸ்பியர், காளிதாசர், தாந்தே என்ற ஒரு சிலரைத் தான் மகாகவிகள் என்று சொல்கிறோம். அந்த மகாகவிகள் மற்றவர்களிடம் இலக்கணத்தையும், இலக்கியத்தையும், அதன் நயங்களையும்தான் கற்றுக்கொண்டார்களே ஒழிய, படைப்புத் திறனைக் கற்கவில்லை.

கதையின் மையமான அம்சம், அதன் கருவே, கதையின் உருவத்தையும், நடையையும் நிர்ணயிக்கக்கூடியதாகும். எனவே, கதையின் சிறப்புக்கு மூலகாரணமாக இருப்பது அதன் கருதான். கருவில் திரு இல்லையன்றால், கதையிலும் வளம் இராது. எனவே கரு பலமானதாக இருக்கின்றதா எனப் பார்த்துக்கொள்ள வேண்டும். அடுத்தபடி அந்தக் கருவுக்கு கொடுக்கப்பட்ட கதை - உருவம் - சரிதானா என்று பார்க்கவேண்டியது அவசியம். அந்த உருவத்தில் கதையின் கரு சிறப்பாக முழு வளர்ச்சி பெற்று, கதைக்குச் சிறப்பைக் கொடுக்கிறதா, அல்லது வேறொரு உருவில் கதையை எழுதியிருந்தால் இன்னும் நன்றாக இருக்குமா என்று கவனிக்க வேண்டும். எழுதப்பட்ட கதைக்குக் கொடுக்கப்பட்ட உருவத்தைவிட, வேறோர் உருவம் நன்றாக இருக்குமென்று தோன்றினால் அந்த உருவத்தில் எழுத வேண்டும். இதற்கு, உருவத்தைப் பற்றிய உணர்வு எழுத்தாளனுக்கு இருக்க வேண்டியது அவசியம். உருவம் என்றால் என்ன? மையக் கருத்தைக் கச்சிதமாகவும், குன்றாமலும் சரியான இடத்தில் முடிப்பது உருவத்திற்கு மேற்போக்கான ஒரு விளக்கமாகும்.

வேண்டாத விளக்கங்களோ, வருணனைகளோ இருக்கக்கூடாது. வேண்டிய விளக்கங்களும், வருணனைகளும் இல்லாமல் போய்விடவும் கூடாது. உருவம் அமைவதற்கு இன்றியமையாத விஷயங்கள் இவை. கதையில் சில பகுதிகளைக் குறைத்துவிட்டால் உருவம் கெடாது. கச்சிதமாக அமையும் என்று தோன்றினால் அந்தப் பகுதிகளைக் குறைத்துவிட வேண்டும். சொல்லப்போனால், ஒரு சிறுகதையில் தேவையில்லாமல் ஒரு பகுதி மட்டுமல்ல, ஒரு வார்த்தையோ, ஒரு காற்புள்ளியோ கூட இருக்கக்கூடாது. இருந்தால் அந்த அளவுக்கு அது கதைக்குக் கேடு செய்யும்.

கதையின் கருத்தும், உருவமும், நடையும் சிறப்பாக இருப்பதுடன், தங்குதடையற்ற ஓட்டமும் இருக்கிறதா என்று கவனிக்க வேண்டும். கதையை அந்தரத்தில் நிறுத்தி வைக்கும் எந்த அற்புத வியாக்கியானமும் சரி , வருணனையும் சரி கதைக்கு அறவே ஆகாத விஷயம் என்று கொள்ளவேண்டும்.

சில முக்கியக் கருத்துக்கள்:

1. சிறுகதை எழுதுகிறவர் வாழ்நாளெல்லாம் மற்றவர்களுடைய சிறுகதைகளைப் படித்துக்கொண்டே இருக்கவேண்டும்.

2. சிறு கதைகளோடு, காவியம், நாவல், நாடகம் போன்ற இலக்கியங்களையும், உலக அனுபவங்களையும் கற்றுக்கொண்டே இருக்கவேண்டும்.

3. தான் காண்கிற, கேட்கிற, படிக்கிற, அனுபவிக்கிற ஒவ்வொன்றினுடைய உண்மையையும் சாரத்தையும் கண்டறிவதற்கு முயலவேண்டும்.

4. இலக்கியங்களைப் படிப்பதோடு, இலக்கிய விமர்சனங்களையும் படிக்க வேண்டும்.

5. சொந்தப் புத்தியை உபயோகிக்காமல் பிறர் கருத்தை அப்படியே ஏற்கும் கண்மூடித்தனமோ அலட்சியமாக உதாசீனம் செய்யும் அகம்பாவமோ கூடவே கூடாது.

6. எழுதும் பயிற்சியை நிரந்தரமாக வைத்துக்கொள்ள வேண்டும். எழுதுவதை நீண்டகாலம் நிறுத்திவைப்பது தவறு. எழுத எழுதத்தான் எழுத்துச் சிறக்கும். 'சித்திரமும் கைப்பழக்கம்' என்பது போல், எழுத்துச் சித்திரமும் கைப்பழக்கத்தால் தான் சிறக்கும்.

7. நடைமுறை வாழ்க்கையை ஆதாரமாக வைத்து எழுதும் கதைகளில் நடக்க முடியாத சம்பவங்களையும், காண முடியாத பாத்திரங்களையும், கேள்விப்படாத பெயர்களையும் புகுத்தவே கூடாது.

**பயிற்சி**

1. சிறுகதையின் இலக்கணம், சிறுகதை ஒன்று எந்த அம்சங்களை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும் என வலியுறுத்துகின்றது ?
2. படைப்புத்திறனைக்கற்றறிந்து வசப்படுத்திவிட இயலாது என்று கூறப்படுவதற்கான காரணம் யாது ?
3. கதைக் கருவின் முக்கியத்துவம் பற்றி விளக்குக.
4. ஒரு சிறுகதை ஆசிரியரிடம் காணப்பட வேண்டிய பண்புகள் எவை ?
5. வாழ்க்கை அனுபவங்களைக் குழுச் செயற்பாட்டில் அலசி, அவற்றுள் எத்தகையன சிறுகதைக்கான கருக்களாக அமைய இயலும் எனக் கலந்துரையாடுக. அவை ஒவ்வொன்றையும் அடிப்படையாக வைத்துத் தனித்தனியே சிறுகதை எழுதுக.

# உரைச் சித்திரம்

ஒரு நபர் தொடர்பாகவோ, ஒரு விடயம் தொடர்பாகவோ குரல் மூலம், கேட்போர் மனதில் காட்சிக் களத்தை உருவாக்கும் உரை வடிவமே உரைச்சித்திரம் எனப்படும். இவ் உரைவடிவம் வானொலி நிகழ்ச்சிகளில் பயன்படுத்தப்படுகிறது.

★ உரைச் சித்திரத்தில் இரண்டு முதல் நான்கு பேர் வரை பங்குபற்றுவர்.

★ ஆண் பெண் குரல்கள் கலந்து ஒலிக்கும்.

★ தலைப்புக்குப் பொருத்தமாக அமைந்திருத்தல்.

★ தலைப்பையொட்டியதாக தகவல்களை குரல்கள் வழியாக வெளிப்படுத்தல்.

★ விடயம் தொடர்பான வரன்முறைக்குள் அமைந்திருத்தல்.

நெகிழ்ச்சித் தன்மைகொண்ட சாதாரண உரையாடல் மூலம் முன்னிலையில் உள்ளவரை விளித்துக்கூறுதல் இடம்பெறும்.

கருத்துச் செறிவுள்ள நியம மொழிவழக்கைப் பயன்படுத்தல் வேண்டும்.
பாத்திர முக்கியத்துவத்தைவிட குரல் வளத்திற்கே முன்னுரிமை வழங்கப்படும்.

**செயற்பாடு**

*பின்வரும் தலைப்புகளில உரைச்சித்திரம் எழுதுக:*

*1. சமூக வலைத்தளங்கள் வெறும் பொழுதுபோக்குச் சாதனங்களாகப் பயன் படுகின்றனவா? அறிவை வளர்ப்பதற்குப் பயன்படுகின்றனவா?*

*2. இன்றைய விவசாயத்தில் இயற்கைப் பசளையைப் பயன்படுத்துவது பொருத்தமானதா? இரசாயனப் பசளையைப் பயன்படுத்துவது பொருத்தமானதா?*

# விளம்பரம்

நூறு ஆண்டுகளின் முந்திய எமது சமூகம் உற்பத்தியை அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஒவ்வொருவரும் ஏதோவொரு வகை உற்பத்தியில் ஈடுபடுவர். அவற்றை தம்மிடையே பரிவர்த்தனை செய்வர். இத்தகைய பண்டப் பரிவர்த்தனை ஒவ்வொருவரும் தத்தமக்குரியனவற்றை நாடும் வகையிலேயே அமையும். எடுத்துக்காட்டாக, விவசாய உற்பத்தியாளர் தமக்கான கருவிகளை கைவினைத் தொழிலாளர்களிடம் தமது உணவுற்பத்திப் பண்டத்தை வழங்குவதன் வாயிலாக பெறுவார். இதன்பொருட்டு சந்தையை அணுகும்போது அவசியமான ஏனைய பொருட்களை வாங்குவதோடு அமையாது, கண்ணில்படும் ஆடம்பரப் பொருட்களையும் வாங்கி வருவர். இவற்றில் சிறிதளவு விளம்பரப்படுத்தும் அவசியம் இருந்தபோதிலும், அது முக்கியத்துவமுடையதல்ல. அப்போது பண்டங்களிடையேயான பரிமாற்றத்தில் சமப்படுத்தும் ஊடகமாக இருந்த பணத்துக்கு மேலதிக வலு எதுவும் இல்லாதது போலவே விளம்பரம் பொருட்களைப் பெரிதாகப் பரவலடையச் செய்வதில்லை.

இன்றைய தொழில்நுட்ப விருத்தி பெற்ற நவீன சமூகத்தில் பணம் வெறும் இடை ஊடகம் அல்ல. பணம் தானே பெருகும் வல்லமை பெற்றது. பலர் கூட்டாக உழைத்து எங்கோ தொலைவிலிருக்கும் சந்தைத் தேவைக்காக உற்பத்தி செய்யப்படும் பண்டத்தை விற்பதனால் பணம் பெருகும் பொருளாதார வாழ்முறையில் அத்தகைய பண்டங்களைவிளம்பரப்படுத்தல் இன்று அவசியமாகியுள்ளது. உற்பத்தியில் நேரடியாக ஈடுபடாத மத்தியதர வர்க்கத்தினரே இன்றைய சமூகத்தில் பெரும்பான்மையினர். இதன் காரணமாக இன்றைய யுகம் நுகர்வுப் பண்பாட்டுக்குரியதென சமூகவியலாளர்களால் கணிக்கப்பட்டுள்ளது.

இத்தகைய நுகர்வுப் பண்பாட்டில் முக்கியத்துவம் பெற்றுள்ள விளம்பரத் துறையைத் தமது வாழ்வாதாரத் தொழிலாக வரித்துக்கொண்டவர்கள் பலர் உள்ளனர். இலங்கைத் தமிழ்ச் சூழலில் பல்துறைக் கலைஞர் சில்லையூர் செல்வராஜன் நான்கு தசாப்தங்களின் முன்னரே விளம்பரத்தொழில் நிறுவனத்தைத் தனியே தொடங்கும் முன்னோடிகளுள் ஒருவராக இருந்தார். இலங்கை வானொலியில் நாற்பது ஆண்டுகளின் முன்னர் ''மக்கள் வங்கிக்கான'' அவரது விளம்பரப்பாடல் பிரசித்தமானதாக இருந்தது.

விளம்பரம் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதாக அமையும். அத்துடன், கவர்ச்சி மிகுந்ததாக அமைந்து, அதனை நாடிப் பெறத் தூண்டுவதாக விளங்கும். தேவையற்ற வர்ணனை நீக்கப்பட்டு, உற்பத்திப் பொருள் மீது கவனக் குவிப்பைச் செய்ய அவசியமான வர்ணனை முன்வைக்கப்படும். அதற்கு அமைவான காட்சிப்படுத்தல் இடம்பெறும். போதைப்பொருள் கையாளல் - எயிட்ஸ் நோய் அபாயம் என்பன குறித்து ஏற்படுத்த வேண்டிய விழிப்புணர்வுக்கு, ஆரோக்கியமான ஒருவரது தோற்றத்தையும் - நோயில்வாடி மெலிந்த அவரது மற்றொரு தோற்றத்தையும்

அருகருகே காட்சிப்படுத்துவதை உதாரணமாகக் கொள்ளலாம். கீழே ''எப்படி இருந்த நான் இப்படி ஆனேன்'' என்ற ஒற்றை வாக்கியமே பல விடயங்களையும் உணர்த்திவிடுவது போல விளம்பரம் குறைந்த வார்த்தைகளில் மிகுந்த தெளிவை ஏற்படுத்துவதாக அமைய வேண்டும்.

இத்தகைய விளம்பரம் குறித்த பொருளை வாங்கத் தூண்டுவது என்ற குறிக்கோள் உடையதாயினும் பொது அறங்களை மீறிவிடாத வகையில் அமைவதை உத்தரவாதப்படுத்த வேண்டும். பொதுவான விற்பனைக்குரியது என அனுமதிக்கப்பட்டுள்ள அனைத்தையும் விளம்பரப்படுத்துவதற்கு இயலும் என்றில்லை. சில வருடங்களுக்கு முன் வரை புகைத்தல் - மது போன்றவற்றுக்கான பாவனைப் பொருட்கள் சமூக ஊடகங்களில் விளம்பரப்படுத்தப்பட்டன. இப்போது அவற்றுக்கான விளம்பரங்களுக்குத் தடை விதிக்கபட்டுள்ளது. சினிமா, தொலைக்காட்சி, நாடகங்கள் போன்ற படைப்புகளில் அவற்றின் பாவனை காட்டப்படும்போது ''புகைத்தல் - மதுப் பாவனை என்பன உயிருக்குக் கேடு'' என்ற வாசகங்கள் இடம்பெறுவதனைக் காணலாம். இவற்றுக்கு அடிமையானவர்கள் மீளச் சிரமப்படுவர் என்பதனால், இளம் வயதில் இவற்றில் எச்சரிக்கை கொள்ள வேண்டும் என்பதனாலேயே இத்தகைய தடைகளைச் சமூகம் முன்னெடுக்கின்றது. அந்த வகையில் விளம்பரம் ஒவ்வொன்றிலும் சமூக அக்கறை கவனிப்பைப் பெற வேண்டும்.

**பயிற்சி**

1. பாரம்பரிய சமூகத்தில் விளம்பரம் அவசியமற்றிருந்தது ஏன்?
2. நவீன சமூகத்தில் ஏன் விளம்பரம் அவசியமாகின்றது?
3. விளம்பரத் தொழிலை மேற்கொள்ளும் ஆளுமைகளில் நீங்கள் அறிந்தவர்கள் குறித்து சிறு குறிப்புக்கள் எழுதுக.
4. விளம்பரம் ஒன்று எவ்வகையில் அமைய வேண்டும்?
5. விளம்பரம் ஒன்றில் பின்பற்ற வேண்டிய விழுமியங்கள் எவை?
6. விளம்பரங்கள் சிலவற்றை குழுக்களாகப் பகுத்தாராய்ந்து அவற்றின் பண்புகள் குறித்து முழு வகுப்புக்கும் அறிக்கையிடுக.

# இயல்பு வழக்கும் தகுதி வழக்கும்

தமிழில் பண்டைக்காலம் முதல் கையாளப்பட்டுவரும் சொற்கள், சொற்றொடர்கள் வழக்கு என அழைக்கப்படும். இது இயல்புவழக்கு தகுதி வழக்கு என இருவகைப்படும்.

### இயல்பு வழக்கு

இது மூன்று வகைப்படும். அவையாவன இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ ஆகியனவையாகும்.

**1. இலக்கணமுடையது**

இது இலக்கண விதிக்கு அமைவானது.
உதாரணம் : மரம், காற்று

**2. இலக்கணப்போலி**

இலக்கணத்திற்குட்பட்ட சொற்றொடர்களில் அமைந்த இரண்டு சொற்கள் முன் பின்னாக மாறினும் அவை இலக்கணமுடையனவாக சான்றோர் ஏற்றுக்கொள்வர். அவற்றை இலக்கணப்போலி என அழைப்பர்.

| இலக்கணமுடையது | இலக்கணப்போலி |
|---|---|
| இல்முன் | முன்றில் (முன் + இல்) |
| நகர்ப்புறம் | புறநகர் (புறம் + நகர்) |
| இல்வாய் | வாயில் (வாய் + இல்) |
| வாய்க்கடை | கடைவாய் (கடைசி + வாய்) |
| கால்வாய் | வாய்க்கால் (வாய் + கால்) |

சிலவேளைகளில் சொற்களில் வரும் எழுத்துக்களில் ஒரெழுத்திற்குப் பதிலாக ஒத்த ஒலியினையுடைய வேறு எழுத்துக்கள் நின்று ஒலிப்பதுமுண்டு. அவ்வாறானவை எழுத்துப்போலி என அழைக்கப்படும்.

| இயல்பு - | போலி | |
|---|---|---|
| ஐயர் | அய்யர் | |
| ஔவை | அவ்வை | முதற்போலி |
| மையல் | மயல் | |
| | | |
| பழைமை | பழமை | |
| கோயில் | கோவில் | இடைப்போலி |
| சுகயீனம் | சுகவீனம் | |
| தேசம் | தேயம் | |
| நேசம் | நேயம் | |

| | | |
|---|---|---|
| அறம் | அறன் | |
| சாம்பல் | சாம்பர் | |
| பந்தல் | பந்தர் | கடைப்போலி |
| குடல் | குடர் | |
| நிலம் | நிலன் | |

**மரூஉ**

இயல்பாக வழங்கிவரும் சொற்கள், சொற்றொடர்களில் சில இலக்கணச் சிதைவடைந்தும் சொல்லுருவம் கெட்டும் வழங்கிவருமாயின் அதனை மரூஉ என அழைப்பர்.

| இலக்கணமுடையது - | மரூஉ |
|---|---|
| அருமருந்தன்ன | அருமந்த |
| ஆடுதொடாப்பாலை | ஆடாதோடை |
| சுருதி | சுதி |
| செல்வச்சந்நிதி | சந்நிதி |
| சோழநாடு | சோணாடு |
| நல்லூர் | நல்லை |
| பொன்கொடுதீவு | புங்குடுதீவு |
| யாழ்ப்பாணநகர் | யாழ்நகர் |

### தகுதிவழக்கு

ஒரு பொருளைக் குறிக்கும் சொல்லாற் கூறுவது தகுதியன்று என்றும், வேறு ஓர் சொல்லாற் கூறுவது தகுதி என்றும் எண்ணப்படும் சொல் தகுதிவழக்காகும். இது இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என மூன்று வகைப்படும்.

### இடக்கரடக்கல்

ஆன்றோர் முன்னிலையில் சொல்லத்தகாத சொல்லை வேறொரு வகையாற் சொல்லுவது இடக்கரடக்கல் எனப்படும்.

உதாரணம் :'மலங்கழுவி வந்தான்' என்பதை 'கால்கழுவி வந்தான்' என்று சொல்லுதல்.

### மங்கலம்

மங்கலமில்லாத சொல்லை மறைத்து மங்கலமாகக் கூறுதல்.

| அமங்கலவழக்கு | மங்கலவழக்கு |
|---|---|
| செத்தார் | துஞ்சினார், இயற்கை எய்தினார், மறைந்தார், காலமானார். |
| நச்சுப்பாம்பு | நல்லபாம்பு |

### குழூஉக்குறி

ஒவ்வோர் கூட்டத்தாரும் மற்றவருக்குத் தெரியாமல் தங்களுக்கு மட்டும் புரியும்வகையில் வழங்கப்படும் சொல் குழூஉக்குறி எனப்படும்.

வேடர் ‘கள்’ளைச் ‘சொல்விளம்பி’ என்பர்.
பொற்கொல்லர் ‘பொன்’னைப் ‘பறி’ என்பர்.
அந்தணர்கள் ‘தோசை’யை ‘சக்கரத்தாழ்வான்’ என்பர்.
முட்டைவியாபாரிகள் ‘முட்டை’யை ‘கொக்கு’ என்பர்.

## வினையியல்

**உடன்பாட்டு வினையும் எதிர்மறை வினையும்**

★ நான் பூங்காவுக்குச் சென்றேன்.
★ நான் பூங்காவுக்குச் செல்லவில்லை.

இவ்வாக்கியங்களில் சென்றேன், செல்லவில்லை என்பன வினைமுற்றுக்களாகும். சென்றேன் என்பது வினை நிகழ்வினை உணர்த்துகிறது. செல்லவில்லை என்பது வினை நிகழாமையை உணர்த்துகிறது.

### உடன்பாட்டு வினை

வினை நிகழ்வினை உணர்த்தும் வினை உடன்பாட்டு வினை என்று அழைக்கப்படும்.

★ சரசோதிமாலையை தேனுவரைப்பெருமான் என்னும் போசராச பண்டிதர் இயற்றினார்.
★ சொ. விருத்தாசலம் என்பவர் புதுமைப்பித்தன் என்ற புனைபெயர் கொண்டு சிறுகதைகள் பற்பல எழுதினார்.
★ மகாகவி பாரதியார் பாரத நாட்டின் பழம்பெருமையைப் புகழ்ந்தும் மூட நம்பிக்கைகளைக் கடிந்தும் பாடினார்.

### எதிர்மறை வினை

வினை நிகழாமையை உணர்த்தும் வினை எதிர்மறை வினை என்று அழைக்கப்படும். தற்காலத் தமிழில் எதிர்மறை வினைகள் பின்வரும் மூன்று நிலைகளில் வருகின்றன.

(1) ‘ஆ’, ‘ஆத்’ ஆகிய எதிர்மறை இடைநிலை பெற்று வருவன.

★ அது வராது
★ அது நிற்காது
★ அது போகாது

★ அவை வரா
★ அவை நிற்கா
★ அவை போகா

*(2) 'மாட்டு' என்னும் எதிர்மறை இடைநிலை பெறுவன.*

★ *செய்ய மாட்டேன்*
★ *செய்ய மாட்டோம்*
★ *செய்ய மாட்டான்*
★ *செய்ய மாட்டார்கள்*

*இது எதிர்காலத்திலும் வழமைப் பொருளிலும் பயன்படுத்தப்படும்.*

*(3) 'இல்லை' என்ற எதிர்மறை வினை பெற்று வருவன.*

★ *நான் போகவில்லை*
★ *நீ போகவில்லை*
★ *அவன் போகவில்லை*

*இது தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய முக்காலத்திற்கும் பொதுவானது.*
*செய்வினையும் செயப்பாட்டு வினையும்*

*ஒரு வாக்கியத்தில் எழுவாய்க்கும் வினைக்கும் இடையே உள்ள உறவின் அடிப்படையில் வினைச்சொற்களை செய்வினை, செயப்பாட்டு வினை என இரண்டாக வகைப்படுத்தலாம்.*

*செய்வினை*

*எழுவாயைக் கருத்தாவாகக் கொள்ளும் வினைகள் செய்வினை எனப்படும்.*

★ *நான் கவிதை எழுதினேன்*
★ *தங்கை பூங்கன்று நட்டாள்*

*எழுதினேன், நட்டாள் ஆகியன வினைகள். இவை நான், தங்கை ஆகியவற்றை எழுவாயாகக் கொண்டுள்ளன. இங்கு எழுவாயே வினையின் கருத்தாவாகவும் உள்ளது. எனவேதான் எழுவாயைக் கருத்தாவாகக் கொள்ளும் வினைகள் செய்வினைகளாகும். (கருத்தாவே செய்யும் வினை என்பதால் செய்வினை)*

*செய்வினையில் அடிச்சொல் அடிப்படை வடிவத்தில் இருக்கும்*

★ *பார்த்தேன் - பார்*
★ *எழுதினேன் - எழுது*
★ *படித்தேன் - படி*

## செயப்பாட்டு வினை

ஒரு வாக்கியத்தில் செயப்படுபொருளை எழுவாயாகக் கொள்ளும் வினை செயப்பாட்டுவினை எனப்படும். செயப்படுபொருள் குன்றா வினைகளே இவ்வாறு அமையும்.

★ விபுலானந்தர் யாழ்நூல் எழுதினார். (செய்வினை)

என்னும் வாக்கியத்தில் விபுலானந்தர் எழுவாய், யாழ்நூல் செயப்படுபொருள், எழுதினார் செய்வினை.

இதனை பொருள் சிதையாமல் மாற்றி எழுதினால்

★ யாழ்நூல் விபுலானந்தரால் எழுதப்பட்டது. (செயப்பாட்டு வினை)

முதல் வாக்கியத்தில் செயப்படுபொருளாக இருந்த யாழ்நூல் இந்த வாக்கியத்தில் எழுவாய்.

முதல் வாக்கியத்தில் எழுவாயாக இருந்த விபுலானந்தர் இந்த வாக்கியத்தில் ஆல் உருபு ஏற்று கருத்தாப் பொருளில் வந்துள்ளது.

முதல் வாக்கியத்தில் எழுதினார் என்னும் வடிவில் அமைந்த வினை இந்த வாக்கியத்தில் எழுதப்பட்டது என்று அமைந்துள்ளது.

எனவே, செயப்படுபொருளை எழுவாயாகக் கொள்ளும் வினை செயப்பாட்டுவினை எனப்படும். செயப்படுபொருள் குன்றா வினைகளே இவ்வாறு அமைவனவாகும்.

செயப்பாட்டு வினையில் அடிச்சொல் 'செய்ய' என்னும் வாய்ப்பாட்டு வினைஎச்ச வடிவில் இருக்கும்.

கொல்லப்பட்டான் - கொல்ல
மூடப்படும் - மூட
திறக்கப்படும் - திறக்க

| வினை எச்சம் | + படு | + கால இடைநிலை | + திணைபால் விகுதி |
|---|---|---|---|
| கொல்ல | + படு | + ட் | + ஆன் |

**பயிற்சி**

*(அ) பின்வரும் செய்வினைகளை செயப்பாட்டு வினைகளாக மாற்றி எழுதுங்கள்.*

*1. செய்தான்*

*2. செதுக்கினான்*

*3. கட்டினான்*

*4. எரித்தான்*

*5. எழுதினான்*

*(ஆ) பின்வரும் செய்வினை வாக்கியங்களை செயப்பாட்டு வினை வாக்கியங்களாக மாற்றி எழுதுங்கள்.*

*1. எடிசன் மின்குமிழைக் கண்டுபிடித்தார்.*

*2. நான் கடிதம் எழுதினேன்.*

*3. நாசா செவ்வாய்க்கிரகத்தை ஆய்வு செய்தது.*

*4. கண்ணதாசன் அர்த்தமுள்ள இந்துமதம் எழுதினார்.*

*5. கம்பர் சரஸ்வதி அந்தாதி பாடினார்.*

## ஏவல் வினைமுற்று

முன்னிலையில் உள்ள ஒருவரையோ ஒன்றையோ பலரையோ பலவற்றையோ இன்னது செய்யுமாறு கட்டளையிடும் வினைமுற்று ஏவல் வினைமுற்று எனப்படும். இது ஏவல் ஒருமை, ஏவல் பன்மை என இருவகைப்படும். ஏவல் உடன்பாடாகவும் எதிர்மறையாகவும் வரும்.

ஏவல் ஒருமை - வா, போ, செய், நில்

எதிர்மறை ஏவல் ஒருமை - வராதே, போகாதே, செய்யாதே, நில்லாதே

ஏவல் பன்மை - வாருங்கள், போங்கள், செய்யுங்கள், நில்லுங்கள்

எதிர்மறை ஏவல் பன்மை - வராதீர்கள், போகாதீர்கள், செய்யாதீர்கள், நில்லாதீர்கள்

## வியங்கோள் வினை

வருக, வாழ்க, வளர்க, ஒழிக, வீழ்க, செல்க, எழுதுக என வினையடியுடன் 'க' விகுதி பெற்றுவரும் வினை வியங்கோள் வினையாகும். இவ்வினைவடிவம் ஒருவரை வாழ்த்துவதற்கு அல்லது அவர் மீதுள்ள எதிர்ப்பைத் தெரிவிப்பதற்கு அல்லது ஒருவரிடம் ஒரு காரியத்தைச் செய்யுமாறு வினயமாக வேண்டிக் கொள்வதற்கு பயன்படுத்தப்படுகிறது. **உ - ம்** - வாழ் + க (வினையடி + விகுதி)

★ நீங்கள் நீடூழி வாழ்க
★ உங்கள் வாழ்வில் இன்பம் மலர்க
★ வறுமை ஒழிக
★ கொடுங்கோல் அரசு வீழ்க

பழந்தமிழில் இய, இயர் ஆகிய விகுதிகளும் வியங்கோள்வினை விகுதிகளாக வழங்கின.

★ வாழிய வாழியர்

தற்காலத்தில் 'அட்டும்' என்பதும் வியங்கோள் விகுதியாகப் பயன்படுகிறது.

★ அவர்கள் நீடூழி வாழட்டும்
★ மழை பொழியட்டும்

## அருஞ் சொற்கள்

இன்றைய மொழிப் பயன்பாட்டிலே இதுவரை பயன்படுத்தப்பட்டு வந்த சொற்களுடன் மேலதிகமாகப் பல புதிய சொற்கள் எமது மொழியுட் புகுந்துள்ளன. அவ்வாறான சொற்களும் அவற்றின் பொருளும் கீழே தரப்படுகின்றன. அவற்றின் பொருளை உணர்ந்து தேவைப்படும் இடங்களில் பயன்படுத்துங்கள்.

1. அறிவியல் - விஞ்ஞானம்
2. ஆணைக்குழு - அதிகாரம் பெற்ற குழு
3. உச்ச வரம்பு - மேலெல்லை
4. ஏகபோகம் - தனியுரிமை
5. கட்டுக்கோப்பு - கட்டமைப்பு
6. குதர்க்கம் - விதண்டாவாதம்
7. சதுக்கம் - நாற்சந்தி
8. சுற்றறிக்கை - சுற்றுநிருபம்
9. தவிசாளர் - அவைத் தலைவர்
10. திறனாய்வு - விமர்சனம்
11. பகிரங்கம் - வெளிப்படை
12. புறக்கணிப்பு - அலட்சியம் செய்தல்
13. முரண்பாடு - மாறுபாடு
14. முருகியல் - அழகியல்
15. மேற்கோள் - எடுத்துக்காட்டு
16. யாப்பு - அரசியலமைப்பு
17. வஞ்சினம் - யாப்பு, சூளுரை
18. விதப்புரை - சிபாரிசு, பரிந்துரை
19. விமோசனம் - விடுதலை
20. வைப்பு - சேமநிதி

# அருஞ் சொற்றொடர்கள்

மொழிப் பயன்பாட்டில் அருஞ்சொற்றொடர்களின் பயன்பாடு மொழிக்கு அழகையும் செழுமையையும் ஏற்படுத்தும். இத்தகைய அருஞ்சொற்றொடர்களை மாணவர் அறிந்து ஏற்ற இடங்களில் பிரயோகம் செய்து மொழி வளத்தைப் பெருக்குதல் நன்று.

★ அகமும் முகமும் மலர்ந்து
★ அணிவன அணிந்து புனைவன புனைந்து
★ அமிழ்தினுமினிய தமிழ் மொழி
★ அருமை பெருமையறிந்து
★ ஆசை காட்டி மோசம் செய்து
★ ஆண்டி முதல் அரசன் வரை
★ இகபர இன்பம்
★ இடம் பொருள் ஏவல்
★ ஈந்துவக்குமின்பம்
★ ஊணுறக்கமின்றி
★ உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி
★ ஒல்காப் பெரும் புகழ்
★ கண்ணுக்குக் கண்ணாக
★ கருவிலே திருவுடையோன்
★ குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
★ கூடிக் குலாவி
★ சொல்நயம் பொருள் நயம்
★ தமக்கென வாழா தகைமையுடையோர்
★ நடையுடை பாவனை
★ நரை திரை மூப்பு
★ நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும்
★ நுண்மாண் நுழைபுலம்
★ பட்டிதொட்டியெங்கும்
★ பாலும் தேனும் போல
★ மாடமாளிகை கூடகோபுரம்
★ வழிமேல் விழிவைத்து
★ வாழையடி வாழையாக

# 6 கவிதைகள்

## திசைகள்



காலைச் சூரியனுக்கு
முகம் காட்டி நின்றால்
புறமுதுகில் மேற்கிருக்கும்.

இடக்கைப் பக்கம் வடக்கு
வாடைக்காற்று தழுவும்.

வலக்கைப் பக்கம் தெற்கு
சோழகம் பெயரும்.

வாடை, சோளகம்
கச்சான், கொண்டல் என்றே
திசைகள் உணர்த்தும்
காற்றின் பெயர்கள்.

அன்றைக்கு அம்மா சொல்லிடும்
எளிமையில்
திசைகள் துலக்கமாய் இருக்கும்.

இப்போவெல்லாம் திசைகள்
எனக்கு துலக்கமாயில்லை.

பெயர் சொல்லும்படியான
காற்றுகளும் ஏதுமில்லை.

வீசுவது புயலெனத் தெரியும்
புயலுக்குண்டா திசை?
அதனிடை நான் இல்லாததால்
வெளியில் நின்றபடி
திசைகளைத் துலக்கும்
ஓரோர் தடவையும்
முயற்சியில் தோற்கிறேன்.

அவை தொலைந்திருக்குமோ?
ஏன் இந்த சந்தேகம்
வடக்கிருந்து புறப்பட்டவன் நான்
என் நினைவு சொல்கிறது.

தெற்கிருந்து வருகிறாய் நீ
குளிர் வலயத்தில்
எதிர்கொள்பவர் சொல்கின்றனர்.

எங்கிருந்து வந்தேன்
எத் திசையில் செல்கிறேன்?

எனக்குச் சொல்லித்தர
அம்மாவுக்கு இலகுவாயிருந்தது
என் குழந்தைகளுக்குச் சொல்லித்தர
எனக்கோ முடியவில்லை.

அம்மாவின் எளிமை எனக்கில்லை.
ஒரேயொரு தடவை
எழுவான் திசையை
யாரேனும் சுட்டுவீராயின்
சுடரும் விடியல் சூரியனுக்கு
முகம் காட்டி நிற்பேன்.
திசைகளைக் கண்டு கொள்வேன்.
குழந்தைகளுக்கும் அறிவிப்பேன்.
---

**கி. பி அரவிந்தன்**

# இறக்கம்

பிடிக்கப் பிடிக்க
சறுக்குகின்றது.

ஏறிய இடத்திலாயினும்
இறங்கலாமென்றால்
வழுக்கிச் செல்கிறது சரிவு.

ஏறிய இடம் எது…?

நின்றேறிய இடத்திற்கும் கீழுமா
இத்தனை இருட்டாழம்….?
அல்லது அங்கேதான் ஏறினேனா…?

அழுகையும் விம்மலும்
சூழ்ந்த
ஏழேழு நிறத் துக்கமும்
படிவுகளான மௌன இருட்திட்டு.

ஒரு தீக்குச்சி உரசலே
போதுமாய் இருந்திருக்கும்
ஏறாத சிகரமெல்லாம் துலங்க
ஏறி இறங்க.

இது இருக்க
உயரவே பார்த்தேனே
ஏறினேனே
சுற்றும் முற்றும் பாராமல்

அது சரி
இறங்கும் படி இல்லாமல்
எதற்கு நீ ஏறினாய்…?

இருட்டின் இறுக்கத்தில்
நசிந்ததோர் குரல்.

**கி. பி அரவிந்தன்**

# துளிமுகத்துள் கங்கை



உலகம் இன்று வறுமையுற்றுள்ளது
அன்பிலே வறிய
வன்பாலை உலகு செய்தோம்
அன்பகத்தீர்
தயவுசெய்து ஒரு பிடி அன்பு செய்வீரா?

பானையில் இருந்தால்தான்
அகப்பையில் வரும்
உனது பாத்திரத்தின் உள்ளே
ஒட்டிக்கொண்டிருக்கும்
அன்பின் அவிழ்பதம் கண்டாயா?
ஆயின் நீ பாக்கியசாலி.

அன்பின் வறிய அயலான் ஒருவனுக்கு
அதை வழங்கு
ஒரு துளி நேசிப்பில் தொடங்குகிறது
அன்பின் இதழவிழல்

அன்பின் அவிழ்பதம் அளித்தாயா?
அதன் எதிர்வரவு காத்திருக்காதே

வரவை எதிர்வு காத்திருப்போன்
வாழ்க்கையை கடைவிரிப்பாக்குகிறான்
வாழ்க்கையோ ஓர் தன்மலர்வின்
வெளியகம்

காவ்ய மேகலையாள்
தன் மலர்ந்த வாழ்வின் பாத்திரமாகியபோது
அன்பின் குழைவை அள்ளி அள்ளி
வழங்கிக் கொண்டேயிருந்தாள்
வற்றாத அன்பின் வாழ்வுடைமையில்
இது ஒன்றும் அதிசயமில்லை
ஆதலால் அன்பின் ஊற்று முகத்தை
திறந்து வை மானுடனே
தன் மலர்ந்த வாழ்வு உனதாகும்.

துன்புறுவோரின் காற்தூசியையும் கழுவிவிடும்
அன்பின் ஊற்று
இன்பெருக்காய் எங்கும் அவிழ

அங்கழியும்
தான், தனதென்ற சிறு வட்டம்

சிறுவட்டம் தாண்டி எழுகின்ற பேரன்பு
ஆகாய கங்கையையும் பூமிக்கு இறக்கிவரும்

தூயன்பின் துளிபோதும் தொடங்கு.

**சு. வில்வரத்தினம்**

# மூளும் தீயும் நீளும் குரலும்

*பூமியின் ஒளி பொருந்திய முகங்கள்*
*குழந்தைகளினுடையவை.*
*துயரம் தரும் கனவுகளையும்*
*எமது கால்களையும் அழித்துவிட்டு*
*எமது காலங்கள் நெருப்பில் உழல்பவை*
*குழந்தைகளுக்கானதை அவர்களிடமே கையளிப்போம்.*

*நம்பிக்கை தரும் சூரியனை*
*அல்லது பௌர்ணமியை*
*மிக மெல்லிய வாசனையையும் இதழ்களையும் உடைய*
*மல்லிகை மலர்களை*
*நாங்கள் அவர்களுக்காய் பரிசளிப்போம்.*

*கந்தக நாற்றம் எமது இருதயங்களில்*
*உறைந்து விட்டதைப்போல*
*பிரிவின் துயரங்களும்*
*மன அழுத்தங்களும்*
*எமது வேர்களை அரித்து தின்றுவிட்டதைப் போல..*

*அவர்களுடைய இருதயங்களை*
*அவை தின்றுவிட அனுமதிக்க முடியாது எம்மால்*
*உண்மையில்*
*நாம் இழந்த சந்தோசங்களை*
*அவர்களின் மூலம்*
*மீட்கும் கனவுகளில் வாழ்கிறோம் எனில்*
*அவர்களின் குதூகலங்களும் சிரிப்பும்*
*எமக்குச் சொந்தமானவை எனில்*
*பூமியின் ஒளி பொருந்திய முகங்களை*
*அவர்களிடம் பரிசளிப்போம்!*

**எஸ்போஸ்**

# நீர்க்குமிழி



எதையும் கொண்டு வந்ததில்லை

தேகத்தையும்
தேகத்திற்கொரு பெயரையும் புனைந்ததிங்குதான்

புகழ்சொற்களும், மாலைகளும்
இந்தச் சேறும், அழுக்கும்
என்னுடையதல்ல எதுவும்

கொதிக்கும் இந்தச் சிரசு
கண்ணீரால் சதா ஈரமாகும் இரவுகள்
எதையும் வைத்துச் செல்ல
காலம் இழைத்ததில்லை எந்தப் பெட்டியையும்

தோலோடு இடுங்குண்ட இந்தச் சொற்கள்
அந்தச் சிறுகொண்டைக் குருவி
காலத்தின் வெளியில் எஞ்சுவதில்லை எதுவும்

கணங்களின் பேராற்றில்
மின்னி மறைகின்றன பல்லாயிரம் எண்ணக் குவியல்கள்

சொரியும் பாலை நிலவில்
தன்னைத்தான் பார்த்து வெடித்துச் சிரிக்கிறது
என் பித்து மனம்.

**பா. அகிலன்**

# மனிதனின் குரல்



புல்மேய்ந்து விட்டு
பொழுதுபட
வீடு திரும்பச் சொல்கிறாய் நீ

கேள்,
நான் மனிதன்
அறிவின் பசியில்
அலைபவன்
காலியாய் உள்ள எனது கிண்ணம்
நிறைதல் வேண்டும்
அதுவரை நான் ஓய மாட்டேன்.

உயிர் ஒளி சுடர
வாழ்வின் ரசத்தை
நான் பருகுதல் வேண்டும்.
என் ஆளுமை நிறைவுற
செயல்களில் நான்
துலங்குதல் வேண்டும்!

அறிக நீ
நான் மனிதன்!

**வாசுதேவன்**

# ஆதித் துயர்

நிழல் மரங்களற்றுச்
சூரியன் தவிதவிக்கும்
நெடுஞ்சாலையோரம்
வெய்யிலை
உதறி எறிந்தவாறு
நடக்கிறாள் மூதாட்டி.

குதிக்கால்களால்
நெடுங்களைப்பை
நசுக்கித் தேய்த்தவாறு
காற்றைப் பின்தள்ளிக்
கைகளை வீசுகிறாள்.

வெய்யில்
மிகப் பெரும் தண்டனையை
வழி நீளப் பரவவிட்டுள்ளது.
வேட்டை நாய்போல
அவள் முன்னே
ஓடிச் செல்கிறது நிழல்.

பதிந்தெழும் ஒவ்வொரு சுவட்டிலும்
தேங்கி நடுநடுங்குகிறது
ஆதியிலிருந்து தொடரும் துயரம்.

**பஹீமா ஜஹான்**

பயிற்சி

## திசைகள்

1. முன்னர் திசைகள் அறியப்பட்டமைக்கும் இன்று இயலாதிருப்பதற்கும் கவிஞனை ஆளாக்கிய காரணி யாது?
2. தனது பிள்ளைகளுக்கு எவற்றைப் புரிய வைக்க முடியாதிருப்பதாக கவிஞர் விசனம் கொள்கிறார்? இங்கு நேரடியாக சுட்டப்படுவதும் மறைபொருளாக உணர்த்தப்படுவதும் எவை?

## இறக்கம்

3. ஏறும் முயற்சிக்குத் தடையாயிருப்பவை எவை?
4. ''ஒரு தீக்குச்சி உரசலே'' என்பதால் உணர்த்தப்படும் அம்சங்கள் எவை?

## துளிமுகத்துள் கங்கை

5. ''அன்பின் இதழவிழல்'' எப்படிச் சாத்தியமாகும்? அதன் பெறுபேறுகள் எத்தகையன?
6. சிறுவட்டம் தாண்டிய பரந்த மனப்பாங்கு என்பதால் உணர்த்தப்படுவது யாது?

## மூளும் தீயும் நீளும் குரலும்

7. எந்தக் காரணத்துக்காக, எவற்றையெல்லாம் குழந்தைகளிடம் கொடுத்துவிடுவோம் எனக் கவிஞர் கூறுகிறார்?
8. ''எமது காலங்கள் நெருப்பில் உழல்பவை'' எனப்படுவது ஏன்?

## நீர்க்குமிழி

9. ''காலம் இழைத்ததில்லை எந்தப் பெட்டியையும்'' எனப்படுவது ஏன்?
10. ''நீர்க்குமிழி'' என்பதன் வாயிலாக கவிஞர் வலியுறுத்த முனைவன யாவை?

## மனிதனின் குரல்

11. இக்கவிதையில விடுக்கப்படுகின்ற வேண்டுதல்கள் எவை?
12. இக்கவிதையில் 'செயலின் எழுச்சி' வெளிப்படும் வகையினை விளக்கி எழுதுக.

## ஆதித் துயர்

13. 'பதிந்தெழும் ஒவ்வொரு சுவட்டிலும் தேங்கி நடுநடுங்குகிறது ஆதியிலிருந்து தொடரும் துயரம்' என்பதினூடாக வெளிப்படுத்தப்படுவது யாது?
14. கவிதையில் வெளிப்படும் அணிகளை எடுத்துக்காட்டுக.

# விமரிசனம்

கலை இலக்கியங்கள் எவ்வளவுக்கு முக்கியத்துவம் பெற்றுள்ளனவோ அதேயளவுக்கு விமர்சனங்களும் அவசியமானவையாகக் கருதப்படுகின்றன. ஆயினும் தமிழில் கலை இலக்கியங்கள் வளர்ந்த அளவோடு ஒப்பிடுகையில் விமரிசனக் கலை போதியளவு வளர்ச்சி பெறவில்லை என்ற குறை நிலவி வருவதை அவதானிக்கலாம். விமரிசனம் குறித்து பல நூல்கள் வெளிவந்தபோதும் அது பற்றிய போதுமான புரிதலின்மை இன்னமும் உள்ளது. படைப்பாளிக்கும் வாசகருக்குமிடையில் தொடர்பை வலுப்படுத்துவதோடு மேலதிக விளக்கங்களை ஏற்படுத்துவதாயும் விமரிசனம் திகழ வேண்டும். இந்த முயற்சி போதியளவு வெற்றிபெறாத காரணமாயும், அதற்குத் தடையாக படைப்பாளர்கள் விமரிசனத்தைக் கண்டு சீற்றம் கொள்ளும் பக்குவமின்மைகளாலும் விமரிசனக் கலை வளர்ச்சி பெற இயலாதுள்ளது.

ஆக்கங்கள் அனுபவச் செழுமைகளை உணர்வெழுச்சியுடன் வெளிப்படுத்துவன. வாழ்விலிருந்து பிறந்து ஏனையவர்களது வாழ்வைச் செப்பனிட ஏற்றதாக படைப்பாக்கம் மிளிர்கிறது என்ற வகையில் அவை குறித்த கருத்துகள் சமூகத்தில் உணர்வைத் தூண்டும் சிறு பொறிகள் போன்ற பண்புடையன. நல்ல படைப்புகள் மனித உணர்வுக் காட்டின் தீமைகளை எரிக்கும். கேடானவை மனித சமூகத்தையே வெந்து சாம்பலாய் நாசமாக்க வல்லன. அவை குறித்த விமரிசனங்கள் பக்கச் சார்பின்றி துணிச்சலுடன் வெளிப்பட அவசியமுள்ளன.

தமிழின் மரபுரீதியான விமரிசனத்துக்கு உதாரணமாகக் கூறப்படும் நக்கீரன் கதை இதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. தருமிக்கு பொற்கிழி வழங்க வேண்டும் என்பதற்காக இறைவனே பாடலை எழுதிக் கொடுக்கிறார். பாடலில் தவறிருப்பதாக நக்கீரர் கூற, இறைவனையே சபைக்கு அழைத்து வருகிறார் தருமி. நெற்றிக் கண்ணைக் காட்டியபோதும் அச்சங்கொள்ளாத நக்கீரன் ''குற்றம் குற்றமே'' என இடித்துரைக்கிறார். திருவிளையாடற் புராணத்தில் இடம்பெறும் இக்கதை குறித்து வாதப்பிரதிவாதங்கள் காணப்பட்ட போதிலும் விமரிசகர்களுக்கு இருக்க வேண்டிய அஞ்சாமைக்கு உதாரணமாக எப்போதும் இது முன்வைக்கப்படுவதுண்டு.

மரபு விமரிசனத்துக்கு உதாரணமாக உருத்திரசன்மன் பற்றிய கதையும் வழக்கிலுள்ளது. இது இலக்கண நூலுக்கு எழுதப்பட்ட உரைகளின் தகுதிகளைக் கண்டறிய மேற்கொள்ளப்பட்ட முறை. பார்வையிழந்தவரான உருத்திரசன்மன் முன் உரைகள் படிக்கப்படுகையில் தனது மெய்ப்பாடுகளால் அவற்றின் தகுதியை வெளிப்படுத்துவான். இவ்வகையில் மெய்சிலிர்த்தல், கண்ணீர் ததும்பல் என்பன இலக்கண உரைக்கே வெளிப்பட இயலுமாயின் ஆக்க இலக்கியத்துக்கு இன்னும் அதிகமாகப் பொருத்தப்பாடுடையதே என்பது கருத்து. இது மனப்பதிவு - மெய்ப்பாடு எனக் கொள்ளப்படுமாயினும் முழுமையாக விமரிசனமாக விருத்தியுறமாட்டாது.

பழைய இலக்கியங்களுக்கான உரைகளும் மரபுரீதியான விமரிசனத்துக்கு எடுத்துக்காட்டாக கொள்ளப்படுவன. திருக்குறளுக்கான பரிமேலழகரின் உரை இவ்வகையில் விதந்துரைக்கப்படுவதுண்டு. இதுபோன்ற பல்வேறு உரைகளிலும் விமரிசனத்துக்கான சில கூறுகளைக் காண இயலும். ஆயினும், மரபுரைகள் தமது விருப்புக்குரிய ஆக்கங்களுக்கு விளக்கவுரை கூறித் தெளிவுபடுத்தும் நோக்கமே பெரிதாகவுடையன. விமரிசனத்தின் அவசியக் கூறாகவுள்ள மதிப்பீடு செய்தலை உரையாளர்கள் அதிகம் கவனங்கொள்வதில்லை. சில சந்தர்ப்பங்களில் மட்டும் அது வெளிப்படுவதுண்டு.

விளக்கம், மதிப்புரை என்பவற்றுக்கும் அப்பால் நவீன விமரிசனம் பல்வேறு அம்சங்களை இணைத்து வளர்ந்துள்ளது. உளவியல், சமூகவியல், அறிவியல், தொன்மவியல், மொழியியல், குறியியல் போன்ற துறைகள் ஒவ்வொன்று சார்பாயும் தனித்தனி விமரிசனமுறைகள் கையாளப்படுகின்றன. ஆயினும், ஆக்கத்தின் தன்மைக்கு அமைவாக இத்துறைகளின் அவசியமான துறைகளை இணைத்து மேற்கொள்ளப்படும் விமரிசனமே கூடுதல் பொருத்தப்பாடுடையதாய் இருக்கும். பொதுவாக ஆக்கத்தின் உருவத்தை முதன்மைப்படுத்துவதாய் அல்லது உள்ளடக்கத்தை முன்னிலைப்படுத்துவதாய் விமரிசனங்கள் அமைவதுண்டு. ஒரு உடலின் அனைத்து உறுப்புக்களுக்கும் உரிய முக்கியத்துவத்தை வழங்குவது போலவே படைப்பொன்றின் வடிவம், பொருள் என்பவற்றின் முக்கியத்துவம் முழுதாய் உள்ளடங்கியதாகவே விமரிசனம் அமைய வேண்டும்.

ஒரு விமரிசகர் கவனங்கொள்ள வேண்டியவையெனப் பின்வரும் நான்கு அம்சங்கள் வலியுறுத்தப்படுகின்றன:

1. விமரிசனத்துக்கு எடுத்துக்கொண்ட படைப்பை ஒரு பருப்பொருளாக முன்னிறுத்தி அணுக வேண்டும்.
2. தன் விருப்பம் சார்ந்த உணர்வு மேலோங்கும்படி படைப்பை விமரிசகர் அணுகும்போது, உண்மையிலிருந்து வெகுதூரம் விலகிச்செல்ல நேரிடும்.
3. தான் ஆய்ந்து கண்ட உண்மையைவிட மேலானதாக எதையும் விமரிசகர் கருதக்கூடாது.
4. பலருடைய சுயத்துடன் (தான் எனும் உணர்வுடன்) உரசக்கூடியது விமரிசனம். விமரிசனப் பணி, பலருடைய ஆளுமையுடன் சம்பந்தப்படுவதால் மிகவும் பொறுப்புடன் செயற்பட வேண்டியது முக்கியமாகும்.

தமிழில் நவீன விமரிசனத் துறையைக் கல்விநெறி விமரிசனமாகத் தொடக்கி வைத்தவர் திருமணம் செல்வக் கேசவராய முதலியார் (1864 - 1921). வரகனேரி வேங்கட சுப்பிரமணிய ஐயர் (1881 - 1925) விமரிசனக் கலையை இன்னொரு தளத்தில் விருத்தி செய்தார். இலங்கையில் க.கைலாசபதி, கா. சிவத்தம்பி, ஏ.ஜே. கனகரத்தினா போன்றோர் மேலும் விரிந்த பரப்பில் விமரிசனக் கலையை விருத்தி செய்திருந்தனர். நவீன விமரிசன முன்னோடிகளுள் ஒருவரான வ.வே.சு.ஐயர் பற்றிய நூல் ஒன்றுக்கு கலாநிதி நா. சுப்பிரமணியன் எழுதியுள்ள விமரிசனப்பாங்கான ''மதிப்புரை'', மேற்படி விமரிசனக் கலை குறித்த பொருளை விளக்கும் எடுத்துக்காட்டாக அமைய முடியும்.

**பயிற்சி**

1. அபிப்பிராயம் எழுதுதல், மதிப்புரை, விமரிசனம் என்பவற்றிடையேயான வேறுபாடுகள் பற்றி எழுதுக.
2. விமரிசனத்தின் அவசியம் யாது?
3. தமிழின் மரபுரீதியான விமரிசனத்தின் மூன்று வடிவங்களைப் பற்றி விபரிக்குக.
4. விமரிசகர் பின்பற்ற வேண்டிய அம்சங்கள் யாவை?
4. தமிழின் விமரிசன முன்னோடிகள் பற்றி சிறுகுறிப்பு எழுதுக.
6. நீங்கள் தெரிவுசெய்த ஓர் ஆக்கம் குறித்து விமரிசனம் எழுதுக.

## மதிப்புரை

**திரு. பெ.சு.மணி அவர்களின்**
**வ.வே.சு. ஐயர்**
**அரசியல், இலக்கியப் பணிகள்**
*(உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 1993)*

வ.வே.சு. ஐயர் என்று சுருக்கமாகச் சுட்டப்படும் வரகனேரி வேங்கடேச சுப்ரமண்ய ஐயவரவர்கள் (1881 - 1925) இந்த நூற்றாண்டின் முற்காலப் பகுதியில் இந்திய மண்ணின் அரசியல், சமூக - பண்பாட்டுத் துறைகளில் வீறார்ந்த நிலையிற் செயற்பட்டு நின்றவர். விடுதலைப் போராட்ட அரசியலில் தீவிரவாதியாகச் செயற்படத் தொடங்கி, பின்னாளில் காந்தியத்தில் அடிபதித்த அவர் இந்திய மண்ணின் பண்பாட்டு விழுமியங்கள் காலத்துக்கேற்ற வகையில் மறுமலர்ச்சி எய்த வேண்டும் என விரும்பியவர். அவ்வகையில் தமிழின் நவீனத்துவத்துக்குப் பாதை சமைப்பதில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பணிகளை ஆற்றியவர். குறிப்பாக தமிழின் சிறுகதை, திறனாய்வியல் ஆகிய துறைகளின் வளர்ச்சிக்கு முக்கிய - முதற்கட்டப் பணிகள் புரிந்த ஒருவராகக் கணிக்கப் பெறுபவர். இவ்வாறு பொதுநிலையில் அறியப்பட்டுள்ள இவரின் ஆளுமை தொடர்பான முழுநிலையிலான - சிறப்பு நிலையிலான - விளக்கமாகவும் மதிப்பீடாகவும் அமையும் நூலாக்கம் இது.

இந்நூலின் ஆசிரியரான திரு.பெ.சு.மணி அவர்கள் தமிழியல் ஆய்வுத் துறைகளிலே குறிப்பாக, சமூக - பண்பாட்டாய்விலே அயரா ஊக்கத்துடன் செயற்படுபவர். இத்துறையில் பெருந்தொகையான நூல்களும் கட்டுரைகளும் எழுதியதன் மூலம் சமகாலத் தமிழ் ஆய்வாளருள் முதல் வரிசைத் தகுதியை எய்தியுள்ளவர். ஆய்வுத் திறத்தால் பேராசிரியர் க. கைலாசபதி முதலிய பேரறிஞர்களது மதிப்பையும் பாராட்டையும் பெற்ற சால்பினர். இவரால் சென்னை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ‘கப்பலோட்டிய தமிழர் வ.உ. சிதம்பரனார் அறக்கட்டளை’ சார்பில் நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவின் (8, 9-3-1993) விரிநிலையே இந்நூல்.

வ.வே.சு. ஐயர் என்ற வரலாற்றுப் பாத்திரத்தின் ஆளுமையின் அடிநாதமான கூறு, இந்திய மண்ணினதும் அதன் ஒரு கூறான தமிழ் நாட்டினதும் ‘சமூக பண்பாட்டு மறுமலர்ச்சியுணர்வு’ ஆகும்.

அந்நியரான ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை விரட்டியடிக்கும் நோக்கில் அது விடுதலை அரசியலாக வெளிப்பட்டது. சுய பண்பாட்டுப் பாரம்பரியங்களிற் படிந்திருந்த மாசுகளைத் துடைத்து அவற்றை நவீன யுகத்துக்கு ஏற்ற வகையில் வளர்த்துப் பேணிக்கொள்ளும் நிலையில் அது சமூக - பண்பாட்டு நடவடிக்கைகளைக் கோலம் கொண்டது. மேற்படி இருநிலைச் செயற்பாடுகளையும் இந்நூல் விரிவாக எடுத்துரைக்கின்றது.

இந்நூலின் எட்டு இயல்களில் முதல் நான்கில் ஐயரவர்களின் வாழ்க்கைக் குறிப்பு, அவரது சமகால அரசியல் - விடுதலைப் போராட்ட சூழல், அதில் அவர் வகித்த பாத்திரம், அவரது சமூக - பண்பாட்டுச் செயற்பாடான தமிழ்க் குருகுல முயற்சி என்பன தொடர்பான செய்திகள் தரப்பட்டுள்ளன. இவை தொடர்பான சமகால விமர்ச னங்களும் ஆங்காங்கே எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இறுதி நான்கு இயல்கள் அவரது மொழி - இலக்கியச் செயற்பாடுகளின் விவரணங்களாகவும் மதிப்பீடுகளாகவும் அமைந்துள்ளன.

1881 இல் பிறந்த ஐயரவர்கள் கலை, சட்டம் ஆகியவற்றில் பட்டங்கள் பெற்று சட்டத்துறையில் பணியாற்றிய பின்னர் உயர்கல்வி பெற இங்கிலாந்து சென்றவேளை - 1907 ஆம் ஆண்டில் அங்கு வீர சாவர்க்கர் தொடர்பால் அரசியல் வாழ்வில் அடியெடுத்து வைக்கிறார். அதுமுதல் அவர் தமது 44ஆவது வயதில் (1925 இல்) பாபநாசம் அருவியில் விபத்து மரணம் எய்தும் வரை அவரது அரசியல் வாழ்க்கை தொடர்கிறது. இவ்வாறான அரசியல் வாழ்க்கையின் ஒரு பகுதிசார் செயற்பாடுகளாகவே அவரது மொழி இலக்கியச் செயற்பாடுகளும் தமிழ்க்குருகுல முயற்சியும் அமைந்தன. ஐயரவர்களின் வாழ்க்கை பற்றிய பொதுக் குறிப்பு இது. அவரின் அரசியல் பிரவேசத்துக்குப் பகைப்புலமாக விளங்கிய விடுதலைப் போராட்ட சூழல் தொடர்பான தரவுகள் என்ற வகையில் அக்காலப் பகுதியில் இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி, அமெரிக்கா ஆகிய நாடுகளில் இயங்கிய விடுதலைப் புரட்சிக்குழுக்கள் பற்றிய தகவல்கள் இந்நூலின் இரண்டாம் இயலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இங்கிலாந்தில் இந்திய விடுதலைப் புரட்சித் தளமாகத் திகழ்ந்த இந்தியா ஹவுஸில் வீர சாவர்க்கரின் கூட்டுறவில் விடுதலை அரசியலில் கால்பதித்த ஐயரவர்கள் தொடக்கத்தில் ஆயதமேந்திய தனிநபர் தியாகத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தமை, மதன்லால் திங்ரா, வாஞ்சி நாதன் ஆகியோரின் அவ்வகை

முயற்சிகளுக்குத் துணையாகவும் தூண்டுதலாகவும் விளங்கியமை பின்னாளில் காந்தியநெறியில் தம்மை இணைத்துக்கொண்டமை முதலிய பல செய்திகள் அரசியல் பணிகள் என்ற தலைப்பில் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

ஐயரவர்களால் சேர மாதேவியில் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்க் குருகுலமானது தமிழ்மொழி மூலம் அனைத்துக் கலை ஞானங்களையும் கற்பிக்கும் உயர்ந்த குறிக்கோளுடன் தொடங்கப்பட்டதாகும். ''தனது இணையற்ற பேராற்றல் குலைந்து போயிருக்கிற தமிழுக்கு அதன் இயற்கையான முதன்மை ஸ்தானத்தைத் தந்து, புராதன கலைகளைப் போலவே, இக்காலத்துக் கலைகளுக்கும் அதைப் பெரியதோர் நிலையமாக ஆக்க வேண்டும்'' என்ற ஆர்வத்தின் வெளிப்பாடு அது (ப 87). ஆனால் அக்குருகுல முயற்சி அற்ப ஆயுளில் மறைந்துவிட்டமை ஒரு சோக வரலாறு ஆகும்.

இதற்குக் காரணமாக அமைந்த நிகழ்ச்சி அக்குருகுலத்தில் பிராமண மாணவர்கள் இருவருக்கு உணவருந்துவதில் தனிப் பந்தி அமைத்தமை என்ற சாதி ஆசாரத் தளத்திலான செயற்பாடாகும். இது ஐயரவர்களின் சமூகநோக்கின்மீது ஐயத்தை விளைவித்தது. அன்றைய தமிழகத்தின் பிராமணர் - பிராமணல்லாதோர் என்ற பாகுபாட்டுணர்வு அடிப்படையிலான அரசியல் தளத்தில் விஸ்வரூபமெடுத்தது. ஐயரவர்களின் ஒட்டுமொத்த ஆளுமைமீது கரிபூசும் வகையில் கண்டனங்கள் வெளிப்பட்டன. 'தமிழ்க் குருகுலத்தைத் தாக்கிய அரசியல் புயல்' என்ற தலைப்பிலான நான்காம் இயலில் இவற்றை விரிவாக எடுத்துக்காட்டும் பெ.சு. மணி அவர்கள், ஐயரவர்கள் தன்னளவில் சாதி வேற்றுமை பாராட்டாத சமநோக்கினர் என்பதைத் தெளிவுபடுத்துகிறார். குருகுலம் அமைந்த சூழலின் நிர்ப்பந்தத்தாலும் துணைவரான தி.ரா. மகாதேவஐயர் என்பாரின் தூண்டுதலாலுமே அவர் இவ்வாறு செயற்பட நேர்ந்தது என்பதை எடுத்துக்காட்டுகிறார். அரசியலில் தீவிர நெஞ்சுரத்துடன் செயற்பட்டு நின்ற ஐயரவர்கள் சமூகச் சீர்திருத்த நோக்கில் மிதவாதியாகச் செயற்பட்டுவிட்டார் என்றும் 'குஞ்சரநடையழகர்' என்றும் பாராட்டப்பட்ட வ.வே.சு. ஐயர் என்ற யானை அடி சறுக்கிய இடம் இது என்றும் மதிப்பிடுகிறார், பெ.சு. மணி அவர்கள். பிரச்சினையைப் பூதாகரமாகப் பெருப்பிப்பதன் மூலம் வரலாற்றில் ஐயரவர்களுக்கு உரிய இடத்தைக் குறைத்து மதிப்பிடுவதோ அன்றேல் இருட்டடிப்புச் செய்வதோ ஆய்வு நெறியாகாது எனத் தமது தீர்ப்பையும் அவர் வழங்குகிறார்.

மொழி - இலக்கியம் என்பன தொடர்பாக ஐயரவர்கள் மேற்கொண்ட செயற்பாடுகள் தமிழின் பண்பாட்டு விழுமியங்களிலும் அவற்றின் வரலாற்றுப் பெருமைகளாகக் கருதப்படும் செய்திகளிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த ஒரு கலையுள்ளத்தின் உணர்வெழுச்சிகளாகும் என்பதை நூலாசிரியர் அவர்கள் 'தமிழ்மொழி - இலக்கியச் சிந்தனைகள்' என்ற ஐந்தாம் இயலில் உணர்த்தியுள்ளார். தமிழில் சங்கப்பாடல் முதல் சமகாலப் பாரதி பாடல் வரை கற்றுச் சுவைத்து நின்ற ஐயரவர்கள் வடமொழி, ஆங்கிலம், இலத்தீன் முதலியவற்றின் இலக்கியப் பரப்பையும் தரிசித்தவர். இவற்றால் தெளிவு பெற்றிருந்த அவரது உள்ளம் தமிழே தமிழரின் 'கல்வி

மொழி' யாகத் திகழ வேண்டும் என விரும்பியது. ஆங்கிலம் முதலிய பிறமொழிகளைக் கற்றோர் தமிழுக்கு அவற்றின் வளத்தைக் கொணர்ந்து சேர்க்க வேண்டும் என்றும், தமிழ் மரபு சார்ந்த அறிஞர்கள் தமிழை 'மரபுசார் வரம்பு'களுக்குள் முடக்கிவிடாமல் நவீன உலகுக்கு ஈடுகொடுக்கத் தக்க வகையில் அதை நெகிழ்த்த இடமளிக்க வேண்டும் என்றும் அவர் விழைந்தார். இவ்வாறான விபரங்கள் இவ்வியலிலே சான்றுகளுடன் முன்வைக்கப்பட்டுள்ளன. முக்கியமாகப் 'பிரயோக இலக்கணம்' , 'சந்தி இலக்கணம்' என்பன தொடர்பாக அவர் சிந்தித்துள்ளமை, எழுதியுள்ளமை என்பன இப்பகுதியில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இவ்வாறான சிந்தனை, செயற்பாடுகள் என்பனவற்றின் மூலம் தமிழுக்கு 'மறுமலர்ச்சி'யை நாடி நின்றவர் அவர் என்பதனை பெ.சு. மணி அவர்கள் பொருத்தமுற நிறுவுகிறார். 'மறுமலர்ச்சி' என்ற சொல்லே ஐயரவர்களால்தான் தமிழில் முதலில் வழக்கிற்கு வந்திருக்க வேண்டும் என்ற ஊகத்தைப் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையின் மேற்கோள் துணைக்கொண்டு முன்வைத்துள்ளார் (ப 118).

ஐயரவர்களின் இவ்வாறான - தமிழை நவீனப்படுத்தி அதன் பெருமையை உலகறியச் செய்ய வேண்டும் என்ற வகையிலான நோக்கு நிலையின் பன்முக செயற்பாடுகளாகவே அவரது மொழிபெயர்ப்பு முயற்சிகள், புத்திலக்கிய - சிறுகதை - முயற்சிகள், திறனாய்வுப் பணி, இதழியல் பணி முதலியன அமைந்தன. இவை பற்றி இறுதி மூன்று இயல்களில் ஆசிரியர் விரிவாக விளக்கியுள்ளார். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஐயரவர்கள் பிறமொழியாக்கங்கள் பலவற்றைத் தமிழுக்கு இட்டு வந்தவர். இவர் மொழிபெயர்ப்புத் தொடர்பாகக் கொண்டிருந்த கொள்கைகள் விரிவானதொரு தனி ஆய்வை வேண்டி நிற்பன என்பதை ஆறாம் இயலில் ஆசிரியர் உணர்த்தியுள்ளார்.

தமிழ்ச்சிறுகதை வரலாற்றில் வ.வே.சு. ஐயரையே முன்னோடியாக - தந்தையாக - கருதுவது பொது மரபு. மாறாக திருமணம் செல்வக்கேசவராய முதலியார், மகாகவி பாரதியார் ஆகியோருடைய கதைகளை எடுத்துக்காட்டி அவர்களே, முன்னோடிகள் எனக் கூறுவாரும் உளர். இந்நூலிலே ஏழாம் இயலில் ஐயரவர்களின் ''குளத்தங்கரை அரசமரம்'' என்ற கதையே சிறுகதைக்கு உரிய ரீதியில் அமைந்த முதல் தமிழ்ச் சிறுகதை என்பதை ஆசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார். மேலும், இக்கதை ரவீந்திரநாத் தாகூரின் 'படித்துறையின் கதை'யின் உருவ - உள்ளடக்கச் செல்வாக்கிற்கு உட்பட்ட ஒன்று என்பதையும் சுட்டியுள்ளார்.

Study of Kampan என்ற தலைப்பில் ஐயரவர்கள் எழுதிய நூல் அவரது திறனாய்வுச் செயற்பாட்டின் தலையாய சான்றாகும். ஐயரவர்கள் கம்பனை அனைத்துலகக் கவி வல்லாரோடு பொருத்தி நோக்கி முன்வைத்த திறனாய்வுக் குறிப்புக்களை எட்டாம் இயல் விரிவாக விளக்கி நிற்கிறது. முடிவுரை என்ற பகுதியிலே ஐயரவர்களின் இதழியல் பணி - தேசபக்தன், பாலபாரதி ஆகிய இதழ்களின் ஆசிரியராக ஆற்றிய பணி பற்றிய விபரங்கள் எடுத்துரைக்கப்படுகின்றன. ஐயரவர்கள் பற்றி பொது மதிப்பீடும் இதில் இடம்பெறுகிறது.

நூல் முழுவதையும் வாசித்து முடிக்கும்போது பாரதியாரும் வ.வே.சு. ஐயரும் வாழ்ந்த காலகட்டத்துக்கு நாம் ஒருமுறை போய்வந்த உணர்வு ஏற்படுகின்றது. ஐயரவர்களின் ஆளுமை தொடர்பாக இதுவரை வெளிப்படாத சில கூறுகள் திரை விலகுவதை அவதானிக்க முடிகிறது. தமிழை நவீனப்படுத்துவதில் பாரதியோடு ஏறத்தாழச் சமநிலையில் நின்று சிந்தித்துச் செயற்பட்ட ஒரு வரலாற்றுப் பாத்திரம் உரிய கவனத்தைப் பெறத் தவறிவிட்டதே என்ற ஆதங்கம் ஏற்படுகின்றது.

ஒருவர் எவ்வளவுதான் சிறப்பான சாதனைகளைப் புரிந்தவராக இருந்தாலும் பொதுவாழ்வில் அவர் புரிந்திருக்கக்கூடிய சில தவறுகள் அவரது வரலாற்று முக்கியத்துவத்தைப் பாதித்துவிட வல்லன என்ற உண்மை இந்நூலை வாசிக்கும்போது புலனாகிறது. தமிழின் மேன்மை, தமிழர் சால்பின் திறன் என்பன பற்றியெல்லாம் இன்று பேசியும் எழுதியும் வரும் பலருக்கு - அவர்கள் அறியாத நிலையில் கூட வ.வே.சு. ஐயரவர்கள் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார் என்பதனை அறிஞர் பெ.சு. மணி அவர்கள் இந்நூல் மூலம் அழுத்தம் பெறும் வண்ணம் உணர்த்தியுள்ளார். இவ்வகையில் நூலின் முடிவில் பி.ஸ்ரீ. ஆச்சார்யா என்பாரின் மேற்கோளாக முன்வைக்கப்பட்டுள்ள மதிப்பீட்டுக் குறிப்பு சுட்டிக்காட்டத்தக்கது:

> ‘‘பாரதியார் தம் உள்ளொளியால், தேசிய ஆவேசத்தால் வளர்த்த தமிழை ஆசிரியர் வ.வே.சு. ஐயர் தம் பெரும் புலமைத்திறத்தால், தம் அறிவுப் பரப்பால் வளர்த்தார்’’ (ப. 258).

வ.வே.சு. ஐயர் பற்றி ஏற்கனவே டாக்டர் டி.எஸ். ராஜன், கவியோகி சுத்தானந்த பாரதி, திரு. ரா.அ.பத்மநாபன் முதலியோர் நூல்கள் எழுதியுள்ளனர். பெ.சு. மணி அவர்களின் இந்நூல் மேற்சுட்டியவர்களின் ஆக்கங்களில் இடம்பெறாத விரிவான தகவல்கள் பலவற்றை உள்ளடக்கியது என்ற வகையிலும் ஒரு வரலாற்றுப் பாத்திரத்தை விமர்சன நிலையில் தரிசிக்க வைத்துள்ளது என்ற வகையிலும் தனித்தன்மை வாய்ந்ததாக - வேறுபட்ட பரிமாணம் கொண்டதாக திகழ்கிறது.

**கலாநிதி நா. சுப்பிரமணியன்**
**நன்றி: பண்பாடு**
**இந்து சமய, கலாசார திணைக்கள இதழ்**
**கொழும்பு, புரட்டாதி 1993**

**பயிற்சி**

1. *விமரிசன முன்னோடிகளுள் ஒருவரான வ.வே.சு. ஐயர் மீது வைக்கப்பட்டுள்ள விமரிசனம் யாது?*
2. *''திறனாய்வு'' என்ற பதம் விமரிசனம் என்ற பொருளிலும் கையாளப்படுவதுண்டு. இரண்டுக்கும் இடையேயான வேறுபாடு யாது?*
3. *பாரதியை நிகர்த்த ஆளுமை என வ.வே.சு. ஐயர் போற்றப்படுவதற்கான காரணங்கள் யாது?*
4. *இக்கட்டுரை ''விமரிசனம்'' எனக் குறிப்பிடப்படாமல் ''மதிப்புரை'' என குறிப்பிடப்பட்டுள்ளமைக்கான காரணம் யாது?*

## நாடகம் நயத்தல்

நாடகம் என்பது கதையை நடித்தல். நாடகம் நயத்தல் என்பது விரும்புதல் அல்லது சுவை கூறுதல் என பொருள்படும். ஆகவே நாடகம் நயத்தல் என்பது நடித்த கதையை அதன் தன்மையைக் கூறுதல் எனப் பொருள்படும்.

நாடகம் ஒன்றில் எதனை நயப்பது போன்ற வினா தோன்றுகிறது. நாடகத்தின் பிரதான விடயங்கள் யாவை என்பதை அவதானிப்போம்.

**கரு** - நாடகத்தின் கதையே கரு என அழைக்கப்படுகின்றது.

**கதை உருவாக்கம்** - நகைச்சுவை, துன்பவியல் பற்றிய கதையின் பின்னணிகள்.

**பாத்திரப் படைப்பு** - கதைக்குத் தகுந்தது, இயல்பானது, பொருத்தமானது.

**முரண் நிலை** - கதையின் காரண காரிய அடிப்படையில் கதையை நகர்த்திச் செல்லுதல்.
உ - ம்: துன்பத்தில் இருந்து விடுதலை அடைதல்

**உணர்ச்சி வெளிப்பாடு** - பாத்திரத்தின் தாக்கம், பார்வையாளனை பாதித்த தன்மை.

**ஒப்பனை** - பாத்திரத்திற்குப் பொருத்தமான பிரதிபலிப்பு இயல்பு தன்மை.

**மேடை ஒழுங்கு** - காட்சிக்கும் கதைக்கும் பொருத்தமான இட அமைப்பு.

**வடிவம்** - கதையின் உத்தி நிலையை குறிக்கும்
உ - ம்: குறியீட்டு நாடகம், நேரடிக் கதை நாடகம்.

**பிரதியாக்கம்** - நாடகத்திற்கும் நாடக எழுத்து வடிவத்திற்கும் இடையில் காணப்படும் ஒத்த தன்மை.

**கலை யுக்தி** - நாடகத்திற்குப் பொருத்தமான அமைப்பு. வடிவம், பேச்சு, உடையமைப்பு.

**நாடகம் நயத்தலின்போது கவனிக்க வேண்டியவை**

★ கதையைப் புரிந்துகொள்ளுதல்.
★ நயத்தலுக்குரிய அடிப்படைகளை அறிந்து வைத்திருத்தல்.
★ நடுவு நிலையில் நயத்தல்.
★ கற்றோருக்கு புதிய அறிவைத் தருவதாக அமைதல்.

**பயிற்சி**

நீங்கள் பார்த்த / படித்த நாடகத்தை 150 சொற்களுக்குள் நயந்து கூறுங்கள்.

## விரித்தெழுதுதல்

ஒரு பொருளை அல்லது விளக்கக் குறிப்பொன்றைப் பலரும் விளங்கிக்கொள்ளும் வண்ணம் பொருள் புலப்பட விளக்கி விரித்து எழுதுதலை ‘விரித்தெழுதுதல்’ என்பர்.

நூல்கள், சொற்பொழிவுகள், தொலைக்காட்சி நிகழ்ச்சிகள், பத்திரிகைச் செய்திகள் முதலியனவற்றில் இருந்து குறிப்பெடுத்தல் சந்தர்ப்பங்கள் பல உங்களுக்கு ஏற்பட்டிருக்கும். இவ்வாறான சந்தர்ப்பங்களில் நீங்கள் எடுத்த குறிப்புகளை விரித்துப் பொருள் புலப்பட எழுதவோ கூறவோ சந்தர்ப்பங்கள் ஏற்பட்டிருக்கும். எனினும், குறிப்புகளை விரித்து எழுதும்போதும் கூறும்போதும் சில நிபந்தனைகளையும் நுண்முறைகளையும் நீங்கள் அவதானிக்க வேண்டும்.

உசாத்துணை நாட்குறிப்பொன்றை நீங்கள் விளக்குவதானால், அந்நூலிற் குறிப்பிட்டுள்ள கருத்துக்களுக்கு மேலதிகமாக, அல்லது திரிபுபட்ட வகையில் நீங்கள் எழுதலாகாது. உங்கள் கருத்துக்களை அவற்றின் மீது இணைக்கவும் கூடாது.

அத்துடன், குறிக்கோள் கருதியே நீங்கள் குறிப்புகளை எடுக்கின்றீர்கள். எனவே, அக்குறிக்கோளை நிறைவேற்றுவதற்கேதுவாக உங்கள் விளக்கம் அமைதல் வேண்டும். இவ்வாறான வரையறைகளுக்குள் நீங்கள் விரித்து எழுத வேண்டுமெனில் பின்வரும் ஆற்றல்களை நீங்கள் வளர்க்க வேண்டும்.

1. தெளிவான சிந்தனை
2. ஐயந்திரிபற்ற விளக்கம்
3. உறுதியான ஞாபக சக்தி
4. தொடர்புபடுத்துமாற்றல்
5. சிறந்த மொழிவளம்
6. பரந்த விடயஞானம்

ஒரு கருத்தின் பல்வேறு அம்சங்களை உள்ளடக்கியே ஒரு குறிப்பை ஒரு சொல்லில் அல்லது சொற்றொடர்களில் எழுதுகின்றோம். அதனை விளங்கிக் கூறுவதற்கு மேற்குறித்த ஆற்றல்களின் இயைபு எமக்கு அவசியமே.

**விரித்துக் கூறும் சந்தர்ப்பங்கள்**

1. அறிக்கைப்படுத்தும் போது
2. கட்டுரையாக்கத்திற்கு பயன்படுத்தும் போது
3. மேடைப் பேச்சுக்கு
4. செய்யுள் ஒன்றின் பொருளை ஆய்ந்து எழுதும் போது

**பயிற்சி**

'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு', 'அறிவின் அளவுகோல்கள் நூல்களும் வாசிப்புமே' என்ற தலைப்புக்களின் கீழ் முப்பது சொற்கள் கொண்ட பந்தியாக விரித்தெழுதுக.

## இணைப்பிடைச் சொற்கள்

வாக்கியத்தினுள்ளும் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கியங்களைப் பொருட்பொருத்தம் உடைய வகையில் இணைப்பதற்குப் பயன்படும் இடைச்சொற்கள் இணைப்பிடைச் சொற்கள் எனப்படும். தமிழில் பல இணைப்பிடைச் சொற்கள் உள்ளன. அவற்றுள் சில இங்கு தரப்பட்டுள்ளன.

**அல்லது**

உ - ம் நீ அல்லது நான் இதைச் செய்ய வேண்டும்.
உன்னை அல்லது வேறு எவரையும் நம்ப மாட்டேன்.

**அல்லாமல்**

உ - ம் உன்னை அல்லாமல் துணைக்கு யார் உளர்?

**அன்றி**

உ - ம் உன்னை அன்றி வேறு யார் உளர்?

**ஆதல்**

உ - ம் நீயாதல் நானாதல் இப்பணியை முடிக்க வேண்டும்.

**ஆகவே**

உ - ம் படித்தால்தான் சித்தி அடையலாம்; ஆகவே நன்கு படிக்க வேண்டும்.

**ஆகையால்**

உ - ம் மழை பொய்த்தது; ஆகையால் பயிர் விளையவில்லை.

**ஆதலால்**

உ - ம் அவன் ஒழுங்காகப் படித்தான்; ஆதலால் நன்கு முன்னேறினான்.

**ஆயினும்**

உ - ம் அவன் நன்கு படித்தான்; ஆயினும் அவன் சித்தி எய்தவில்லை.

**ஆவது**

உ - ம் நீயாவது நானாவது விழாவுக்குச் செல்ல வேண்டும்.

**ஆனால்**

உ - ம் நீ கடிதத்தைப் படித்தாயானால் உனக்கு உண்மை விளங்கும்.
நான் இந்தப் புத்தகத்தைப் பலமுறை வாசித்தேன்; ஆனால் எனக்கு விளங்கவில்லை.

**ஆனாலும்**

உ - ம் அவனைப் பலமுறை கண்டிருக்கிறேன்; ஆனாலும் பேசிப் பழகவில்லை.

**என்றாலும்**

உ - ம் கடுகு சிறிது; என்றாலும் காரம் பெரிது.

**எனினும்**

உ - ம் நீ அந்த விழாவுக்கு வந்திருந்தாய்; எனினும் உன்னை நான் காணவில்லை.

# அடுக்கிடுக்குத் தொடர்

அடுக்குத் தொடர்களுக்குள்ளே முதல் வரும் மொழி விகாரமடைந்து, கூற வந்த பொருளை அழுத்திக் கூறி சிறப்பித்துக்காட்ட உதவுகின்றது. இவ்வாறான தொடர் அடுக்கிடுக்குத் தொடர் எனப்படும்.

| **அடுக்குத் தொடர்** | | **அடுக்கிடுக்குத் தொடர்** | | **பொருள்** |
|---|---|---|---|---|
| பச்சை பச்சை | - | பச்சைப்பசேலென | - | மிகப்பச்சை |
| தெளிவு தெளிவு | - | தெட்டத்தெளிவு | - | மிகத்தெளிவு |
| பகல் பகல் | - | பட்டப்பகல் | - | நடுப்பகல் |
| நடு நடு | - | நட்டநடு | - | சரிமையம் |
| மயங்கி மயங்கி | - | மதிமயங்கி | - | மிகமயக்கம் |
| கொதித்து கொதித்து | - | கொதிகொதித்து | - | மிகச்சூடு |
| நெடு நெடு | - | நெட்டநெடு | - | மிகநெடு |
| கரிய கரிய | - | கன்னங்கரிய | - | மிகக்கரிய |
| சிவந்த சிவந்த | - | செக்கச்சிவந்த | - | மிகச்சிவந்த |
| சிறிய சிறிய | - | சின்னஞ்சிறிய | - | மிகச்சிறிய |
| பெரிய பெரிய | - | பென்னம்பெரிய | - | மிகப்பெரிய |
| வெளி வெளி | - | வெட்டவெளி | - | திறந்தவெளி |
| தனித்தனி | - | தன்னந்தனிய | - | மிகத்தனி |

**பயிற்சி**

மேலே தரப்பட்டுள்ள அடுக்கிடுக்குத் தொடர்களில் எவையேனும் ஐந்து தொடர்களை பொருள் விளங்க தனித்தனி வாக்கியத்தில் அமைத்துக் காட்டுக.

# மரபுத் தொடர்கள்

ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் தொடர்ந்து நின்று நேர்பொருளை உணர்த்தாமல் குறிப்பான பொருளை உணர்த்தி வழங்கப்படுவன மரபுத் தொடர்கள் எனப்படும்.

1. விபீடணன் பிறர் மனைவியை விரும்புதல் அறம் ஆகாது என இராவணனிடம் இடித்துரைத்தான்.

   இங்கு இடித்துரைத்தல் என்பது மரபுத் தொடர் ஆகும். அது நேரடிப் பொருளையன்றி குறிப்புப் பொருளையே உணர்த்துகின்றது.

கீழே தரப்பட்டுள்ள மரபுத் தொடர்களையும் அவை ஒவ்வொன்றினதும் குறிப்புப் பொருளையும் அறிந்துகொள்க.

1. அரைப்படிப்பு - நிரம்பாத கல்வி
2. அள்ளியிறைத்தல் - மிகைச் செலவு
3. அவசரக்குடுக்கை - பதற்றக்காரன்
4. ஆழம் பார்த்தல் - ஒருவரின் தகுதி பற்றி ஆராய்தல்
5. இருதலைக்கொள்ளி - இருபக்கமும் துன்பம்
6. இலை மறை காய் - வெளிப்படாது மறைந்திருத்தல்
7. எடுப்பார் கைப்பிள்ளை - யாவருக்கும் வசப்படக் கூடியவன்
8. ஒற்றைக் காலில் நிற்றல் - விடாப் பிடியாய் நிற்றல்
9. ஒட்டைக் கையன் - செலவாளி
10. கங்கணங் கட்டுதல் - ஒன்றைச் செய்து முடித்தற்கு முனைந்து நிற்றல்
11. கண்ணோடுதல் - இரங்குதல்
12. கண்மூடித்தனம் - அறியாமை
13. கரையேறுதல் - உய்வடைதல்
14. தட்டிக்கழித்தல் - சாக்குப் போக்குச் சொல்லல்
15. துறை போதல் - நிரம்பக் கற்றல் / ஐயந் திரிபறக் கற்றல்
16. மல்லுக்கட்டுதல் - மோதிக்கொள்ளுதல் / கட்டாயப்படுத்துதல்
17. வயிற்றிலடித்தல் - சீவனத்தைக் கெடுத்தல்
18. விழலுக்கிறைத்தல் - வீண்பாடுபடுதல்
19. கிள்ளுக் கீரை - மிகவும் எளியது
20. நுனிப்புல் மேய்தல் - மேலெழுந்தவாரியாகப் படித்தல்

# 7 இன்னொரு பக்கம்

**தாமரைச்செல்வி (1953)**

கிளிநொச்சியிலுள்ள குமாரபுரம் என்ற விவசாயக் கிராமத்தில் பிறந்தவர். சிறுகதை, நாவல் ஆகியவற்றில் ஈடுபாடு மிக்கவர். 1977 இல் வீரகேசரிப் பிரசுரமாக வெளிவந்த 'சுமைகள்' இவரது முதல் நாவல் ஆகும். இவரது சிறுகதைகள் ஆங்கிலம், சிங்களம் ஆகிய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரின் 'பசி' என்ற சிறுகதை குறும்படமாக வெளிவந்துள்ளது. மிக எளிய மொழியில் சாதாரண மக்களின் பிரச்சினைகளைப் பகிர்ந்துகொள்வதிலும் கிளிநொச்சிப் பிரதேசத்தின் வனப்பைப் பதிவாக்குவதிலும் இவரது படைப்புக்கள் முனைப்புப் பெற்றுள்ளன.

வழமை போலவே இன்றைக்கும் இரத்த அழுத்தச் சிகிச்சை நிலையத்தில் சனக்கூட்டம் அலைமோதியது. மேலே கூரையால் வேய்ந்த நீளமான கொட்டகை அரைச்சுவர் வைக்கப்பட்டு மேலே இடைவெளிவிட்டு மரச்சட்டங்கள் அடிக்கப்பட்டிருந்தன. நோயாளர் அமர்வதற்கு வரிசையாய் வாங்குகள். அக்கராயன் ஆஸ்பத்திரிக்கு எதிரே தெருவின் மறுபுறம் இந்தச் சிகிச்சை நிலையம் அமைந்திருந்தது.



காலை ஆறு மணிக்கே இலக்கத் துண்டு எடுக்க ஆட்கள் வந்துவிடுவார்கள். இன்றைக்கு அவள் வருவதற்குத் தாமதமாகிவிட்டது. விடியற்காலையில் எழுந்து ஒரு

சோறும் கறியும் சமைத்து வைத்துவிட்டு, குழந்தைகளைப் பக்கத்து வீட்டம்மாவைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு, ஆனைவிழுந்தான் குளத்திலிருந்து நடந்து வந்து சேர பத்து மணியாகிவிட்டது. அந்த நேரத்துக்கே வெய்யில் சுள்ளென்று எரிக்கத் தொடங்கிவிட்டது. வேர்த்து விறுவிறுக்க வந்தவளுக்கு குவிந்து நின்ற சனத்தைப் பார்த்ததும் திக் என்றது.

இரத்த அழுத்தம் என்பது பயமுறுத்தும் வார்த்தை. அதுவும் இப்போ நாலைந்து நாளாக தலைச்சுற்றல், சோர்வு இருக்கிறது. இரண்டு வருடங்களாக தொடர்ந்து 'அல்டோமட்' குளிசை போட்டு வருகிறாள். இன்றைக்கு குளிசைகளை மாற்றித் தரக்கூடும் அல்லது அளவைக் கூட்டக்கூடும். இன்னும் எத்தனை காலத்துக்கு இப்படி தொடராய் குளிசைகள் போட வேண்டியிருக்குமோ தெரியவில்லை. ஆஸ்பத்திரியில் குளிசைகள் இல்லாமற் போனால் வெளியே காசு கொடுத்து வாங்க வேண்டியும் வந்துவிடும். பிரச்சினைகளும் கவலைகளும் இருக்கும் வரை இந்த பிரஷரும் இருக்கப் போகிறது. இந்த வருத்தம் ஏன் வந்து சேர்ந்தது என்று கவலையாக இருந்தது. இடையிலே போய்விடுவேனோ என்ற பயம் எத்தனை நாட்கள் தோன்றியிருக்கிறது. அதனால் தான் எத்தனை கஷ்டம் இருந்தாலும் கிளினிக்குக்குத் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கிறாள். அவள் உள்ளே நுழையும்போதே உள்ளே ஆட்கள் நிறைந்துவிட்டார்கள்.

தந்தை இல்லாத நிலையில் தனக்கேதும் நடந்துவிட்டால் குழந்தைகள் அனாதைகளாகிவிடுவர் என்ற பயம் நெஞ்சப்பரப்பில் எந்நேரமும் உறைந்து போயிருந்தது. மூன்று வருடங்களுக்கு முன்னர் கிளிநொச்சியில் தங்கள் வீடு பார்த்துவர என்று போன கணவன் பிறகு திரும்பவில்லை. ''வீட்டையும் பாத்திட்டு தேங்காயும் புடுங்கிக்கொண்டு வாறன். நீ யோசிக்காத. நான் கவனமாய்ப் பாத்துத்தான் போவன்'' என்று சொல்லிக்கொண்டு ஒரு விடிகாலையில் பசளைப் பையுடன் போனவன்தான். புருவ மத்தியில் விழுந்த முடிச்சுடன் யோசனையும், கவலையும் படிந்த அந்த முகமே கடைசியாய் மனதில் நிலைத்துப்போனது. அழுது அழுது கரைந்துகொண்டிருக்கும் அவளுக்கு இந்த வருத்தமும் வந்து சேர்ந்துகொண்டது.

அவள் உள்ளே நுழையும்போதே ஆட்கள் நிறைந்துவிட்டார்கள். அவள் ஆட்களை விலக்கிக்கொண்டு முன்புறம் சென்றாள். ஒருபக்க மேசையில் வேணி மிஸ்ஸி அமர்ந்திருந்தாள். தொடர்ந்து வருவதனால் ஏற்பட்ட அறிமுகத்தினால் ''என்னம்மா இன்றைக்கு வரப் பிந்திட்டுது?'' என்று கேட்பாள் என எதிர்பார்த்தாள். ஆனால் எதுவுமே கேட்காமல் இலக்கத் துண்டை எடுத்து அவளிடம் கொடுத்தாள். வேணி மிஸ்ஸூற்கு முகம் எப்போதுமே மலர்ச்சியாக இருக்கும். எவ்வளவு கூட்டம் வந்தாலும் சமாளித்து இதமாகக் கதைத்து ஒழுங்குபடுத்தி அமர வைப்பாள். ஆனால் இன்றைக்கு என்னவோ முகத்தில் மலர்ச்சியைக் காண முடியவில்லை. பின் வரிசையில் வந்து அமர்ந்துகொண்ட அவள் சுற்றுமுற்றும் பார்த்தாள். அநேகமானவர்கள் தொடர்ச்சியாய் கிளினிக்குக்கு வருவதால் அறிமுகமானவர்களாக இருந்தார்கள்.

அலுப்பு, சோர்வு, கவலை சூழ்ந்த முகங்கள், வருத்தங்களையும் தாண்டி வாழ்வின் சுமைகள் நெஞ்சை நெரித்துக்கொண்டிருப்பதால் சந்தோஷமே துடைக்கப்பட்டு வெறுமையாய்ப் போன முகங்கள். தனது முகமும் இந்த விதமாய்த்தான் இருக்கும் என்று அவளுக்குத் தெரியும். இடுப்பில் சொருகியிருந்த சேலைத் தலைப்பை எடுத்து முகத்தை அழுத்தமாய்த் துடைத்துக்கொண்டாள்.

அந்த நீள கொட்டகைக்குள் வைத்தியருக்கு ஒரு புறமாக மேசை போடப்பட்டு முன்புறமாக நீல நிற துணியில் திரை தொங்கிக்கொண்டிருந்தது. இன்னும் வைத்தியர் வரவில்லை. மறுபக்க மேசையில்தான் வேணி மிஸ்ஸி அமர்ந்து, வருகிறவர்களுக்கு இலக்கத்துண்டு கொடுத்தும் ஆட்களை வரிசையாய் அமர வைத்துக்கொண்டும் பெரிய கொப்பியில் ஏதோ எழுதிக்கொண்டுமிருந்தாள். வேணி மிஸ்ஸியுடன் நிற்கும் மற்ற தாதி குழந்தை பெற்றுக்கொண்டதால் வரவில்லை என்று பக்கத்திலிருந்த பெண் சொல்லிக்கொண்டிருந்தாள். இருவர் நின்றாலே சமாளிப்பது கஷ்டம். வேணி மிஸ்ஸி எப்படித்தான் இன்றைக்கு தனியே சமாளிக்கப் போகின்றாவோ தெரியவில்லை.

பதினொரு மணியானபோது கொட்டகைக்குள் போட்ட வாங்குகள் நிரம்பி வெளியேயும் ஆட்கள் நின்றார்கள். வெளியே வெய்யில் கொழுத்திக் கொண்டிருந்தது. எப்போது வைத்தியர் வந்து, எப்போது காட்டி, எப்போது மருந்து எடுத்து, எப்போது வீடு போய்ச் சேர்வது என்ற தவிப்பு எல்லோர் முகங்களிலும்..

''இன்னும் டொக்டரைக் காணேலை மிஸி. எப்ப வருவார்?'' பொறுமை இழந்து வேணி மிஸ்ஸிடம் கேட்டார்கள்.

''கெதியில வந்திடுவார். மிதி வெடியில கால் அகப்பட்ட ஆளை கிளிநொச்சியிலிருந்து கொண்டு வந்திருக்கினம். டொக்டர்மார் அதைப் பார்த்துக் கொண்டிருக்கினம். ரெண்டு மூன்று டொக்டர்மார் தானே எல்லாத்தையும் கவனிக்க வேணும். அங்க ஓ.பி.டி. யிலயும் ஆட்கள் குவிஞ்சு போயிருக்கினம். டொக்டர் வார்ட்டும் பார்க்க வேணும். கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கோ, வந்திடுவார்''

வேணி மிஸ்ஸியும் ஏதோவொரு அவசரத்தில் இருப்பதாகத்தான் தோன்றியது. அடிக்கடி நேரத்தைப் பார்ப்பதும் வாசலைப் பார்ப்பதும் ஏதோ எழுதுவதுமாக இருந்தாள்.

தெருவில் புழுதி பரப்பிக்கொண்டு வாகனங்கள் ஓடின. செம்மண் தூசி காற்றில் மிதந்து வந்து மூக்கை நெருடியது. வெய்யிலின் வெம்மையில் முகமெல்லாம் எரிந்தது.

''எப்பிடியும் டொக்டர் வந்திடுவார். அவரும்தான் என்ன செய்யிறது? மூச்சுவிட நேரமில்லாமல் அதையும் இதையும் பார்க்க வேண்டிக்கிடக்கு'' தெருவின் எதிர்ப்பக்கம் ஆஸ்பத்திரியைப் பார்த்துக்கொண்டே ஒருவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

அவளுக்கு தொடர்ந்து அமர்ந்திருக்க முடியாமல் நாரி பிடித்துக்கொண்டது. எழுந்து உலவ முடியாமல் சனம் நிறைந்து நின்றது. பலவிதமான குரல்கள் இங்கு வருவதன் மூலம் அறிமுகமாகிக் கொண்டவர்கள். தங்கள் கவலைகளைப் பகிர்ந்துகொள்ளும் குரல்கள்; ஒவ்வொருவருக்கும் எத்தனையோ விதமான பிரச்சி னைகள்.. என் சோகம் பெரிதா.. உன் சோகம் பெரிதா.. என்று தீர்மானித்துக் கொள்ளவியலாத நிலைமையில்தான் பலபேர் இருக்கிறார்கள்.

''பன்னிரண்டரைக்கு டொக்டர் வாறார்'' என்று ஆட்கள் பரபரத்துக் கொண்டே வாங்கில் நெருக்கிக் கொண்டு அமர்ந்தார்கள். அவள் பின்பக்கம் திரும்பி வாசலைப் பார்த்தாள். அவசரமாய் உள்ளுக்கு வந்த வைத்தியர் ஆட்களைக் கடந்து தன்னுடைய கதிரையில் போய் அமர்ந்தார். விலகிய திரையின் வழியே அவர் கைக்குட்டையால் வேர்த்துப் போயிருந்த முகத்தைத் துடைப்பது தெரிந்தது. வேணி மிஸ்ஸியைப் பார்த்து ஆட்கள் வரலாம் என்பது போல தலையசைத்தார்.

''கொஞ்சம் வரிசையில அப்பிடியே இருங்கோ. ஏன் ஐயா இடையில எழும்புறீங்கள்? இருங்கோ, எல்லாரையும் டொக்டர் ஐயா பார்ப்பார். வரிசையில வாங்கோ''

வேணி மிஸ்ஸி முன் நின்ற ஒவ்வொருவரையும் அழைத்துப் போக கொஞ்சம் ஆறுதலாக இருந்தது.

வீட்டில் விட்டு வந்த குழந்தைகளின் நினைவு வந்தது. சாப்பிட்டாங்களோ.. இல்லையோ.. குழப்படி செய்யாமல் இருக்கிறாங்களோ என்னமோ.. இந்த அனாதரவான நிலையை நினைத்தால் உடனும் கண்களில் மழுக்கென்று நீர் நிறைந்துவிடும். நொந்த மனதுக்கு இன்னொரு நொந்த மனம் ஆறுதல் என்பது போல பக்கத்து வீட்டம்மாவின் உதவி கிடைப்பதால்தான் கொஞ்சமேனும் நிம்மதியாய் அவளால் இருக்க முடிகிறது. அவள் வீட்டுக்கு போய்ச் சேர்வதற்குள் சின்னது கத்திக் களைத்துவிடும். இன்றைக்கு மருந்து எடுத்துக்கொண்டு போக நன்றாக நேரம் போகப் போகிறது.

வைத்தியரும் என்ன செய்வது? எத்தனை அலுவல்களைப் பார்க்க வேண்டியிருக்கிறது? இங்கு வைத்தியர்களுக்கோ தாதிமார்களுக்கோ சாப்பிடக்கூட நேரம் கிடைப்பதில்லை. அக்கராயன் வைத்தியசாலை நோயாளிகளால் திணறிக்கொண்டிருந்தது. பல சமயங்களில் நோயாளர் வரிசை முற்றம் தாண்டி தெருவரை வந்துவிடும். பலபேருக்கு வைத்தியசாலைக்கு வருவதெனில் அது ஒரு முழுநாள் வேலையாய் ஆகிவிடுகிறது.

வரிசை மெதுவாய் நகர்ந்து கொண்டிருந்தது. வயிற்றில் பசி எழுந்து அடங்கி விட்டிருந்தது. வரும் அவசரத்தில் காலையில் கூட எதுவும் சாப்பிடவில்லை.

தொண்டை வரண்டு போக தண்ணீராவது குடிக்க வேண்டும் போலிருந்தது. இவ்வளவு நேரமும் இருந்தாகிவிட்டது. இன்னும் கொஞ்சநேரம்தானே?

நான்கு மணிக்கு மேலாகிவிட்டது. அவள் அறிந்தவரை வேணி மிஸ்ஸி கூட அங்கே இங்கே என்று அசையவில்லை. இந்தப் பசியும் தாகமும் அவளுக்கும் இருக்கும்தானே? மிஸ்ஸியின் முகத்தைப் பார்க்கும்போது ஏதோ யோசனையிலும் கவலையிலும் இருப்பதாகத்தான் தோன்றியது. வழமைக்கு மாறாக ஒரு பரபரப்பும் தவிப்பும் அவளின் முகத்தில் தென்பட்டது.

பாவம் என்னென்ன பிரச்சனைகளோ..?

தனிய நின்று பணி செய்ததில் ஏற்பட்ட களைப்பு முகத்தில் தெரிந்தது.

வரிசை நகர்ந்து அவளின் முறை வந்தபோது எழுந்து உள்ளுக்குச் சென்றபோது நாலரை மணியாகிவிட்டது.

''இதில இருங்கோம்மா''

இரத்த அழுத்தம் சோதித்து நிலைமைகளை ஆதரவாய்க் கேட்டு வைத்தியர் குளிசையை அளவுகூட்டி எழுதிக்கொடுத்தார்.

''யோசிக்கக் கூடாது அம்மா. உப்பு, கொழுப்பு குறைச்சு சாப்பிட வேணும். சாப்பாட்டில கவனம் இருக்க வேணும்'' அவரின் இதமான குரல் மனதைத் தொட்டு உலுப்ப, ''யோசிக்காமல் எப்பிடி இருக்கிறது?'' என்ற வார்த்தை தொண்டை வரை வந்து சிக்கிக் கொண்டது.

''கவலைப் படக்கூடாது அம்மா, குளிசையளை ஒழுங்கா போடுங்கோ. பிரச்சனை வராது''

அவள் மௌனமாய் தலையசைத்துவிட்டு எழுந்து திரைச்சீலையை விலக்கி வெளியே வந்தாள். திடீரென்று ஒரு சோர்வு உடலைத் தள்ளாட வைத்தது. வேணி மிஸ்ஸி சட்டென்று தாங்கிப் பிடித்து, ''கவனம் அம்மா'' என்று வாங்கிலில் இருக்க வைத்தாள்.

''பிள்ளையள் தனிய வீட்டில, உதவி இல்லாதனான்..''

குரல் தழும்ப சொன்னாள்.

''இங்க உதவி இல்லாத ஆட்கள்தான் நிறைய இருக்கினம் அம்மா. கவலைப்பட்டு என்ன செய்யிறது. வருத்தம்தான் வரும்''

''பக்கத்து வீட்டம்மாவை பாத்துக்கொள்ளச் சொல்லிட்டு வந்தனான்''

வேணி மிஸ்ஸி ஆட்களை வைத்தியரிடம் அனுப்புவதற்காகப் போக அவள் எழுந்து வெளியே வந்தாள்.

இப்போது வெய்யிலின் வெம்மை சற்றுத் தணிந்திருந்தது. தெரு கடந்து வைத்தியசாலைக்கு உள்ளே மருந்து எடுக்கும் இடத்துக்கு வந்தாள். வரிசையில் நின்று மருந்து எடுத்து வர ஐந்து மணிக்கு மேலாகிவிட்டது.

அப்பாடா இனி வீட்டை போகலாம் என்று நினைத்தபோதுதான் பக்கத்துவீட்டு உமா தன் குழந்தையைக் காய்ச்சல் என்று வார்ட்டில் வைத்திருப்பது ஞாபகத்துக்கு வந்தது. இவ்வளவு நேரம் நின்றாகிவிட்டது. பார்வையாளர் நேரம்.. எட்டிப் பார்த்துவிட்டே போகலாம் என்ற நினைவில் உள்ளே விறாந்தையில் நடந்து போனாள். மருந்து வாசனை முகத்தில் அடிக்க, நோயாளிகளின் முனகல் கடந்து குழந்தைகள் வார்ட்டுக்குள் நுழைந்தாள்.

உமா நிற்பதைப் பார்த்துவிட்டு கட்டிலை நெருங்கினாள். உமாவின் மகன் சிறிது தெளிந்த முகத்துடன் படுத்திருந்தான். உமா தன் கையில் நாலு வயதுக் குழந்தையைத் தூக்கி வைத்து சமாதானப் படுத்திக்கொண்டிருந்தாள். அழுததில் குழந்தையின் கண்களும் முகமும் சிவந்து போயிருந்தது.

அம்மா... அம்மா என்ற முனகல்.

''அழக்கூடாது அப்பன், அம்மா இப்ப வந்திடுவா''

''ஆற்ற குழந்தை இது?''

''பக்கத்துக் கட்டிலில் இருக்கிற குழந்தை. மூளை மலேரியா எண்டு வார்ட்டில இருக்கிற பிள்ளை. இண்டைக்கு காய்ச்சல் விட்டிட்டுது. ஆனா அம்மா அம்மா எண்டு ஒரே சிணுங்கிக் கொண்டிருக்கு. பாவம் இனித் தாய் வந்திடுவா, இண்டு முழுக்க நான்தான் பாத்துக்கொள்ளுறன். பக்கத்தில நிற்கிறனான். இதுகூட செய்யேலாதே''

அப்போது அந்தப் பக்கமாய் வந்த வார்ட் தாதி குழந்தையின் கன்னத்தில் தட்டி,

''வினுக்குட்டிக்கு அம்மா இன்னும் வரேலையே, இனி வந்திடுவா என்ன?'' என்று சொல்லிவிட்டுப் போக,

''ஏன் குழந்தையின்ர தாய் எங்கே?'' என்று கேட்டாள்.

*அவள் கேட்டுக் கொண்டிருக்கையிலே அவசரம் அவசரமாய் ஓடி வந்த வேணி மிஸ்ஸி குழந்தையை உமாவிடமிருந்து வாங்கிக்கொண்டாள்.*

*''சரியாய் அழுதிட்டானா? அங்க சரியான சனம். கிளினிக் முடிய நேரம் போயிட்டுது. மாறிவிடவும் ஆள் இல்லை. லீவு எடுக்குறதும் சரியில்லை. விட்டிட்டும் வர ஏலாது, அதுதான்..''*

*கண்கலங்கிய குழந்தையைத் தோளில் சாய்த்துக் கொண்டு,*

*''அழாதையப்பன் அம்மா வந்திட்டனல்லே?'' என்று முகத்தைத் தடவிக் கொடுத்தாள்.*

*தாயின் கழுத்தைக் கட்டிக்கொண்டு விசும்பும் குழந்தையை அவள் திகைப்போடும் கவலையோடும் பார்த்துக்கொண்டிருந்தாள்.*

**தாமரைச் செல்வி.**
**'வன்னியாச்சி' சிறுகதைத் தொகுதி**

**பயிற்சி**

1. *இக்கதையின் கரு யாது?*
2. *வேணி மிஸ்ஸி என்ற பாத்திரத்தின் குணாம்சம் எப்படிச் சித்திரிக்கப்படுகின்றது?*
3. *''இன்னொரு பக்கம்'' என்பதினூடாக ஆசிரியர் எதைக் கூற விழைகிறார்?*
4. *இச்சிறுகதையை முன்னிறுத்தி 'வீட்டுக்கு வீடு வாசற்படி' எனும் தலைப்பில் சிறுகுறிப்பு எழுதுக.*

# விவாதம்

விவாதம் என்பது ஒருவிடயம் தொடர்பாக சார்பாகவும் எதிராகவும் முன்வைக்கப்படும் சொற்போராகும். இதில் தர்க்கித்தல், சார்புக் கருத்தை ஆதாரத்துடன் முன்வைத்தல், எதிர்கருத்தை ஆதாரத்துடன் வெட்டிப் பேசுதல் முக்கிய பணிகளாகும். விவாதத்தில் பின்வரும் அம்சங்களைக் கருத்திற் கொள்ளவேண்டும்.

★ இரண்டு குழுக்கள் விவாதத்தில் ஈடுபடும்.

★ ஒழு குழு ஒரு கருத்தை ஆம் என்று ஆதரித்தும், மறு குழு இல்லை என்று தம் கருத்தை ஆதரித்தும் கருத்துக்களை முன்வைக்கும்.

★ தலைப்பு வரன்முறைக்கு உட்பட்டதாக விவாதம் அமையும்.

★ நியமமொழி வழக்கு பயன்படுத்தப்படும்.

★ பேசும் நேரம் வரையறுக்கப்பட்டிருக்கும்.

★ ஆகக் குறைந்தது மூவர் நடுவர்களாக அங்கம் வகிப்பர். அதற்கு மேலதிகமாக அங்கம் வகிப்பின் ஒற்றையாக அமைதல் வேண்டும்.

★ ஒட்டிப் பேசுவதும் வெட்டிப் பேசுவதும் விவாதம் நடைபெறும் நேரத்திற்கு முன் தீர்மானிக்கப்படும்.

★ ஒருவர் தன் கருத்தை முன்வைத்த பின்னர் மற்றவர் தனக்கு கிடைக்கும் சந்தர்ப்பத்திலேயே ஒட்டியும் வெட்டியும் பேச முடியும். ஒருவர் பேசிக் கொண்டிருக்கும்போது அவற்றை இடையூறு செய்யவோ குறுக்கிட்டுப் பேசவோ முடியாது.

**விவாதத்தில் இடம்பெற வேண்டியவை**

1. அவை வணக்கம்
2. தலைப்பை விளக்குதல்
3. சார்புக் கருத்தை முன்வைத்தல்
4. கவர்ச்சியாகப் பேசுதல்
5. தொனி வேறுபாடுகளுடன் பேசுதல்
6. இலக்கணப் பிழையின்றி கருத்துடன் பேசுதல்
7. எதிர்த் தரப்பின் கருத்துக்களை உள்வாங்கி இங்கிதமாக வெட்டிப் பேசுதல்

8. எடுத்த கருத்தை வலியுறுத்தி நிறைவுசெய்தல்
9. சபைக்கு நன்றிகூறி விடைபெறுதல்

**விவாதத்தில் தவிர்க்கப்படவேண்டியவை**

1. கூறியது கூறல்
2. முன் பின் முரணாகக் கூறல்
3. தெளிவின்றிப் பேசுதல்
4. குறுக்கிட்டுப் பேசுதல்
5. ஆதாரமின்றி பேசுதல்
6. தகாத வார்த்தைப் பிரயோகம்

**செயற்பாடு**

பின்வரும் தலைப்புக்களில் வகுப்பறையில் விவாதம் செய்க.

★ கற்றலுக்கு உதவுவது தொடர்புச்சாதனங்களாகும்.
★ விஞ்ஞான தொழில்நுட்ப வளர்ச்சியே சூழல் மாசடையக் காரணமாகும்.
★ வீட்டிலேயே நற்பழக்கவழக்கங்கள் ஏற்படுகின்றன.

# தொகை நிலைகள்

தொகை என்பது உருபு மறைந்து வருதல் எனப் பொருள்படும். **உ - ம்** 'புத்தகம் எழுதினான்'. இது 'புத்தகத்தை எழுதினான்' என்று விரிந்து பொருள் தரும். புத்தகம் என்ற சொல்லுக்கும் எழுதினான் என்ற சொல்லுக்கும் இடையில் ஐ என்ற இரண்டாம் வேற்றுமை உருபு மறைந்து வந்துள்ளது. எனவே இரண்டு சொற்கள் பொருளுடன் இணைந்து வரும்போது உருபு முதலானவை மறைந்து வந்தால் அது தொகை நிலைத் தொடர் எனப்படும். இவை ஆறு வகைப்படும். வேற்றுமைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உவமைத் தொகை, உம்மைத் தொகை, அன் மொழித் தொகை என்பனவாகும்.

## வேற்றுமைத் தொகை

ஐ, ஆல், கு, இன், அது, கண் ஆகிய இரண்டு முதல் ஏழாம் வேற்றுமை வரை உள்ள உருபுகள் மறைந்து நிற்க சொற்கள் இணைந்து தொகைச் சொல்லாக (கூட்டுப் பெயராக) அமைவது வேற்றுமைத் தொகை எனப்படும்.

**உ - ம்**

| | | | |
|---|---|---|---|
| • சோறு சாப்பிட்டான் | ஐ | - | சோற்றைச் சாப்பிட்டான் |
| • கை பிடித்தான் | ஆல் | - | கையால் பிடித்தான் |
| • ஆசிரியர் மகள் | கு | - | ஆசிரியருக்கு மகள் |
| • மலைவீழ் அருவி | இன் | - | மலையின் வீழும் அருவி |
| • பனிக்குளிர் | அது | - | பனியினது குளிர் |
| • காடு புகுந்தான் | இல் | - | காட்டில் புகுந்தான் |

### வினைத்தொகை

ஒரு வினைச் சொல்லில் காலம் காட்டும் இடை நிலையும் விகுதியும் மறைந்து வந்தால் வினைத் தொகை எனப்படும்.

***உ - ம்:*** கடிநாய், வெட்டுக்கத்தி, விடுகதை

### பண்புத் தொகை

ஆகிய என்னும் பண்புருபு கெட்டு நிற்கப் பண்புப் பெயரோடும் பண்பிப் பெயர் தொடர்வது (பண்பி எனப்படுவது பண்பை உடையது)

உ - ம் வெண் + தாமரை - இது வெண்மையாகிய தாமரை என விரியும்.

| | |
|---|---|
| செந்தாமரை | வண்ண பண்புத் தொகை |
| வட்ட முகம் | வடிவ பண்புத் தொகை |
| முக்குணம் | அளவு பண்புத் தொகை |
| இன்சொல் | சுவை பண்புத் தொகை |

### இரு பெயரொட்டுப் பண்புத் தொகை

ஆகிய எனும் பண்புருபு கெட்டு நிற்க பொதுப் பெயரோடு, சிறப்புப் பெயராயினும் சிறப்புப் பெயரோடு பொதுப் பெயராயினும் தொடர்வது.

**உ -ம்** மன்னன் கரிகாலன் (பொதுப் பெயர் + சிறப்புப் பெயர்)
சாரைப் பாம்பு (சிறப்புப் பெயர் + பொதுப் பெயர்)

### உம்மைத் தொகை

இரண்டு பெயர்ச் சொற்கள் இணையும் போது உம் எனும் உருபு இடையிலும் இறுதியிலும் மறைந்து வருவது உம்மைத் தொகையாகும்.

**உ - ம்:** தாயும் தந்தையும்

### உவமைத் தொகை

உவமை உருபுகளான போல, ஒப்ப, புரைய போன்றன மறைந்து வருவது உவமைத் தொகையாகும்.

**உ - ம்:** மதிமுகம், பவளவாய்

### அன்மொழித் தொகை

வேற்றுமைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உவமைத் தொகை, உம்மைத் தொகை எனும் ஐந்து தொகைகள் அல்லாது பிறமொழி உருபுகள் மறைந்து வருவது அன்மொழித் தொகை எனப்படும்.

**உ - ம்:** பூங்குழல் வந்தாள் - 2ம் வேற்றுமைத் தொகை புறத்தே பிறந்த அன்மொழித் தொகையாகும்.

பூவை அணிந்த குழலினையுடைய பெண் என விரிந்து பொருள்தரும்.

**பயிற்சி**

பின்வருவன எவ்வெத் தொகை என எழுதுக.

- ★ நீர் குடித்தான்
- ★ மரவேர்
- ★ தலைவணங்கினான்
- ★ பசுந்தரை
- ★ வீடுபுகுந்தான்
- ★ இலங்கை வெற்றி
- ★ கொல்களிறு
- ★ கடல்காற்று

# நேர்காணல்

கலை இலக்கியப் படைப்பாளிகள், சமூக அக்கறையுள்ள செயற்பாட்டாளர்கள், அரசியல் பிரமுகர்கள், விளையாட்டு வீரர்கள், முகாமைத்துவச் சாதனையாளர்கள் இன்னும் இதுபோன்ற பல்துறைகளிலும் இயங்கிய அனுபவச் செழுமை கொண்டோரிடம் நேர்காணல் பெறப்பட்டு வெளியிடப்படுவது உலக வழக்கு. பத்திரிகை, வானொலி, தொலைக்காட்சி என்பவற்றில் இத்தகைய நேர்காணல்களைத் தரிசித்துள்ளோம். இன்று மின்னஞ்சல்கள் வாயிலாக நேர்காணல்கள் நிகழ்த்தப்பட்டு, மின்னிதழ்களில் வெளியிடப்படுவதையும் காண்கிறோம்.

பொதுவாக நேர்காணல்கள் நேரடியாகச் சந்தித்து உரையாடற் பாங்கில் பதியப்பட்டு வெளியிடப்படும் வடிவத்துக்கு ஏற்ப செப்பமிடப்படுவதே மரபாகும். நேர்காணலுக்காக செல்பவர், தான் சந்திக்கவுள்ள ஆளுமை குறித்த புரிதல் உள்ளவராக இருப்பது அவசியம். அவரது துறையில் பரிச்சயம் கொண்டவராகவும் இருத்தல் வேண்டும். அந்த வகையில், முன்கூட்டியே தயாரித்த கேள்விகளுடன் நேர்காணலை முகங்கொள்ள இயலும். அதேவேளை நேர்காணப்படும் ஆளுமை வெளிப்படுத்தும் தகவல் - கருத்து என்பன சார்ந்து இடையிட்ட கேள்விகளை சந்தர்ப்பத்துக்கு அமைவாக முன்வைக்கும் ஆற்றல் நேர்காண்பவரிடம் இருப்பது அவசியமாகும். இத்தகைய புதிய கேள்வியை முன்வைப்பது என்பது அவசியமற்ற குறுக்கீடாக அமையாதிருப்பதைக் கவனங்கொள்வது முக்கியமானதாகும்.

முன்வைக்கப்படும் கேள்விகள் தெளிவானவையாக இருப்பது அவசியம். வெளிப்படுத்த எதிர்பார்க்கும் விடயப்பரப்புக்கு அனுசரணையான வினாக்கள் முன்வைக்கப்படும். ஏற்ற சொல்லாட்சிகள் கையாளப்படுவதன் வாயிலாக தெளிவான புரிதலை உத்தரவாதப்படுத்த இயலும். விடயப் பரப்பு சார்ந்த கலைச்சொற்கள் வாசகரைக் குழப்பத்தில் ஆழ்த்த இடமற்ற வகையில் தெளிவாக்கப்படுதல் அவசியம். பரந்த வாசகர்கள் - பார்வையாளர்களைச் சென்றடையும் ஒரு வடிவமாக நேர்காணல் அமைவதால் மிக எளிய நடையைக் கையாள்வதற்கு முயற்சித்தல் விரும்பத்தக்கது.

நேர்காணலின்போது கடைப்பிடிக்க வேண்டிய விழுமியங்கள் கவனிப்புக்குரியன. குறித்த ஆளுமை தனது தரப்பு விடயங்களைப் போதிய திருப்தியுடன் வெளிப்படுத்த அவகாசம் வழங்க வேண்டும். மாற்றுக் கருத்தைத் தொடுக்கும்போதும் அதற்குரிய நாகரிகத்துடன் அது முன்வைக்கப்பட வேண்டும். அவர் உணர்ச்சி வசப்பட்டாராயின், இயல்பாக நிதானம் பெற இடமளிக்க வேண்டும். தன்னைக் காயப்படுத்துவதற்கானதாயன்றி, விடயத்தைத் தெளிவாக்குவதற்காக முன்வைக்கப்படும் கேள்விகள் இவை என்ற உணர்வை அவரிடம் தோற்ற வைக்க வேண்டும். எத்தகைய ஒளிவுமறைவுகளும் அற்ற தொடர்பாடல் என்பதனை உத்தரவாதப்படுத்தும் வகையில் அவரது கண்ணை நேராக நோக்கியபடி வினாக்களைத் தொடுப்பது அவசியம். அவர் சொல்பவற்றை அதேபோன்ற அக்கறையுடன் செவிமடுப்பதும் அவசியம்.

**பயிற்சி**

1. நேர்காணல் இடம்பெறும் ஊடகங்கள் எவை?
2. மின்னஞ்சல் நேர்காணல் எவ்வகையில் ஏனைய ஊடகங்களின் நேர்காணல்களில் இருந்து வேறுபடுகிறது?
3. நேர்காணலில் குறுக்கீடு என்பது பற்றி விளக்குக.
4. விவாதப் பாணியிலிருந்து நேர்காணல் வேறுபட்டிருக்க வேண்டிய அவசியம் பற்றி விளக்குக.
5. நேர்காணலில் பின்பற்ற வேண்டிய விழுமியங்களைப் பட்டியலிடுக.
6. நேர்காணல்கள் சிலவற்றைத் தெரிவுசெய்து அவற்றின் பண்புகள் குறித்து குழு விவாதங்கள் மேற்கொள்க.
7. குழுக்களாகச் செயற்பட்டு நீங்கள் தெரிவுசெய்துள்ள ஓர் ஆளுமையுடன் நேர்காணல் மேற்கொள்ள அவசியமான கேள்விகளைத் தயாரிக்குக. அந்த நேர்காணலை மேற்கொண்டு அதனை முழு வகுப்புடன் பகிர்ந்து நேர்காணல் குறித்துக் கலந்துரையாடுக.

## பழமொழிகள்

1. அன்னமிட்டவர் வீட்டில் கன்னமிடாதே
2. ஆற்றிலே பேட்டாலும் அளந்து போடு
3. ஆறின கஞ்சி பழங் கஞ்சி
4. இலையும் பழுப்பும் எங்குமுண்டு
5. இனம் இனத்தைச் சேரும்
6. ஈயார் தேட்டை தீயார் கொள்வர்
7. உண்ணாச் சொத்து மண்ணாய்ப் போம்
8. உப்பிட்டவரை உள்ளளவும் நினை
9. உலை வாயை மூடலாம். ஊர் வாயை மூடலாமா?
10. ஊரோடு ஒத்து வாழ்
11. எதார்த்தவாதி வெகுசன விரோதி
12. எருமை வாங்குமுன் நெய்விலை பேசாதே
13. எரிகிற வீட்டில் பிடுங்கினது லாபம்
14. எறம்பூரக் கற்குழியும்
15. கழுதை அறியுமா கற்பூர வாசனை

16. காவோலை விழக் குருத்தோலை சிரிக்குமாம்.
17. கெடுகுடி சொற்கேளாது.
18. தருமம் தலை காக்கும்
19. தன்னுயிர் போல மன்னுயிரையும் நினை
20. திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை
21. நல்ல மரத்துக்கு ஒரு புல்லுருவி
22. பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்
23. பானையில் உண்டானால் அகப்பையில் வரும்
24. புத்திமான் பலவான்
25. பேச்சுப் பல்லக்கு தம்பி கால்நடை
26. முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படலாமா?
27. வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு
28. சாண் பாம்பானாலும் முழம் கொண்டடி
29. குறைகுடம் தளம்பும் நிறைகுடம் தளம்பாது
30. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்

# 8 மலையகத்தின் மூத்த எழுத்தாளர் கே. கணேஷ்

தமிழ் இலக்கியத்துடன் ஓர் எழுபது வருடத் தொடர்பும், அனுபவமும், ஆற்றலும் மிக்கவரான திரு. கே. கணேஷ் அவர்களைப் பற்றி எழுதுவதில் இந்த வார இலக்கியக்களம் பெருமையும் பூரிப்பும் கொள்கிறது.

எழுபது வருட இலக்கியத் தொடர்பு என்பது எத்தனை பெரிய விஷயம்! இலக்கிய உலகுடனான அவருடைய அனுபவங்களைத் தெரிந்து கொள்வதே இளம் எழுத்தாளர்களுக்கு ஒரு இலக்கிய அனுபவமாகும். அவர் வாழ்ந்த காலத்திலேயே வாழ்ந்து, அவருடன் பேசவும், பழகவும் வாய்ப்புக் கொள்வதே ஒரு இலக்கியக் கொடை. மேதைகளுக்கேயுரிய அவரது தோற்றமும், எளிமையாகப் பழகும் இனிய பண்பும் அவருடன் பழகும் எவரையும் ஈர்த்துக் கொள்வது ஒன்றும் வியப்புக்குரியது அல்ல.



ஆயிரத்து தொளாயிரத்து இருபதில் கண்டி அம்பிட்டியாவில் பிறந்தவர். கண்டி புனித அந்தோனியார் கல்லூரியிலும் பிறகு தமிழ் நாட்டிலும் கல்வி பயின்றவர். இவரை ஒரு தமிழ்ப் பண்டிதராக்கும் நோக்கத்துடன் இளம் வயதிலேயே மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழ் படிக்க அனுப்பிவிட்டனர் பெற்றோர். திரு. வி.க. விடம் தமிழ் படிக்கச் சென்ற இவருக்கு பண்டிதராவதை விடவும், தமிழ் இலக்கியத்தில் கருத்துப் புரட்சியைக் காண விரும்பிய ப. ஜீவானந்தம், மாயாண்டி பாரதி போன்ற இடதுசாரி எழுத்தாளர்களுடன் தோழமை கொள்வதே மிகவும் பிடித்திருந்தது.

*சக்திதாசன் சுப்பிரமணியம், கே. ராமநாதன், மாயாண்டி பாரதி ஆகியோர் சேர்ந்து சென்னையில் இருந்து வெளியிட்ட 'லோகசக்தி' என்னும் முற்போக்கு இதழின் வெளியீட்டில் இவரும் பங்கு பற்றினார். முதல் இதழிலேயே இவருடைய முதல் படைப்பும் வெளிவந்தது. அப்போது இவருக்கு வயது பன்னிரண்டு.*

*முல்க்ராஜ் ஆனந்த், பிரேம் சந்த், கே.ஏ. அப்பாஸ், வெங்கடாச்சாரி, தமிழ் ஒளி, குயிலன், புதுமைப்பித்தன், தி.க.சி. என்று நாம் பெயரளவில் அறிந்து வைத்துள்ள இலக்கியக்காரர்களுடன் அவர் நண்பராயிருந்து பழகிய அனுபவங்களை அவர் வாயிலாகக் கேட்கையில் பிரமித்துப் போகிறோம். அவர்கள் எழுதிய சில கடிதங்களைக் காட்டுகிறார். நாம் பூரித்துப் போகிறோம்.*

*பன்னிரண்டு வயதில் எழுதத் தொடங்கி, பதினாறு வயதில் இளைஞர் காங்கிரஸ் என்னும் அமைப்பை உருவாக்கி, பத்திரிகை வெளியிட்டு, எழுத்தாளர்களுடன் பழகி இலக்கியத்தைத் தன் இரத்தத்தில் ஏற்றிக் கொண்டவர் இந்த முதுபெரும் இலக்கியவாதி. அந்த இரத்த உறவும் இலக்கிய உணர்வுமே இந்த எழுபத்தேழு வயதிலும் இவரை இயங்க வைத்துக் கொண்டிருக்கிறது. 1936ல் இவர் தனது எழுத்துலக நண்பர்களுடன் இணைந்து வெளியிட்ட லோகசக்தியே முற்போக்குக் கருத்துக்களை வெளிக்கொண்டு வந்த முதல் பத்திரிகையாகும். இவ்வாறான அனுபவங்களே முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தை ஸ்தாபித்து முற்போக்கு எழுத்தாளர்களை ஒன்றிணைக்கும் ஓர் எண்ணத்தை இவருக்கு தந்துள்ளது. கே.ஏ. அப்பாஸ், வெங்கடாச்சாரி, குயிலன், தமிழ் ஒளி, தி.க. சிவசங்கரன் ஆகிய முற்போக்கு சிந்தனையாளர்களை ஒன்றிணைத்து முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தை தமிழகத்தில் ஸ்தாபித்தார்.*

*இலங்கை திரும்பியதும் இவரால் சும்மா இருக்க முடிந்திருக்குமா ? படிக்கச் சென்ற ஊரிலேயே அத்தனை செயலாற்றியவர் சொந்த ஊரில் சும்மாவா இருப்பார்! அகில இலங்கை எழுத்தாளர் சங்கம் என்று ஓர் அமைப்பை அவர் முன்னிலையில் நின்று செயற்பட்டு உருவாக்கினார். இலங்கையின் சகல எழுத்தாளர்களையும் ஒன்றிணைக்க வேண்டும் என்னும் அவரது ஆவல் போற்றுதற்குரியது. இந்த அகில இலங்கை எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக சுவாமி விபுலானந்தரும், உபதலைவராக மார்ட்டின் விக்கிரமசிங்காவும் இருந்தார்கள். கணேஷும், கலாநிதி சரத்சந்திரவும் இணைச் செயலாளர்களாக இருந்து பணியாற்றினார்கள். ஈழத்தின் சகல எழுத்தாளர்கள் மட்டுமன்றி இந்தியா மற்றும் உலக எழுத்தாளர்கள் பலருடன் தொடர்புள்ளவர் இவர். ஆகவே ஆங்கில, தமிழ் இதழ்கள் அவரைத் தேடி தலாத்துஓயாவுக்கு வந்த வண்ணமாயிருக்குமாம்.*

*தமிழ் இலக்கியத்தில் வரலாறு படைத்த மணிக்கொடி, கிராம ஊழியன், ரகுநாதனின் சாந்தி, விஜயபாஸ்கரனின் சரஸ்வதி, வரதரின் மறுமலர்ச்சி என்று நாம் கண்டேயிராத இதழ்கள் சிலவற்றை ஒவ்வொன்றாகக் காட்டுகிறார். சில்லிட்டுப் போகிறோம்.*

1946ல் இவரும் கே. ராமநாதனும் சேர்ந்து நடத்திய 'பாரதி' நினைவுக்கு வருகிறது. பாஸிஸ எதிர்ப்பு பிரசாரத்தை முன் வைத்து வந்து கொண்டிருந்த 'பெங்குவின் ' வெளியீடான 'நியூரயிட்டிங்ஸ் ' என்னும் ஆங்கில இதழைக் காட்டுகின்றார். இத்தாலிய எழுத்தாளர் இக்னேஷியஸ் சிலோனி, பஞ்சாபி முல்க் ராஜ் ஆனந்த் ஆகியோரின் படைப்புகள் 'நியூரைட்டிங்ஸ்' இல் வந்திருந்தன.

இப்படி ஓர் இதழை ஏன் நாமும் வெளியிடக்கூடாது என்ற எண்ணமே 'பாரதி' யின் தோற்றத்திற்கு வித்தாயிற்று. 1946 ஜனவரியில் 'பாரதி' முதல் இதழ் வெளிவந்தது. ஈழத்தின் முற்போக்கு இலக்கிய இயக்கத்துக்கு வித்திட்ட ஏடாகத் திகழ்ந்தது இந்த 'பாரதி'. 1948 ஜனவரியில் மார்க்ஸிம் கோர்க்கியின் அட்டைப் படத்துடன் வந்த ஏழாவது இதழுடன் 'பாரதி'யின் இலக்கியப் பயணம் முடிவு பெற்றுள்ளது. நியூரைட்டிங்ஸும் ஏழு இதழ்களே வந்ததாக தெரிவிக்கிறார்.

கணேஷ் ஒரு கவிஞர். தன் சொந்தப் பெயரிலும் கலாநேசன் என்னும் பெயரிலும் நிறையக் கவிதைகள் எழுதியுள்ளார். உலகக் கவிதைப் போட்டியில் பங்குபற்றி ஜப்பான் சக்கரவர்த்தி ஹிரோ ஹிட்டோவிடம் விருது பெற்ற கவிஞர் இவர். பரிசு பெற இவர் ஜப்பான் சென்ற செய்தியைப் படத்துடன் முதல் பக்கத்தில் வெளியிட்ட 'டெய்லி நியூஸ்' உள்ளே ஒரு பக்கக் கட்டுரையும் எழுதியிருந்தது அன்று.

இவர் ஒரு சிறுகதையாசிரியரும் கூட. மணிக்கொடியில் கூட ஒரு சிறுகதை எழுதியுள்ளார். ஆசாபாசம் என்னும் பெயரில், சத்திய போதிமரம், பால்காரப் பழனி, சட்டமும் சந்தர்ப்பமும் ஆகிய சிறுகதைகளை வீரகேசரியிலும் ஆகஸ்ட் தியாகி ஆறுமுகம் என்னும் கதையை தேசாபிமானியிலும் எழுதியுள்ளார்.

இந்தியாவில் உருவாக்கிய முற்போக்கு எழுத்தாளர் சங்கம் போல இலங்கையிலும் முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தை 1946ல் தோற்றுவித்த பெருமை இவருக்குண்டு. வீரகேசரியில் 40களிலும் சுதந்திரனில் 50களிலும் பணியாற்றி இருக்கின்றார். இவருடைய இலக்கியப் பணிகளிலெல்லாம் முக்கிய பணியாக நிற்பது இவருடைய மொழி பெயர்ப்புப் பணிகள்.

முல்க்ராஜ் ஆனந்தின் 'அன்டச்சபிள்ஸ்' நாவலை 'தீண்டாதான்' என்று 1947ல் தமிழில் மொழி பெயர்த்தார். 1956ல் கே. ஏ. அப்பாஸின் சிறுகதைகளை 'குங்குமப்பூ' என்னும் பெயரில் மொழிபெயர்த்து வெளியிட்டார். மறுபடியும் அப்பாஸின் 'அஜந்தா ' என்னும் நூலை மொழி பெயர்த்தார். குயிலன் பதிப்பகம் 1964ல் இதை வெளியிட்டது. ஹோசிமின் சிறைக் குறிப்புகள், அஸர்பைஜானிய எழுத்தாளர் அல்தாய் முஹம்மத்தோவின் த ஸோங் (அந்த கானம்) சீன இலக்கிய மேதை 'லூசுன்' சிறுகதைகள், பல்கேரிய, ஹங்கேரிய, வியட்நாமிய, உக்ரேனிய, ரஷ்ய கவிதைகள், சீனக் குறுநாவல்கள் என்று இருபதுக்கும் மேற்பட்ட மொழிபெயர்ப்பு நூல்களை அளித்திருக்கின்றார். என்.சி.பி.எச்., சென்னை புக்ஸ், தேசிய கலை இலக்கியப்

பேரவையுடன் இணைந்து சவுத் ஏசியன் புக்ஸ் ஆகிய வெளியீட்டு நிறுவனங்கள் கே. கணேஷின் பெரும்பன்மையான மொழி பெயர்ப்பு நூல்களை வெளியிட்டு இலக்கியப் பணியாற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

ஓர் எழுபதாண்டு கால இலக்கிய அனுபவங்களைத் தன்னுள் ஆழ்த்திக் கொண்டிருக்கும் இவரின் எழுத்துலக அனுபவங்கள் வெளிக் கொண்டுவரப்படல் வேண்டும் என்பது என்னுடைய நீண்ட நாள் ஆசை. ஆரவாரங்களுள் அகப்படாமல் அமைதியாக இருக்கும் அவரே அதைச் செய்ய வேண்டும். இல்லையெனில் நாம் யாராவது அதைச் செய்ய வேண்டும். எண்பது வயதை அண்மித்துக் கொண்டிருக்கும் திரு. கே. கணேஷின் எழுபதாண்டு இலக்கிய அனுபவங்கள் முழுமையாக எழுதப்படாவிட்டால் அது நமக்கெல்லாம் ஒரு இலக்கிய இழப்பேயாகும்.

**தெளிவத்தை ஜோசப்.**

**பயிற்சி**

1. இலங்கையின் முற்போக்கு இலக்கிய இயக்கத்தின் முன்னோடியாக கே. கணேஷ் கருதப்படுவதற்கான காரணம் யாது?
2. கணேஷிடம் இலக்கிய நாட்டம் மேலோங்குவதற்குக் காரணியாக அமைந்த சூழலை விளக்குக.
3. ‘பாரதி ’ எனும் சஞ்சிகை தோற்றம் பெற்ற பின்னணியைக் குறிப்பிட்டு அதற்கு முன்னோடியாக அமைந்த இதழுடன் பாரதி கொண்டுள்ள ஒற்றுமை பற்றி விளக்குக.
4. கே. கணேஷ் மொழிபெயர்த்த படைப்புக்கள் பற்றிக் கூறுக.
5. இலங்கையில் இலக்கியப் பணியாற்றிய ஆளுமைகள் குறித்து தேடல் மேற்கொள்ளப்பட்டு ஒவ்வொருவர் பற்றியதுமான நூல்கள் வெளிவர வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி மாணவர் மன்றத்தில் நிகழ்த்தும் உரையொன்றுக்கான கட்டுரை வரைக.

## அறிவித்தல்

வெகுசனத் தொடர்புச் சாதனங்களின் பணிகளில் மிக முக்கியமானது அறிவித்தல் பணியாகும். செய்திகளை அறிவித்தல், எண்ணங்களை வெளியிடல், மகிழ்ச்சி தரும் தகவல்களைத் தருதல் போன்றன இவ்வறிவித்தல் மூலமாக வெளிப்படுகின்றன. இவ்வறிவித்தல் பணியைச் செய்பவர் அறிவிப்பாளர் ஆவார். ஓர் அறிவிப்பாளர் ஒரு தொடர்பியலாளரே. தொடர்பாடல் என்பது ஆங்கிலத்தில் Communication எனப்படும். இச்சொல் கொம்யூனிகியர் (Communicare) என்னும் இலத்தீன் மொழியில் இருந்து வந்த பதமாகும். கொம்யூனிகியர் என்பது பொதுமைப்படுத்தல், பகிர்ந்துகொள்ளல், வெளிப்படுத்துதல், அலைவழித் தொடர்பு எனப் பொருள்படும்.

தொடர்பாடல் என்பது வெறும் பேச்சை, கலந்துரையாடலை, சிலவற்றைக் கேட்டலை, உரையாடுவதை, வெறும் கருத்துக்களை, உணர்வுகளைக் கருதாது- ஒன்றுபடுத்தல். அதாவது கருத்துக்களை அல்லது உணர்வுகளைப் பகிர்ந்து ஒன்றுபடுதல் - ஓர் ஐக்கியத்தை ஏற்படுத்தல் என்பதையே குறிக்கின்றது.

### ஓர் அறிவிப்பாளர் அறிந்திருக்க வேண்டிய விடயங்கள்

- ★ தனது அறிவித்தல் விடயத்தில் தேர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும்.
- ★ சிறந்த குரல்வளம் பெற்றிருத்தல் வேண்டும்.
- ★ அறிவித்தல் தரும் மொழியில் நல்ல புலமைத்துவம் பெற்றிருக்க வேண்டும்.
- ★ அறிவித்தல் நுட்பங்களை அறிந்திருத்தல் வேண்டும்.
- ★ நேயர்களை, வாசகர்களை, இரசிகர்களை, குறித்த நிகழ்ச்சியைக் கேட்போரைப் பற்றிய விளக்கமுடையவராக இருத்தல் வேண்டும்.
- ★ பொறுப்பு வாய்ந்தவராக இருத்தல் வேண்டும்.
- ★ நேர முகாமைத்துவத்தைப் பேணி நடப்பவராக இருத்தல் வேண்டும்.
- ★ பல்துறைசார்ந்த அறிவு பெற்றவராக இருத்தல் வேண்டும்.
- ★ கேட்போரைக் கவரக் கூடிய முன்வைப்பாளராக இருத்தல் வேண்டும்.

### அறிவித்தல் வகைகள்

- ★ நிகழ்ச்சி அறிவித்தல்
- ★ செய்தி அறிவித்தல்
- ★ விளம்பர அறிவித்தல்
- ★ நேர்முக வர்ணனை அறிவித்தல்
- ★ மரண அறிவித்தல்
- ★ நேர்காணல் தொடர்பான அறிவித்தல்
- ★ தகவல்களை அறிவித்தல்
- ★ விசேட அறிவித்தல்
- ★ அரசாங்க அறிவித்தல்

### அறிவித்தலை வழங்கும் அறிவிப்பாளரிடம் காணப்பட வேண்டிய திறமைகள்

- ★ நடிப்பாற்றல் மிக்கவராக இருத்தல்.
- ★ கிளர்ச்சியூட்டும் பேச்சாளராக இருத்தல்.
- ★ இசை வல்லுனராக அல்லது இசைப் பிரியராக இருத்தல்.
- ★ பரந்த அறிவுள்ளவராக - பல்துறைப்பட்ட அறிவு உள்ளவராக இருத்தல்.
- ★ கூர்மதியுள்ள, சாதுரியமிக்க, சமயோசிதமான பேச்சாற்றல் உள்ளவராக இருத்தல்.
- ★ பண்பான, கனிவான, மதிப்பு வாய்ந்தவராக இருத்தல்.
- ★ புறத்தூண்டல் இல்லாமல் தானாகவே இயங்கும் தன்மை கொண்டவராக இருத்தல்.
- ★ நேர முகாமைத்துவத்தைப் பயன்படுத்திப் பேணக் கூடியவராக இருத்தல்.
- ★ நடப்பு விவகாரங்களை, நாளாந்த புதினங்களை அறிந்தவராக இருத்தல்.
- ★ விரைவாக ஊகித்து அறியக்கூடிய தகைமை கொண்டவராக இருத்தல்.
- ★ பக்கச் சார்பற்றவராக இருத்தல்.

## நிகழ்ச்சி அறிவித்தல்

குரல் *1* - அனைவருக்கும் வணக்கம். நேரம் முற்பகல் ஒன்பது மணி முப்பது நிமிடங்கள். தெனியாய பாரதி தமிழ் வித்தியாலயத்தில் அண்மையில் இடம்பெற்ற முத்தமிழ் விழா நிகழ்வுகளின் தொகுப்பு நிகழ்ச்சி பற்றிய தகவல்களை இப்போது நீங்கள் கேட்கலாம். நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்குபவர் எஸ். கருணாகரன்.

குரல் *2* - தெனியாய, பாரதி தமிழ் வித்தியாலயத்தின் முத்தமிழ் விழா கடந்த மார்ச் மாதம் பதினைந்தாம் திகதி சனிக்கிழமை பிற்பகல் இரண்டு முப்பது மணியளவில் வித்தியாலய மண்டபத்தில் வெகு விமரிசையாக இடம்பெற்றது. வித்தியாலய அதிபர் திரு. கா. நடேசன் அவர்களின் தலைமையில் இடம்பெற்ற இந்நிகழ்வில் பிரதம விருந்தினராக மாகாணக் கல்விச் செயலாளர் திரு. வி. கதிரேசன் அவர்கள் கலந்து சிறப்பித்தார். அத்துடன் இந்நிகழ்வில் அறிஞர்கள், பொதுமக்கள் பலரும் கலந்துகொண்டனர்.

குரல் *3* - பிரதம விருந்தினர்தனது உரையில் ''இன்று எமது கலையகத்தில் நடைபெறும் முத்தமிழ் விழாவுக்கு எமது அழைப்பை ஏற்று வருகை தந்திருக்கும் அனைவரையும் பெருமனதோடு வருக வருகவென வரவேற்கிறேன். எமது பாடசாலை வரலாற்றில் இந்நிகழ்வு பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய ஓர் அம்சமாகும். இதற்கு ஒத்துழைப்பு வழங்கிய அனைவரையும் நான் பெரு மனதோடு பாராட்டுகிறேன்'' எனக் குறிப்பிட்டார்.

குரல் *2* - பாடசாலை அதிபரின் உரையைத் தொடர்ந்து மாணவர்களின் இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள் மேடையேறின. சபையோரின் மனதைக் கவர்ந்த இந்நிகழ்ச்சிகள் இடம்பெற்றதைத் தொடர்ந்து பிரதம அதிதியின் உரை இடம்பெற்றது. அவர் தனது உரையில்

குரல் *4* - ''அனைவருக்கும் தமிழ்த் தாயின் இனிய வந்தனங்கள். பாரதி தமிழ் வித்தியாலயம் இப்பகுதி மக்களின் இரண்டு கண்களைப் போன்று பாதுகாக்க வேண்டிய ஒரு கலையகமாகும். இப்பாடசாலையின் வளர்ச்சி உங்கள் கைகளிலேயே தங்கியுள்ளது'' எனக் குறிப்பிட்டார்.

குரல் *2* - தொடர்ந்து போட்டிகளில் வெற்றியீட்டிய மாணவர்களுக்கு வெற்றிச் சான்றிதழ்களும் அன்பளிப்புகளும் வழங்கப்பட்டன. அதனைத் தொடர்ந்து விழா நிகழ்வுகள் செயலாளரின் நன்றியுரையோடு நிறைவடைந்தன.

குரல் *1* - இதுவரை தெனியாய பாரதி தமிழ் வித்தியாலயத்தில் அண்மையில் இடம்பெற்ற முத்தமிழ் விழா நிகழ்வுகளின் தொகுப்பு நிகழ்ச்சியினைக் கேட்டீர்கள். நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கியவர் எஸ். கருணாகரன்.

**பயிற்சி**

பின்வரும் தகவல்களை அடிப்படையாகக் கொண்டு செய்தி அறிவித்தல் ஒன்றைத் தயாரிக்குக:

★ செய்தி அறிவிக்கும் நிறுவனத்தின் பெயர்
★ செய்தி ஆசிரியர்
★ செய்திகள் வாசிப்பவர்
★ முதலில் தலைப்புச் செய்திகள்
  - உள்நாட்டுச் செய்திகள்
  - வெளிநாட்டுச் செய்திகள்
  - விளையாட்டுச் செய்திகள்
  - வானிலை அறிக்கை
★ விரிவான செய்திகள்
★ உள்நாட்டுச் செய்திகள்
  - வெளிநாட்டுச் செய்திகள்
  - விளையாட்டுச் செய்திகள்
  - வானிலை அறிக்கை
★ மீண்டும் தலைப்புச் செய்திகள்
★ செய்திகள் நிறைவு
★ வணக்கம்

அறிவித்தல் பற்றிய பின்வரும் தகவல்களை வானொலி அல்லது தொலைக்காட்சி மூலமாகப் பெற்று எழுதுவதற்கு மாணவர்களை வழிப்படுத்துக.

★ அவுஸ்திரேலிய அரசாங்கம் விடுத்துள்ள அறிவித்தல்
★ மின்சார சபை அறிவித்தல்
★ நிகழ்ச்சி முன்னோட்டம் பற்றிய அறிவித்தல்
★ வானிலை பற்றிய அறிவித்தல்
★ மரண அறிவித்தல்
★ கல்வி ஒலிபரப்பு பற்றிய அறிவித்தல்
★ பொருட்களின் விலை குறைப்பு பற்றிய அரசாங்க அறிவித்தல்
★ பாடசாலை விடுமுறை பற்றிய அறிவித்தல்

# அறிவுறுத்தல்

மாணவப் பருவம் அறிவுறுத்தல்களைப் பின்பற்றி அதற்கேற்ப ஒழுக வேண்டிய ஒரு பருவமாகும். வீட்டில் பெற்றோரின் அறிவுறுத்தல்களை ஏற்று நடக்க வேண்டும். பாடசாலையில் அதிபரின், ஆசிரியர்களின் அறிவுறுத்தல்களை ஏற்று ஒழுக வேண்டும். சமூகத்தில் தலைமைத்துவத்தின் அறிவுறுத்தல்களை ஏற்றுக்கொள்ள வேண்டும். மக்கள் அனைவரும் அரசாங்கத்தின் அறிவுறுத்தல்களுக்கு கட்டுப்பட வேண்டும்.

சமூகத்தில் ஒருவர் அறிவுறுத்தல்களுக்கேற்ப நடந்துகொள்ளும்போது பின்வரும் சிறப்புகள் ஏற்படும்.

★ தலைமைத்துவத்தைப் பேணி நடக்கும் இயல்பு.
★ ஒருமைப்பாடு.
★ சட்டத்தை மதித்து நடக்கும் பண்பு.
★ ஒழுக்க விழுமியங்கள் உருவாகுதல்.
★ வாழ்க்கையில் கட்டுப்பாடு நிலவும்.
★ வழிகாட்டல், ஆலோசனைகள் தெளிவாகும்.
★ தவறான வழியில் செல்வது தவிர்க்கப்படும்.
★ செயற்பாடுகள் இலகுவாக நிறைவேறும்.
★ ஒருவரை ஒருவர் மதிக்கும் பண்பு வளரும்.
★ வாழ்க்கையில் நிதானமான நடத்தைகள் உருவாகும்.

ஒருவர் முதற்கட்டமாகச் சந்திக்கும் மாணவப் பருவத்திலே அறிவுறுத்தல்களுக்குக் கட்டுப்பட்டவராகிறார். மாணவப் பருவத்தில் பெற்றோர்களால் விடுக்கப்படும் அறிவுறுத்தல்கள், ஆசிரியர்களால் - அதிபரால் விடுக்கப்படும் அறிவுறுத்தல்கள் எனப் பல அறிவுறுத்தல்களை எடுத்துக் காட்டலாம்.

**செயற்பாடு**

அறிவுறுத்தல்களைத் தொகுத்து கையேடு ஒன்றைத் தயாரிக்குக.

# அபிப்பிராயம் எழுதுதல்

அச்சு ஊடகங்கள், காட்சியூடகங்கள் என்பன பல்கிப் பெருகியுள்ள இன்றைய உலகில் படைப்பாளிகளுக்கு இருந்த வரையறைகள் தகர்ந்து, பலரும் தமது எண்ணங்களை வெளியிடும் வாய்ப்புகள் பெருகியுள்ளன. இவற்றில் எவை பார்க்கவும் படிக்கவும் தக்கன என்பதை அறிவது என்பது சிரமமான ஒன்றாகும். தக்கார், பெரியார் எனப்படுகின்றவர்கள் முன்வைக்கும் அபிப்பிராயக் கருத்துகளின் அடிப்படையில் அவற்றை அணுகுவது ஆரம்ப வாசக மட்டத்துக்கு ஏற்புடையதாகும்.

அரை நூற்றாண்டின் முன்னர் தமிழகத்தில் டி.கே. சிதம்பரனார், க.நா.சுப்பிரமணியம் போன்றோர் இத்தகைய அபிப்பிராயம் எழுதுதலில் முன்னிலை வகித்தனர். டி.கே.சி. கம்பராமாயணத்தை ரசித்து, அதன் சுவையைப் பரப்புரை செய்தவர்; அவ்வாறே ஏனைய பழந்தமிழ் இலக்கியங்களிலும் நவீன படைப்புகளிலும் தனது ரசனைக்கு உகந்தவற்றைப் பாராட்டியவர். க.நா.சு. உலக இலக்கியங்களிலும், இந்திய மற்றும் தமிழ்ப் படைப்புகளிலும் ரசனைக்குரியவற்றை இனங்கண்டு பரந்த வாசகத்தளங்களுக்கு அறிமுகப்படுத்தியவர். ‘இரசிகமணி’ என டி.கே. சி. போற்றப்பட்டதைப் போல இலங்கையில் இரசிகமணி கனக செந்திநாதன் மதிக்கப்பட்டுள்ளார். இவரிடம் க.நா.சு. போல உலக இலக்கியங்களையும் நவீன படைப்புகளையும் ஏற்றிப்போற்றும் பண்பும் காணப்பட்டுள்ளது. இலங்கையின் எழுத்தாளர்கள் பலரும் கனக செந்திநாதனின் ரசனை மதிப்பீட்டுக்காக தமது ஆக்கங்களை கையளிப்பது வழக்காறாக இருந்துள்ளது.

அபிப்பிராயம் எழுதப்படுகையில் பெரும்பாலும் காரண காரிய விளக்கங்கள் முன்வைக்கப்படுவதில்லை. தாம் வந்தடைந்த சமூக - இலக்கிய அந்தஸ்த்தின் தரநிலையில் தாம் வெளிப்படுத்தும் அபிப்பிராயமே அளவுகோலாக அமையவியலும் என்பது அவர்களது துணிபு. அந்த நிலைப்பாட்டில் அவர்கள் நேர்மையாகத் தமது கருத்துக்களை முன்வைத்து வந்துள்ளனர். தமது உணர்வுநிலை ஏதும் குறுகிய நலன்களுக்கு விலை போனவையல்ல என வாழ்ந்துகாட்டிய பண்புக்கூறை முன்வைத்து துணிவுடன் அபிப்பிராயம் எழுதியுள்ளனர். அதன் காரணமாக அவர்களது அபிப்பிராயங்களை மதிப்பவர்கள் பலர் இருந்துள்ளனர். அந்த வகையில், அபிப்பிராயம் எழுதுபவர் உண்மைத் தன்மையுடன் தனது கருத்தை முன்வைக்க வேண்டும். நடுநிலை பேணும் பண்பு கைவரப் பெற்றிருப்பது விரும்பத்தக்கது. தனது விருப்புக்குரியவர் எனப் பார்க்காது ஆக்கம் உண்மையில் இரசனை உணர்வை ஏற்படுத்தியிருப்பின் மட்டுமே அதுகுறித்து எழுத முன்வர வேண்டும்.

எவ்வளவுதான் நேர்மையுடன் அபிப்பிராயத்தை முன்வைத்த போதிலும், இது ஒரு தனிமனித உணர்நிலை சார்ந்தது என்ற வரையறைக்கு உட்பட்டதாகும். அதாவது, ஒருவரது தனிப்பட்ட ரசனை சார்ந்த அகநிலை வாதத் தவறுக்கான பண்பினை இது வெளிப்படுத்துகின்றது. காரண காரிய விளங்கங்களுடன் மதிப்புரை என்ற தளத்துக்கு வளர்க்கப்படும் எழுத்துமுறை தனிமனித எல்லைப்பாடுகளைக் கடக்க உதவும். இது

சமூகவியல், மானிடவியல், உளவியல், தத்துவநோக்கு போன்ற பல்துறை வளங்களை உள்வாங்கும்போது விமர்சனம் என்ற வடிவத்தைப் பெறும்.அத்தகைய விமர்சனம் மட்டுமே ஒரு இலக்கியத்தைச் சுய அபிப்பிராயங்களுக்கு அப்பால் புறநிலை ரீதியாக வைத்து மதிப்பிடும் விஞ்ஞானபூர்வ நடைமுறையாக அமையும். அந்தவகையில் அபிப்பிராயம் எழுதுவதை விடவும் விமர்சனம் எழுதுவது விரும்பத்தக்கதாகும்.

**பயிற்சி**

1. அபிப்பிராயம் எழுதுதல் என்பது யாது என்பதையும், அது ஏன் அவசியமாகிறது என்பதையும் விளக்குக.
2. அபிப்பிராயம் எழுதுவோராக நீங்கள் அறிந்தவர்கள் பற்றி எழுதுக.
3. அபிப்பிராயம் எழுதுவதில் கடைப்பிடிக்க வேண்டிய அம்சங்கள் யாவை?
4. அபிப்பிராயம் எழுதுதலின் போதாமை பற்றி விளக்குக.
5. உங்களுக்குப் பிடித்த ஓர் ஆக்கம் பற்றி அபிப்பிராயம் எழுதுக.

## தொகைச் சொற்கள்

ஒரே இனமான பொருள்களைத் தொகுத்து, தொகுக்கப்பட்ட எண்ணிக்கையையும் பொருளின் பெயரையும் கூற அதனாலே குறிப்பிட்ட பெயர்களே கருதப்பட்டு வருவதுண்டு. அவ்விதப் பெயர்களே தொகைப் பெயர்கள் எனப்படும்.

| | |
|---|---|
| இரு சுடர் | - சூரியன், சந்திரன் |
| இருநிதி | - சங்கநிதி, பதுமநிதி |
| இருமை | - இம்மை, மறுமை |
| முத்தமிழ் | - இயல், இசை, நாடகம் |
| முத்தொழில் | - படைத்தல், காத்தல், அழித்தல் |
| நானிலம் | - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் |
| நாற்படை | - தேர், யானை, குதிரை, காலால் |
| நாற்பொருள் | - அறம், பொருள், இன்பம், வீடு |
| ஐம்பொறி | - மெய், வாய், கண், மூக்கு, செவி |
| ஐம்புலன் | - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் |
| ஐம்பூதம் | - நிலம், நீர், தீ, வளி, விண் |
| பஞ்சமா பாதகம் | - கொலை, களவு, கள், சூது, காமம் |
| அறுசுவை | - தித்திப்பு, புளிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு |
| ஏழு பருவம் | - பேதை, பெதும்பை, அரிவை, தெரிவை, மங்கை, மடந்தை, பேரிளம் பெண் |
| நவமணி | - கோமேதகம், நீலம், பவளம், புஸ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைரம், வைடூரியம் |

# 9 காட்சிக் கூண்டு

**எஸ். இராமகிருஷ்ணன்**

தமிழ்நாட்டின் விருதுநகர் மாவட்டத்தில் மல்லாங்கிணார் என்ற கிராமத்தில் பிறந்தவர். கணையாழியில் வெளியாகிய 'பழைய தண்டவாளம்' இவரது முதல் கதையாகும். இவரது படைப்புக்கள் ஆங்கிலம், ஜேர்மன், பிரெஞ்சு, கன்னடம், வங்காளம், மலையாளம் முதலான மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இலக்கியம், சினிமா, பத்திரிகை, இணையம், ஆய்வு, பயணம் முதலான துறைகளில் எழுதி வருகிறார். புனைவு மொழியை இலாவகமாகவும் வசீகரத்துடனும் கையாள்பவர்களில் ஒருவர்.

மாநகராட்சியின் பொதுப்பூங்காவில் அப்படியொரு கூண்டினை உருவாக்க வேண்டும் என்றொரு யோசனையை யார் முன்மொழிந்தது என்று தெரியவில்லை. ஆறுமாதங்களாகவே நகரின் முக்கிய பூங்காக்கள் யாவும் மறுசீரமைப்பு செய்யப்பட்டு வந்தன. செயற்கை நீருற்றுகள், சிறார்களுக்காக சறுக்கு விளையாட்டுகள், அலங்கார விளக்குள், ஆள் உயர காற்றடைக்கப்பட்ட பொம்மைகள், நாளிதழ்கள் வாசிப்பதற்காக வாசிகசாலை என்று பூங்காக்களின் தோற்றம் பொலிவு கண்டிருந்தது.

ஆனால் நகரின் வேறு எந்த பூங்காவிலும் இல்லாத தனிச்சிறப்பாக இரட்டை சாலைச் சந்திப்பின் அருகிலிருந்த ஔவை பூங்காவில் இரும்புக் கூண்டு ஒன்றை உருவாக்கியிருந்தார்கள். ஆறடிக்கு பத்தடி அளவில் உருவாக்கப்பட்ட அந்த இரும்புக் கூண்டு சர்க்கஸில் சிங்கம் அடைத்து வைக்கப்பட்ட கூண்டினை விடவும் சற்றே பெரியதாக இருந்தது.

மின்சாரத்தால் இயங்கும் அந்தக் கூண்டில் விரும்புகின்ற யார் வேண்டுமானாலும் உள்ளே சென்று உட்கார்ந்து கொண்டு, நின்று கொண்டு இருக்கலாம். கூண்டினில் ஆட்கள் சென்ற மறுநிமிசம் தானாக கதவு மூடிக் கொள்ளும்படியாக மின்சாரத்தால் உருவாக்கபட்டிருந்தது. சரியாக ஐந்து நிமிசங்கள் கூண்டு மூடியிருக்கும். பிறகு கதவு தானே திறந்து கொண்டுவிடும்.

கூண்டில் ஆட்கள் ஏறி மூடிக் கொண்ட மறுநிமிசம் அதிலிருந்து மியமிங்மியமிங் என்று விசித்திரமானதொரு சப்தமிடும். அது பார்வையாளர்களை தன் பக்கம் இழுக்கக் கூடியதாகவிருந்தது. மற்ற நேரங்களில் கூண்டில் எந்த சலனமும் இருக்காது.

கூண்டினை பூங்காவில் பொருத்தப்பட்ட மூன்று தினங்களுக்கு அதில் எவரும்

நுழையவேயில்லை. இவ்வளவிற்கும் கூண்டின் அருகாமையில் பெரியதாக விளம்பர பலகை வைக்கப்பட்டிருந்தது. முதன்முறையாக அந்தக் கூண்டில் நடைபயிற்சிக்காக தினமும் பூங்காவிற்கு வரும் ஓய்வுபெற்ற வங்கி அதிகாரி ஒருவர் உள்ளே நுழைந்தார். அவருக்கு கூண்டை பார்க்கும் போது அவரது அலுவலக அறை போன்று நினைவிற்கு வந்திருக்கக்கூடும்.

அவர் தரையில் இருந்து சற்று உயரமாக வைக்கப்பட்ட கூண்டிற்குள் போவதற்காக இரண்டு படிகள் ஏறி கூண்டின் கதவை திறந்து உள்ளே போன போது கதவு தானாக மூடிக் கொண்டது. மறுநிமிசம் மியமிங்மியமிங் என்ற சப்தம் உரத்து கேட்கத்துவங்கியது. நடைப் பயிற்சியில் இருந்தவர்கள், பூங்காவில் விளையாடிய சிறுவர்கள் திரும்பி வேடிக்கைப் பார்க்க ஆரம்பித்தார்கள். வங்கி அதிகாரி கூண்டிற்குள் இருந்தபடியே வெளியே பார்க்க ஆரம்பித்தார். அப்படி அவர் ஒரு நாளும் அந்தப் பூங்காவைக் கண்டதேயில்லை.

கூண்டிற்குள் இருப்பது ரொம்பவும் பாதுகாப்பாகவும் இயல்பாகவும் இருந்தது. அவர் கூண்டின் வலுவான இரும்புக் கம்பிகளைப் பிடித்தபடியே நின்று கொண்டிருந்தார். அவருக்கு தெரிந்த சிலர் நடைபயிற்சியின் ஊடாகவே அவரைப் பார்த்து சிரித்தபடியே போனார்கள். அவருக்கும் அவர்களைப் பார்த்து சிரிக்க வேண்டும் போலிருந்தது. கம்பியில் முகம்பதித்துக் கொண்டு அவர் வெளியே பார்த்து சிரித்தார். சிறார்கள் கூண்டின் அருகில் வந்து நின்றபடியே அவரைப் பார்த்து பரிகாசம் செய்தார்கள்.

வங்கி அதிகாரி கூண்டிற்குள்ளாகவே அங்குமிங்கும் நடக்கத் துவங்கினார். அப்போது அவரது செல்போன் அடிக்கத் துவங்கியது. போனில் பேசியபடியே அவர் நடந்து கொண்டிருப்பதைக் கண்ட ஓர் இளம் பெண் வியப்போடு அவருக்கு கையசைத்தபடியே போனாள்.

தான் கூண்டிற்குள் இருப்பது எப்படியிருக்கும் என்று தனக்கு தெரியாதே என்பதால் அவருக்கு திடீர் யோசனை உருவானது. அந்தப் பெண்ணைக் கைதட்டி அழைத்து தன்னை ஒரு புகைப்படம் எடுத்துத் தரும்படியாக செல்போனை நீட்டினார். அந்தப் பெண் கூண்டிற்குள் அவர் நிற்பதைப் புகைப்படம் எடுத்துத் தந்தாள். அதைப் பார்க்கும்போது அவருக்கே சிரிப்பாக வந்தது. இரண்டு மூன்று நிமிசங்களுக்குப் பிறகு அவரது கால்கள் வலிப்பது போல இருந்தன.

கூண்டிற்குள்ளாக உட்கார்ந்து கொள்ளலாமா என்று பார்த்தார். இருக்கைகள் எதுவும் இல்லை. எப்படி உட்காருவது என்று யோசித்துக் கொண்டிருந்தார். கடந்த இருபது ஆண்டுகளில் அவர் ஒரு முறை கூட தரையில் உட்கார்ந்ததேயில்லை. சரி உட்கார்ந்து பார்க்கலாமே என்று கூண்டின் தரையில் அவர் உட்கார முயன்றபோது கால் முட்டிகளில் வலி உருவானது. மண்டியிட்டு காலை மடக்கி ஒருவழியாக உட்கார்ந்து தன்னை நிலைப்படுத்திக் கொள்ளும் போது கூண்டின் இசை நின்று கதவு

தானே திறந்து கொண்டது. அவ்வளவு தானா என்றபடியே அவர் கூண்டினை விட்டு வெளியே இறங்கி நடக்கத் துவங்கினார். அன்றைக்கு வேறு எவரும் கூண்டிற்குள் ஏறி தன்னை அடைத்துக் கொள்ளவில்லை.

ஆனால் மறுநாள் பூங்காவிற்கு வழக்கமாக வரும் காதலர்கள் இருவர் கூண்டிற்குள் தங்களை அடைத்து கொண்டார்கள். இருவருக்கும் அது வேடிக்கையாக இருந்தது. அவர்களைத் தொடர்ந்து வணிகப்பிரதிநிதி ஒருவன், கிரிக்கெட் ஆடும் சிறுவர்கள் இரண்டு பேர் என்று பத்திற்கும் மேற்பட்டவர்கள் கூண்டிற்குள் அடைத்துக் கொண்டார்கள்.

ஞாயிற்றுக்கிழமை காலையில் முதன்முறையாக ஒரு குடும்பம் அந்த கூண்டிற்குள் ஏறி தன்னை அடைத்துக் கொண்டது. அது மிக வேடிக்கையானதாக இருந்தது. அந்தக் குடும்பத்தில் கணவன், மனைவி, இரண்டு மகள்கள், ஒரு பையன் மற்றும் மகளின் கணவன் மற்றும் கைக்குழந்தை யாவரும் ஒரே நேரத்தில் உள்ளே ஏறிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஏழாவது குறுக்குத்தெருவில் உள்ள அரசு குடியிருப்பில் இருப்பவர்கள் என்று பூங்காவின் காவலர் சொன்னார்.

நாற்பது வயதைக் கடந்த அந்த வீட்டின் பெண்மணி கூண்டினைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தபடியே ‘‘நல்ல காற்றோட்டமாக இருக்கிறது. வெளிச்சம் கூட எப்படி சீராக விழுகிறது பாருங்கள்’’ என்று கணவனிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். அவளது கணவரோ வீட்டிலிருந்து ஏதாவது சமைத்து கொண்டுவந்திருந்தால் அதற்குள் உட்கார்ந்து சாப்பிடலாமே என்று ஆதங்கப்பட்டுக் கொண்டிருந்தார்.

கூண்டிற்குள் அடைக்கப்பட்ட இரண்டு இளம்பெண்களும் கம்பிகளைப் பிடித்தபடியே வெளியே நடந்துசெல்லும் இளைஞர்களைப் பார்த்து சிரித்துக் கொண்டிருந்தார்கள். அதில் ஒருத்தி கூண்டில் ஒரு கண்ணாடி மாட்டி வைத்திருந்தால் முகம் பார்க்க உதவியாக இருக்கும் என்று சலித்துக் கொண்டாள்.

சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்திருந்தவர்கள் அந்தப் பெண்களைப் பார்த்து சிரித்தார்கள். சிறுவனோ கூண்டின் இசையோடு சேர்ந்து மியமிங்மியமிங் என்று கத்திக் கொண்டிருந்தான். ஆறுநிமிசங்களுக்குப் பிறகு அவர்கள் வெளியே வந்தபோது குடும்பத்துடன் ஒருவரை கைகளைத் தட்டியபடி ஆரவாரமாக கத்தினார்கள்.

அன்றைக்கு கூண்டிற்குள் தன்னை அடைத்துக் கொள்வதற்கு இருநூறு பேர்களுக்கும் மேலாக முன்வந்தார்கள். அது பூங்காவில் பெரிய வேடிக்கையாக இருந்தது. யார் எப்போது கூண்டிற்குள் போவார்கள். கதவு மூடப்பட்டவுடன் கூண்டிற்குள் என்ன செய்வார்கள் என்று வேடிக்கை பார்ப்பது சுவாரஸ்யமாக இருந்தது. இதற்காகவே பூங்காவிற்கு நிறைய கூட்டம் வரத் துவங்கியது.

கூண்டில் தங்களைத் தாங்களே அடைத்துக் கொள்வதில் மக்கள் காட்டும்

ஆர்வம் அதிகமானதைக் கண்டு அதை ஒழுங்குபடுத்துவதற்காக இரண்டு காவலர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் கூண்டிற்குள் போவதற்காகக் காத்திருப்பவர்களை வரிசையில் நிற்கச் செய்தார்கள். விடுமுறை நாட்களில் அந்த வரிசை பூங்காவை விட்டு வெளியே சாலை வரை நீண்டு போவதாக மாறியது.

முதன்முறையாக ஒரு வயதானவர் தன் வீட்டிலிருந்து மடக்கு நாற்காலி ஒன்றைக் கொண்டு வந்து கூண்டிற்குள் போட்டு உட்கார்ந்து கொண்டு நாளிதழ் படித்தார். தன் உடலை செம்மை படுத்துவதில் ஆர்வம் கொண்ட நடுத்தரவயது ஆண் ஒருவர் சில நாட்களுக்கு முன்பாக கூண்டிற்குள்ளாகவே யோகா செய்ய ஆரம்பித்தார்.

புதிதாக திருமணம் ஆன கணவன் மனைவி இருவரும் மதிய உணவிற்குப் பிறகு கூண்டிற்குள் வந்து உட்கார்ந்து கொண்டு சீட்டாடினார்கள். அந்தப் பகுதியின் வார்டு கவுன்சிலர் தன்னுடைய விசுவாசிகள், நண்பர்கள் என கூண்டில் இடமில்லாமல் நெருக்கடி ஏற்படும் அளவு நாற்பத்தியாறு பேர்களுடன் கூண்டினுள் தன்னைப் பூட்டிக் கொண்டார். அவரிடம் கூண்டிற்குள் குடிநீர் இணைப்பு குழாய் ஒன்று பொருத்தப்பட வேண்டும் என்பதற்கான புகார் மனு அளிக்கப்பட்டது. அடர்ந்த தாடி கொண்ட ஒரு இருபது வயதைக் கடந்த இளைஞன் கூண்டிற்குள் சென்றதும் சுருண்டு படுத்து நிம்மதியாக உறங்கத் துவங்கினான்.

வரலாற்று பேராசிரியர் ஒருவர் அது கடந்த கால நினைவுகளுக்குள் நம்மை அழைத்து செல்வதாகவும், குற்றவாளிக்கூண்டுகள் அமைப்பதை பற்றி மதுராந்தகத்தில் ஒரு சோழர்கால கல்வெட்டு இருப்பதாகவும் உடன் வந்த ஆய்வு மாணவர்களிடம் தெரிவித்தார். பூங்கா இரவு பதினொரு மணிவரை இதற்காகவே திறந்து வைக்கப்பட்டிருந்தது. நகரின் பல்வேறு பகுதிகளில் இருந்து கூண்டில் தம்மை அடைத்துக் கொள்வதற்காக மக்கள் பயணம் செய்து வந்து பூங்கா திறக்கும் முன்பாகவே காத்திருந்தார்கள்.

இரண்டு தினங்களுக்கு முன்பாக நூறடி சாலையில் உள்ள ஒரு உணவகத்தை நடத்துகின்றவர் அந்தக் கூண்டினைப் பார்வையிட்டு அதை உருவாக்குவதற்கு எவ்வளவு பணம் செலவிடப்பட்டது என்று விசாரித்துக் கொண்டிருந்தார். பூங்காவின் காவலர் தனக்கு தெரியவில்லை என்றபோது அந்தக் கூண்டின் அருகாமையில் தான் ஒரு துரித உணவக பிரிவைத் துவங்குவதற்கு யோசனையிருக்கிறது என்று சொன்னார். பூங்கா காவலரும் அது மிக அவசியமான ஒன்று, வரிசையில் நிற்பவர்கள் சில நேரம் மணிக்கணக்கில் காத்திருக்கிறார்கள் என்று சொன்னான்.

கூண்டின் பாதுகாப்பிற்காக வந்திருந்த சப்இன்ஸ்பெக்டர் ஒருவர் தன்னை ஒருமுறை கூண்டில் அடைத்துக் கொண்டார். அவருக்கு கூண்டு அவ்வளவு பெரியதாக இருப்பதில் உடன்பாடில்லாமல் இருந்தது. நடக்க இடமில்லாமல் தலை முட்டும்படியாக அடைக்கப்படும் போதுதான் கூண்டின் முக்கியத்துவம் தெரியும்

என்று அலுத்துக் கொண்டார். பல நேரங்களில் மக்கள் வரிசையில் நின்றும் கூண்டு காலியாக கிடக்காமல் போவதால் கூண்டிற்குள் அடைக்கப்படும் நேரத்தினை மூன்று நிமிசமாக மாற்ற உத்திரவிட்டது அரசு. அதற்கு சிலர் எதிர்ப்புத் தெரிவித்தனர். நடைப்பயிற்சியில் வரும் சில பணம் படைத்தவர்கள் தனியாக தங்களது வீடுகளில் அது போன்ற கூண்டுகளைத் தாங்களே வடிவமைப்பு செய்து உருவாக்கிக் கொண்டார்கள்.

காதலர்கள், குடும்பத்தவர்கள், அரசியல்வாதிகள், சாதாரண மக்கள், அதிகாரிகள், சுற்றுலா பயணிகள் என்று அந்தக் கூண்டு ஓய்வில்லாமல் கத்திக் கொண்டேயிருந்தது. அந்த கூண்டினை பற்றிய சிறப்புக் கட்டுரையை நாளிதழ்கள் வெளியிட்டன. இரண்டு நாட்களின் முன்பாக அந்தக் கூண்டிற்குள் தொலைக்காட்சி ஒன்றின் நேரடி நிகழ்ச்சி நடைபெற்றது. மக்கள் ஏன் தங்களை கூண்டில் அடைத்துக் கொள்கிறார்கள் என்பதை பற்றி ஒவ்வொருவரும் ஒரு பதில் சொன்னார்கள். இப்படியாக காட்சிக்கூண்டு அதிமுக்கியத்துவம் அடையத் துவங்கியதைக் கண்டு மாநகராட்சி நகரின் அத்தனை பூங்காங்களிலும் இது போன்ற கூண்டுகளை உருவாக்கும் புதிய திட்டம் ஒன்றை கொரிய அரசின் ஒத்துழைப்போடு உருவாக்கத் திட்டமிட்டது.

ஆறு மாதங்களில் நகரில் புதிது புதிதாக நூற்றுக்கும் மேற்பட்ட கூண்டுகள் திறக்கப்பட்டன. இந்தக் கூண்டுகளில் வெறுமனே ஒலிபரப்பாகும் இசைக்கு பதிலாக தங்களது விளம்பரங்களை ஒலிபரப்பலாமே என்று பன்னாட்டு குளிர்பான நிறுவனம் முன்வந்த பிறகு கூண்டுகளின் நிறம் மற்றும் வடிவம் புத்துருவாக்கம் கொள்ளத் துவங்கின. மாநகரில் இப்போது ஆயிரத்திற்கும் மேற்பட்ட காட்சிக் கூண்டுகள் இருப்பதாகவும் அதன் விளம்பர வருமானம் பதினெட்டு கோடி என்றும் மாநகராட்சி பெருமையாக அறிவித்தது. ஆனால் இதுவரை ஒருவர் கூட கூண்டிற்கு எதிர்ப்பு தெரிவிக்கவேயில்லை என்பதோடு யார் இந்த யோசனையை உருவாக்கியது என்பது குறித்தும் அறிந்து கொள்ளவேயில்லை. மனவருத்தம் தீராத நாற்பது வயது மனிதன் ஒருவன் ஒரு இரவில் பூங்காவில் நுழைந்து அந்த கூண்டில் தூக்குபோட்டு தற்கொலை செய்து கொண்டான். அதன் காரணமாக நகரில் உள்ள அத்தனை கூண்டுகளுக்கும் உற்றுநோக்கும் கேமிரா பொருத்தப்பட்டது. அதைக் கண்காணிக்கும் அலுவலகம். அதற்கான பணியாளர்கள், பராமரிப்பாளர்கள், சோதனை அதிகாரிகள் என்று தனித்துறை உருவானது.

நாளடைவில் மக்களுக்கு சலித்துப் போக ஆரம்பித்தது. எவரும் கூண்டில் ஏறி தன்னை அடைத்துக் கொள்ளவில்லை. மெல்ல புறக்கணிப்பின் கரங்கள் அதை பற்றிக் கொள்ள மழை வெயிலில் துருவேறிய கூண்டு கவனிப்பாரற்றுப் போகத் துவங்கியது.

ஆனால் அரசின் கூண்டு பராமரிப்புத் துறையோ தன் உயர் அலுவலர், கண்காணிப்பாளர், பணியாளர்கள், பாதுகாவலர்கள் என்று ஆயிரக்கணக்கான ஆட்களுடன் இன்றைக்கும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறது. யாரும் அதைப் பற்றி சிறு குறை கூட தெரிவிக்கவில்லை என்பதே அதன் சிறப்பம்சம்.

**எஸ். இராமகிருஷ்ணன்.**

**பயிற்சி**

1. புதிய பழக்கம் ஒன்று சமூக வழக்காறாக மாறும் போக்கில் ஆரம்பத்தில் எதிர்நோக்கும் சிக்கல் பற்றியும், பின்னர் அது எவ்வாறு இயல்பான நடத்தைக் கோலமாகிவிடுகிறது என்பதையும் இந்தச் சிறுகதை எவ்வகையில் வெளிப்படுத்தி நிற்கிறது?
2. பொதுப் போக்கான மக்கள் பங்கேற்புக்களை எத்தகைய நிறுவனங்கள் எவ்வகையில் பயன்படுத்த முனைகின்றன?
3. வழக்கொழிந்த சடங்காசாரங்களை மக்கள் கைவிட்டாலும் சில அதிகாரத் தரப்புகள் அதற்கான வருமானங்களில் சீவிக்கும் வழக்கம் சிறுகதை வாயிலாக எவ்வாறு வெளிப்படுத்தப்பட்டுள்ளது?
4. ஏதோவொரு வகைச் சிறையில் ஒவ்வொருவரும் தாமே விரும்பி நுழைவதாக எமது வாழ்க்கை அமைந்துவிடுகிறது என்பது பற்றி சிறுகுறிப்பு எழுதுக.
5. காரண - காரிய விளக்கங்களுடன் சுயசிந்தனை அடிப்படையில் மேற்கொள்ள வேண்டிய வாழ்க்கைக் கோலங்களைக் கட்டமைப்பதன் அவசியத்தை இச் சிறுகதை எவ்வகையில் உணர்த்துகிறது?

## விவரணம் எழுதுதல்

ஒரு பொருளையோ, மனிதரையோ, இடத்தையோ விபரித்து எழுதுவது விவரணம் எழுதுதல் எனப்படும். விவரணம் எழுதும்போது இரண்டு விடயங்களைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

1. பொருளைக் கூர்ந்து அவதானித்துத் தெளிந்து எழுதுதல்.
2. அதை விபரித்து தேவையான விடயங்களை விவேகத்துடன் தெரிந்து எடுத்தல்.

இவ்விரு விடயங்களுக்கும் கற்பனை மிகவும் அவசியமாகும். பரீட்சை வினாப் பத்திரத்தில் கொடுத்த பொருளையோ, தெரிந்து எடுத்துக்கொண்ட மனிதரையோ, இடங்களையோ நேரடியாகக் காண முடியாது. இவ்வேளையில் கற்பனையைப் பயன்படுத்த வேண்டியது அவசியமாகும். முன்னரே கண்ட விடயங்களைக் கற்பனையில் விபரிப்பது தான் சாதாரணமாக இத்தகைய விவரணங்கள் எழுதுவதற்கு அனுகூலமான முறையாகும். முன்னர் கண்டு ஞாபகத்தில் வைத்த விடயங்களை வாசகர் மனதில் அதே வடிவில் கொண்டு வருவதற்கு நல்ல கற்பனையும் திறமையும் அவசியம்.

இவ்வாறு ஞாபகத்தை முறைப்படி உண்டாக்கும்போது முதலில் என்ன பதிவுகளை உண்டாக்கிற்று என்பதைத் தெளிவாகக் கருத்தில்கொள்ள வேண்டும். இவற்றைக்

*குறித்துக்கொள்ள வேண்டும். இம்முக்கிய கருத்துக்களுக்கு ஆதாரமாக உள்ள விபரங்களைப் பின்னர் பொருத்தமான முறையில் அமைத்துக்கொள்ள வேண்டும். முன்பின் தொடர்பில்லாத சம்பவங்களை வெளிப்படுத்த முயலும்போது தெளிவான விவரண அமைப்பு ஏற்படாது.*

*விவரணத்தின் தன்மைகள்.*

*1. புறநோக்கானது*
*2. அகநோக்கானது*

*புறநோக்கான விவரணத்தில் ஒருவர் தம்முடைய சொந்த அபிப்பிராயங்களைக் கூறாமல் கண்ட விடயங்களை மாத்திரம் கூறுவார். அகநோக்கான விவரணத்தில் புறநோக்கான விவரங்களைக் கூறுவதோடு சொந்த அபிப்பிராயங்களையும் கூறுவர். இதனால் விவரணம் சுவையுடையதாகவும், எழுதுவோரின் குணவியல்புகளை ஓரளவு வெளிப்படுத்தக்கூடியதாகவும் இருக்கும். தான் கண்டதை எழுதுவதோடு உள்ளத்திலுள்ள கிளர்ச்சிகளையும் விபரிப்பர். இவ்வாறு இரண்டு வகையான விவரணங்கள் எழுதலாம். இருந்தாலும் அகநோக்கான விவரணமே சுவை பெற்றதாக அமையும்.*

***கீழே தரப்பட்டுள்ள விவரணங்களைக் கவனியுங்கள்.***

தென்கிழக்கு ஆசிய நாடுகளிலே மக்கள் விரும்பி உண்ணும் ஓர் உணவு, பட்சிகள் கட்டிய கூட்டிலிருந்து செய்யப்படும் ஒருவகை இரசம் ஆகும். இந்தப் பண்டத்தைக் கொமாண்டன் குகைகளில் பெறலாம். இக்குகை கிபைத் தாங்கன் என்ற ஆற்றை அடுத்து இருக்கின்றது. இது போர்ணியோவின் குளக்கரையைச் சேர்ந்த பிரதேசத்தில் உள்ளது. இப்பகுதிக்குச் செல்வோர் இக் குகைகளைப் பார்க்காமல் வருவதில்லை. இக் குகைகளை அடைவதற்கு ஆற்று மார்க்கமாகவும் செல்லலாம். அல்லது சீகொங் குடாவின் தென் கரையோரமாக நில மார்க்கமாகவும் செல்லாம். ஆற்று மார்க்கமாகச் செல்வது கொஞ்சம் கடினம்.

கொமாண்டன் பிரதேசத்தில் இரண்டு குகைகள் உள்ளன. ஒன்று உயர் பூமியிலும் மற்றையது தாழ் பூமியிலும் இருக்கின்றது. தாழ் பூமியிலுள்ள குகை மிகவும் விசாலமானது. உயர் பூமியிலுள்ள குகை சிறியதும் கிடைநிலையில் உள்ளதுமாகும். தாழ் பூமியிலுள்ள தாழ்ந்த குகையிற் கூடு சேகரிப்போர் நின்று அதை எடுப்பதற்கான மேடைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இம்மேடைகள் குகையின் முகடு வரையும் கட்டப்பட்டுள்ளன. இவற்றில் ஏறி நின்றுகொண்டு கொளுக்கித் தடியினால் கூடுகளை எடுக்கலாம். இவ்வாறு செல்ல மேற்குகைகளிலும் படிக்கட்டுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. குகைகளை அடைய வேண்டுமானால் முதலில் இந்தக் குன்றிலே ஏறி, பின்பு ஏணி மூலம் குகைக்குள் இறங்க வேண்டும். இவ்வாறு

**செய்வதற்குத் திறமை வேண்டும். கிழக்கு போர்ணியோத் தீவிலுள்ள சிறப்பான இயற்கை அம்சம் இந்தக் குகைகள் என்றே சொல்ல வேண்டும்.**

மேலே உள்ள விவரணத்தில் செய்திகள் ஓரளவு தெரிந்தெடுக்கப்பட்டுத் தெளிவாகக் குறிக்கப்படுகின்றன. இதிலுள்ள மையக் கருத்து, கொமாண்டன் குகைகள் கவர்ச்சி மிக்க இயற்கைக் காட்சிகளை உடையன என்பதேயாகும். இந்த மையக் கருத்துக் கடைசியில் விவரணத்தின் முடிவாகக் குறிப்பிடப்படுகின்றது. என்றாலும் விவரணம் ஒழுங்கான கருத்துக் கோவையுடையதாய் விளங்குகிறது. இது ஒரு புறநோக்கான விவரணமாகும். இவ்விவரணம் படர்க்கையில் எழுதப்பட்டுள்ளது. இதை அகநோக்கான விவரணமாகவும் மாற்றியமைக்கலாம். அப்போது அது தன்மை இடத்தைப் பெறுகின்றது. மனத்தைக் கவரக்கூடிய முறையில் உயிர்ப்பு மிக்கதாகவும் அது அமைந்துவிடுகின்றது. இவ்வாறே முன்னிலையில் வைத்தும் சில விவரணங்களை எழுதலாம். அதாவது வாசகர்களை அழைத்து அவர்களுக்கு இக்காட்சியைக் காட்டுவது போலவும் இதை அமைக்கலாம்.

**பயிற்சி**

1. நீர் கலந்துகொண்ட கல்விச் சுற்றுலாவின்போது கண்ட காட்சிகள், பெற்ற அறிவு, அனுபவங்கள் பற்றிய விவரணம்.

★ கல்விச் சுற்றுலாவை ஒழுங்குசெய்வதில் மாணவர்களின் பங்களிப்பு பற்றிய சுருக்கம்.
★ கல்விச் சுற்றுலாவுக்கெனத் தெரிவுசெய்த இடங்கள்.
★ பிரயாணத்தின்போது கண்ட இயற்கைக்காட்சிகள், கல்வி தொடர்பாகப் பார்வையிட்ட இடங்கள், வரலாற்று, பண்பாட்டு, சமய, பொருளாதார முக்கியத்துவம்.
கல்விச் சுற்றுலாவினால் பெற்ற அறிவும் அனுபவமும்.
★ சுற்றுலாவை ஒழுங்கு செய்தல்.
★ கற்றவற்றை நேரில் காணுதல்.
★ பலருடனும் பழகுதல்.
★ பல சமூகத்தவர் பற்றியும், பழக்க வழக்கங்கள் பற்றியும் அறிதல்.
★ காலநிலை, பௌதீக வேறுபாடுகளை அறிதல்.
(தனது சொந்த அனுபவங்களைக் கூறும் பாங்கில் அமைதல்)

2. நீர் வாழும் பிரதேசத்தில் அடிக்கடி நீங்கள் சந்திக்கும் நூதன மனிதனது தோற்றம், அவனது வேடிக்கைச் செயல்கள், உமக்கும் அவனுக்குமுள்ள தொடர்பு என்பவற்றை விபரித்து ஒரு விவரணம்.

★ தனது பிரதேசத்தில் எங்கே, எப்போது, எப்படிச் சந்தித்தார் என்பதைக் குறிப்பிடுதல்.
★ தோற்றம் - உருவம், உயரம், உடலமைப்பு, நடை, உடை, பாவனை.

★ குணாதிசயங்கள் - நடை, பேச்சு, சைகைகள், விநோதமும் நகைச்சுவையும், சிறப்பாக நகைப்பூட்டும் குண இயல்புகள்.
★ செயல்கள் - வேடிக்கைச் செயல்கள், சிரிப்பூட்டத் தக்கவை, அசாதாரண நடவடிக்கைகள், சைகைகள்.
★ தொடர் - முதற் சந்திப்பிலிருந்து சந்திப்பு தொடர்தல், காண வேண்டும் என்ற அவா.

3. ஒரு காட்டில் பழங்குடி மக்களுடன் நிகழ்ந்த எதிர்பாராத சந்திப்பின்போது நீர் கண்டவை, உமக்கு ஏற்பட்ட அனுபவங்கள் தொடர்பான உமது மனப் பதிவுகளை வாசகரின் உள்ளத்து உணர்வுகளைத் தூண்டும் வகையில் விவரிக்கும் ஒரு விவரணம்.

★ காட்டிற்குச் சென்ற சந்தர்ப்பம்.
★ காட்டில் பழங்குடிகளைச் சந்தித்தமை.
★ அவர்களது தோற்றம், அலங்காரம்.
★ உரையாடல்கள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், கலாசாரம், பண்பாடுகள்.

★ உபசரிப்பு, உணவு வகைகள், நடவடிக்கைகள், எதிர்மாறான செயல்கள்.
★ இவ் அனுபவங்கள் தொடர்பாக ஏற்பட்ட மனப்பதிவுகள்.
★ உள்ளத்து உணர்வுகளைத் தூண்டும் வகையிலிருத்தல்.

4. ‘‘வீதியோரத்திலே சனக்கூட்டத்தின் மத்தியில் நின்று சோதிடம் பார்க்கும் ஒரு விசித்திரமான பேர்வழி’’ என்ற தலைப்பில் ஒரு விவரணம்.

★ சோதிடம் பார்ப்பவரின் தோற்றம்.
★ சோதிடம் பார்ப்பதற்காக குழுமியிருப்போர் பற்றிய விபரம்.
★ விசித்தரமான பேர்வழி என்பதற்கான விளக்கம்.
★ சோதிடம் கூறும் தன்மை.
★ மக்களைக் கவரும் தன்மை.
★ சோதிடம் பார்த்த பின்னர் மக்களிடம் காணப்பட்ட உணர்வலைகள்.

5. உலக ஆசிரியர் தினத்தையொட்டி உங்கள் பாடசாலையில் நடந்த ஆசிரியர் தின விழா நிகழ்ச்சிகளைக் கூறும்வகையில் அமைந்த ஒரு விவரணம்.

★ விழா ஒழுங்குகள் - நடைபெற்ற இடம், காலம், அலங்காரம், ஏற்பாடுகள்.
★ இடம்பெற்ற நிகழ்ச்சிகள் - ஆரம்ப வைபவம், வரவேற்புரை, பிரதம விருந்தினர், ஆசிரியர்கள் கௌரவிக்கப்பட்டல், கலைநிகழ்ச்சிகள்.
★ நிறைவு.

# சம்பவ விவரிப்பு

நடைபெற்ற ஒரு நிகழ்வைப் பார்த்து, அறிந்து, கேட்டு, நடந்தவற்றை நடந்தது போலவே விவரித்துக் கூறுவது, எழுதுவது சம்பவ விபரிப்பு எனப்படும். நடைபெற்ற சம்பவத்தை வர்ணித்து, கற்பனையில் சித்திரித்து எழுதும்போது நடைபெறாத விடயங்களை அல்லது தவறான, பிழையான சம்பவங்களைக் கொடுக்கக் கூடாது. உள்ளதை உள்ளது போலவே குறிப்பிட்டுக் கூறுவதே சம்பவ விவரிப்பு எனக் கருதப்படும்.

எமது வாழ்வில் அதிகமான சம்பவங்களை நாம் பார்த்தும், கேட்டும், அறிந்தும், அனுபவித்தும் வருகிறோம். அவற்றை மாணவர்கள் எழுத்து வடிவில் அமைப்பதே இப்பகுதியின் நோக்கமாகும்.

***சம்பவம் ஒன்றை எழுத்து வடிவில் விவரித்து எழுதும்போது கடைப்பிடிக்க வேண்டிய அம்சங்கள்:***

★ நியம மொழிநடையில் எழுதுதல்.
★ ஒழுங்கு முறைப்படி எழுதுதல்.
★ விடயங்களை உணர்வுபூர்வமாக வெளிப்படுத்துதல்.
★ சம்பவம் நடைபெற்ற இடம், காலம், நேரம், நடந்த விதம் என்பவற்றைத் தெளிவாக வெளிப்படுத்துதல்.
★ பெற்றுக்கொண்ட படிப்பினைகளை எடுத்துக்காட்டல்.
★ பெற்றுக்கொண்ட சம்பவத் திரட்டு உண்மையானதா என உறுதிபடுத்திக் கொள்ளல்.
★ சம்பவம் ஒன்றை நேரில் கண்டது போலக் குறிப்பிடுதல்.
★ கேட்போரின், வாசகரின் மனதைக் கவரும் வகையில் சம்பவத்தை இரசனைப்படுத்துதல்.
★ சம்பவம் மூலம் பெற்றுக்கொண்ட படிப்பினைகளை எடுத்துக் காட்டுதல்.
★ சம்பவத்தைச் சுவைபட எடுத்துக் காட்டல்.

நாம் எமது வாழ்வில் சந்திக்கும், காணும், கேட்கும், அறியும் சம்பவங்கள் இயற்கை நிகழ்வுகளாகவும், செயற்கை நிகழ்வுகளாகவும் அமையும். இயற்கையாகக் காணும் சம்பவங்கள் எவ்வித மாற்றங்களுக்கும் உள்ளாக மாட்டா. ஆனால் செயற்கையாக நிகழும் சம்பவங்கள் வித்தியாசமான, விபரீதமான, அதிர்ச்சியான நடத்தைக்கோலங்களை எமக்குத் தருகின்றன.

***பின்வரும் சம்பவத்தை அவதானியுங்கள்:***

அன்று வழமைபோல விடுதியில் இருந்து பாடசாலைக்கு அதிகாலையிலேயே சென்று கொண்டிருந்தேன். வழமைக்கு மாறாக அமைதி குடிகொண்டிருந்த அப்பாதை, மழை மேகங்களின் கருமை காரணமாக ஓரளவு இருளாகவும்

இருந்தது. பாடசாலையில் நடைபெறும் சம்பவங்களை சற்றுப் பின்னோக்கி எனது சிந்தனையைச் செலுத்திய வண்ணம் சென்று கொண்டிருந்தேன். திடீரென ஒரு பெருஞ் சத்தம் டமார் டமார் எனக் கேட்டது. பின்னோக்கி திரும்பிப் பார்த்தேன். இரண்டு வாகனங்கள் ஒன்றோடு ஒன்று மோதியிருந்தன. பயணிகளின் கூக்குரல், இரைச்சல் காதைத் துளைத்தது. அழுகைச் சத்தம் மறுபக்கம். உடனே சனநெரிசல் வாகனங்களைச் சூழ்ந்து கொண்டது. நானும் ஓடிப்போய் அந்நெரிசலோடு நெரிசலாக முட்டி மோதிக்கொண்டு சம்பவத்தை அவதானித்தேன். ஒரு மோட்டார் வண்டியும் ஒரு பேரூந்தும் முகத்துக்கு முகம் மோதியிருந்தன. மோட்டார் வாகனச் சாரதி ஸ்தலத்திலேயே இறந்துகிடந்தார். மோட்டார் வாகனத்தில் பயணஞ் செய்த புதுமணத் தம்பதியர் இரத்த வெள்ளத்தில் கிடந்தனர். உடனே அவர்கள் அவசர சிகிச்சைக்காக வைத்தியசாலைக்கு எடுத்துச் செல்லப்பட்டார்கள். பொலிஸார் விரைந்து வந்து விசாரணைகளை ஆரம்பித்தனர்.

*இவ்வாறாக எமது வழ்வில் பல சம்பவங்கள் இடம்பெற்றிருக்கின்றன. அவற்றில் சில சம்பவங்கள் மனதில் நிலைத்து விடுகின்றன. சில சம்பவங்கள் மறைந்து விடுகின்றன. இன்னும் சில சம்பவங்கள் எமது வாழ்வில் என்றும் மறக்க முடியாத நிகழ்வுகளாகப் பதிவு பெறுகின்றன. அவ்வாறான சம்பவங்களை விபரிப்பதே இப்பகுதியின் நோக்கமாகும்.*

**பயிற்சி**

*பின்வரும் சம்பவங்களை எழுத்து வடிவமாக்குங்கள்:*

★ *உங்கள் வாழ்வில் என்றும் மறக்க முடியாத ஒரு நிகழ்வு.*
★ *சிரிப்பூட்டும் சம்பவம்.*
★ *அசம்பாவித சம்பவம்.*
★ *வியப்பூட்டும் சம்பவம்.*
★ *வழமைக்கு மாறாக நடந்த ஒரு சம்பவம்.*
★ *மகிழ்ச்சிகரமான ஒரு சம்பவம்.*
★ *கவலைதரும் சம்பவம்.*

# வாக்கிய இயைபு

முற்றுப்பெற்ற வாக்கியம் ஒன்றில் எழுவாய் பயனிலையுடன் திணை, பால், எண், இடம், காலம், வினா, விடை, மரபு ஆகிய இலக்கணக் கூறுகள் ஒன்றோ பலவோ பொருத்தமுற அமைதல் வாக்கிய இயைபு ஆகும்.

எனவே முற்றுப்பெற்ற வாக்கியத்தில் எழுவாயும் பயனிலையும் இயைபு பெறுதல் வழாநிலை வாக்கியம் எனப்படும். அவ்வாறு இயைபு பெறாத வாக்கியங்கள் வழுநிலை வாக்கியம் எனப்படும்.

பின்வரும் உதாரணங்களை அவதானிப்போம்:

சங்கீதன் பாட்டுப் பாடினான்.
தாட்சாயணி சிறுகதை எழுதினாள்.
மாணவர்கள் நூலகத்தில் சஞ்சிகை வாசித்தனர்.
கன்றுக்குட்டி துள்ளியோடியது.
கொக்குகள் ஆற்றங்கரையோரம் பறந்தன.

மேலே உள்ள வாக்கியங்களில் எழுவாய் பயனிலை ஆகியன திணை பால் முதலிய இலக்கணக் கூறுகளோடு இயைபுபெற்று வழாநிலை வாக்கியங்களாக அமைந்துள்ளன.

பின்வரும் அமைப்பினை அவதானியுங்கள்:

| வழாநிலை | வழு | வகை |
|---|---|---|
| அவன் வந்தான் | அவன் வந்தது | - திணைவழு |
| மாதவி ஆடினாள் | மாதவி ஆடினான் | - பால்வழு |
| பறவைகள் பறந்தன | பறவை பறந்தன | - எண்வழு |
| நானே அதைச் செய்தேன் | நானே அதைச் செய்தது | - இடவழு |
| நாளை வருவேன் | நாளை வந்தேன் | - காலவழு |
| இந்தப் பசு எத்தனை போத்தல் பால் கறக்கும் | இந்த எருது எத்தனை போத்தல் பால் கறக்கும் | - வினாவழு |
| பறவையின் இளையது குஞ்சு | பறவையின் இளையது குட்டி | - மரபுவழு |

**வழு - வழாநிலை அவதானிக்கவேண்டிய அம்சங்கள்**

- தன்மை முன்னிலை படர்க்கை எழுவாய்கள் பிரிநிலைப் பொருளில் ஆ, ஓ என்னும் இடைச்சொல் பெற்றுவரின் யார் என்னும் எழுவாய் வருவித்துப் பயனிலை கொடுத்து முடித்தல் வேண்டும்.

வழு - நானா நீயா இதைச் செய்தீர்.
வழாநிலை - நானா நீயா யார் இதைச் செய்தார்

- பிரிநிலைப் பொருளில் வரும் ஆயினும் ஆதல், ஆவது, ஓ, ஆ என்னும் இடைச் சொற்களையடுத்து அல்லது என்னும் சொல் இடம்பெறவேண்டுவதில்லை.

வழு - லவனாயினும் அல்லது குசனாயினும் இங்கு வருக.
வழாநிலை - லவனாயினும் குசனாயினும் இங்கு வருக.

- உயர்திணையா அஃறிணையா என ஐயம் தோன்றுமிடத்து உரு, வடிவு, உருவம், வடிவம் என்னும் பொதுச்சொற்களில் ஒன்றைக் கொண்டு முடித்தல் வேண்டும்.

வழு - மனிதனோ வெருளியோ அங்கு தோன்றுவது.
வழாநிலை - மனிதனோ வெருளியோ அங்கு தோன்றும் உரு.

- உயர்திணையில் ஆண்பாலா பெண்பாலா என ஐயம் தோன்றுமிடத்துப் பலர்பாற் சொல் கொண்டு முடித்தல் வேண்டும்.

வழு - தம்பியா தங்கையா அங்கு நிற்பவன் /தம்பியா தங்கையா அங்கு நிற்பவள்
வழாநிலை - தம்பியா தங்கையா அங்கு நிற்பவர்.

- அஃறிணையில் ஒன்றன்பாலா பலவின்பாலா என ஐயம் தோன்றுமிடத்து அஃறிணை இருபாற் பொதுச் சொல் அல்லது பால் பகா அஃறிணைச் சொல் கொண்டு முடித்தல் வேண்டும்.

வழு - ஒன்றோ பலவோ வயலிற் புகுந்த பன்றிகள்.
வழாநிலை - ஒன்றோ பலவோ வயலிற் புகுந்த பன்றி.

**பயிற்சி**

*(அ)* பின்வரும் வழுநிலை வாக்கியங்களை வழாநிலை வாக்கியங்களாக எழுதுக:

1. நேர்மையும் ஒழுக்கமும் போற்றப்பட்டது.
2. அவள் தீங்கு செய்பவளல்ல.
3. செய்தி வாசிப்பது இராமநாதன்.
4. சுயநலமும் பொறாமையும் நன்மை பயப்பதன்று.
5. அவர் தன் நிலையைக் கூறினார்.
6. சோலையில் மலர்கள் அழகுடையதாய்த் தோன்றியது.
7. மோராதல் அல்லது நீராதல் தருக.
8. நானா அல்லது நீயா யார் இதைச் செய்தார்?

*(ஆ)* பின்வருவன எவ்வகை வழுவமைதி என எழுதுக

1. என் இராசாத்தி வாடா
2. நீரெல்லாம் அசுத்தமாயிற்று
3. குளத்து நீரெல்லாம் வற்றியது.
4. வெள்ளைச்சி வருகிறாள் (பசுவைக் கூறுதல்)
5. எங்கள் பொருள் எங்கள் பிள்ளைகள்தான்
6. தங்கள் வரவை எதிர்பார்த்திருந்தோம்
7. மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா
8. நாங்கள் இவ்வூரில் இருந்தபோது இந்த இடத்தில்தான் விளையாடுவோம்.

**செயற்பாடு**

வழுவமைதி

வழுவுடைய சில வாக்கியங்களை அறிஞர்கள் சில காரணங்களால் வழுவற்றன என அமைதி கூறினர். இவற்றைப் பற்றி தரம் 10 இல் நீங்கள் கற்றுள்ளீர்கள். அவற்றை மீட்டுப் பார்த்து பின்வரும் வழுவமைதிகளுக்கு ஒவ்வொரு வாக்கியம் எழுதுக.

1. திணை வழுவமைதி
2. பால் வழுவமைதி
3. எண் வழுவமைதி
4. இட வழுவமைதி
5. கால வழுவமைதி

# வேற்றுமை

அனைத்து வகைப்பட்ட பெயர்ச் சொற்களும் இறுதியில் வேற்றுமை உருபுகளை ஏற்பதால் அதன் பொருள் வேறுபடுதலையே வேற்றுமை என்போம்.

பெயர்ச் சொற்களின் சிறப்பு இலக்கணம் வேற்றுமை உருபுகளை ஏற்பதாகும்.

ஐ, ஆல், கு, இன், அது, கண் என்ற வேற்றுமை உருபுகளை பெயர்ச் சொற்கள் ஏற்பன.

இந்த அடிப்படைகளையும், இவை சார்ந்து முதல் நான்கு வேற்றுமைகளையும் பற்றி சென்ற வருடம் கற்றுள்ளோம். இங்கு இறுதி நான்கு வேற்றுமைகள் பற்றிக் கற்போம்.

## ஐந்தாம் வேற்றுமை

இல், இன் என்பன இவ்வேற்றுமைக்கான உருபுகளாகும். நீங்கல் பொருள், எல்லைப் பொருள், ஏதுப் பொருள் ஆகியவற்றை இவ்வேற்றுமை உருபுகள் சுட்டும்

**நீங்கல் பொருள்**

நீங்கல் என்பது ஓர் இடத்திலிருந்து விலகுவதைக் குறிக்கும். இது பருப்பொருள் சார்ந்து அல்லது பருப்பொருள் சாராது அமைய இயலும்.

பருப்பொருள் சார்ந்து,

★ பாடசாலையிலிருந்து வீட்டுக்குச் சென்றேன்
★ கிளி கூட்டிலிருந்து பறந்துவிட்டது.

பருப்பொருள் சாராதது,

★ கவலையிலிருந்து என்னால் விடுபட முடியவில்லை.
★ பொய்யிலிருந்து உண்மையை வேறுபடுத்த வேண்டும்.

இருந்து என்பதாகவும் இவ் உருபு அமைய இயலும்.

★ அங்கிருந்து, இங்கிருந்து, மேலிருந்து, கீழிருந்து

உயர்திணை, அஃறிணைப் பெயர்களுடன் இலிருந்து என்பதற்கு மாற்றமாக இடமிருந்து எனும் உருபு இணைந்து நிற்கும்.

★ தாயிடமிருந்து பிள்ளையைப் பிரிக்க முடியாது,
★ காகத்திடமிருந்து வடையைக் காப்பாற்றினேன்.

**ஒப்புப் பொருள்**

பழந்தமிழ் மரபில் இல் உருபு ஒப்புப் பொருளாக வந்துள்ளது.

★ ஊழிற் பெருவெலி யாவுள.

இக்காலத் தமிழில் ஒப்புப் பொருள் - இல் உருபினால் உணர்த்தப்படவில்லை.

★ கொழும்பைவிட நுவரெலியாவில் குளிர் அதிகம்.
★ என்னைப் பார்க்கினும் அவன் பலசாலி.
★ கவிதையைக் காட்டிலும் சிறுகதை படிக்கப்படுவது அதிகமாயுள்ளது.

**எல்லைப் பொருள்**

இன் உருபு ஏற்று வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய திசைப் பெயர்களும் முன், பின், கீழ், மேல், உள், வெளி எனும் இடக்குறிப்பு உணர்த்தும் பெயர்களும் அமைவுறும்.

★ வீட்டின் முன்னால் பூந்தோட்டம் உள்ளது.
★ இலங்கையின் வடக்கில் இந்தியா இருக்கிறது.

**ஏதுப் பொருள்**

ஒன்றின் உயர்வு அல்லது தாழ்வு என்பனவற்றுக்கு காரணமாய் அமைவது ஏதுப் பொருள் எனப்படும். பழந்தமிழில் இல் உருபு ஏற்று வந்துள்ளது.

★ கல்வியில் பெரியன் கம்பன்.

கற்றறிந்தவர் என்பதால் கம்பன் பெரியவன் என்ற பொருள் கொள்ளப்படுகிறது.

இன்று - இல் உருபுக்கு பதிலாக ஆல் உருபு ஏது பொருளாய் அமைகிறது. ஆயினும் கவிதைகளில் இல் உருபு இன்றும் கையாளப்படுகிறது.பாரதியின் கவிதை அடிகள் இதற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றன.

'ஞானத்திலே பர மோனத்திலே - உயர்
மானத்திலே அன்ன தானத்திலே
கானத்திலே அமுதாக நிறைந்த
கவிதையிலே உயர்நாடு'

## ஆறாம் வேற்றுமை

இன், அது, உடைய என்பன இதன் உருபுகளாகும்.

ஏனைய வேற்றுமைகளிலிருந்து முக்கியமான வேறுபாடொன்றை இது கொண்டுள்ளது. ஏனைய வேற்றுமைகள் பெயருக்கும் வினைக்கும் இடையில் அமைந்தன.

★ பெண் வந்தாள்.
★ தாயைக் காண்பதற்காகச் சென்றான்.
★ நண்பியோடு சென்றாள்.
★ நான் வீட்டுக்குச் சென்றேன்.
★ கிளி கூட்டிலிருந்து பறந்துவிட்டது.
★ கண்ணனிடம் புத்தகம் இருக்கிறது.
★ மகனே வா.

ஆறாம் வேற்றுமை இரண்டு பெயர்ச்சொற்களுக்கிடையே உள்ள உறவைச் சுட்டி நிற்பதாகும்.

★ மரத்தின் கிளை
★ கண்ணனது புத்தகம்
★ என்னுடைய வீடு

இன் உடைமைப் பொருள் கூடவே, அது, உடைய எனும் உருபுகளை இணைத்தும் வர இயலும்.

★ மரத்தினது கிளை
★ நாட்டினுடைய முன்னேற்றம்

ஒரு பெயர்ச் சொல்லுடன் இரண்டு வேற்றுமை உருபுகள் வருவதில்லையென்பதால் இங்கு இன் சாரியை கருத்திற் கொள்ளப்படுகிறது. தற்கால வழக்கில் இன் என்பது உடைமை வேற்றுமையாக கருதப்படுகிறது.

★ வீட்டின் கூரை
ஆறாம் வேற்றுமையானது உடைமை வேற்றுமை என்பது கவனிப்புக்குரியதாகும்.

## ஏழாம் வேற்றுமை

இது இட வேற்றுமை ஆகும். மரபிலக்கணம் *28* உருபுகளை ஏழாம் வேற்றுமைக்குரியதாகக் கூறியபோதிலும் தற்கால வழக்கில் இல், இடம் ஆகிய உருபுகளே இட வேற்றுமையாகப் பயன்படுவன.

★ குருவி வானத்தில் பறந்தது.
★ அவன் பாடசாலையில் மயங்கி விழுந்தான்.

பருப்பொருள் சார்ந்து மட்டுமன்றி உணர்வு, நினைவு என்பவை உள்ளிட்ட பருப்பொருள் சாராதவற்றையும் இது உள்ளடக்கும்.

★ அவரது சிந்தனையில் தெளிவு உண்டு.
★ தமிழில் வளமான இலக்கிய நூல்கள் உள்ளன.

இல் உருபு கால வரையறையையும் உணர்த்தப் பயன்படும்.

★ இந்த நாவலை ஒரு வாரத்தில் படித்து முடித்துவிடுவேன்.

ஒரு குழுவில் அமையும் பிறிதொரு குழுவைச் சுட்டவும் இவ் உருபு பயன்படும்.

★ என் மாணவர்களில பலர் பண்பில் சிறந்தவர்கள்.
★ அவர் மனிதரில் மாணிக்கம்.

இடம் எனும் சொல்லுருபு உயர்திணைப் பெயர்களுடன் வருகின்றன.

★ கமல் நண்பனிடம் கடன் கேட்டான்.
★ கண்ணன் ஆசிரியரிடம் ஆலோசனை கேட்டான்.

கற்பனைக் கதைகளில் அஃறிணைப் பெயர்களுடனும் இடம் எனும் உருபு வருகின்றது.

★ முயல் சிங்கத்திடம் சென்றது.
★ குருவி மரத்திடம் உதவி கேட்டது.

## எட்டாம் வேற்றுமை

இது விளி வேற்றுமை ஆகும். பேசுவோன் படர்க்கை இடத்துக்குரியவரை முன்னிலைப்படுத்தி அழைத்துப் பேசுவதே விளி வேற்றுமை எனப்படும். இதற்குத் தனியான உருபுகள் இல்லை. ஏனைய வேற்றுமைகள் ஏற்ற பெயர்கள் வாக்கியத்தினுள் எழுவாய், செயப்படுபொருள் போல் வாக்கிய உறுப்புகளாகத் தொழிற்படும்போது விளி வேற்றுமைப் பெயர்கள் வாக்கியத்துக்கு வெளியே நிற்கின்றன. அது வாக்கியத்தின் உறுப்பு அல்ல.

★ அம்மா, நீ என்னை அழைத்தாயா?

இங்கு 'நீ என்னை அழைத்தாயா?' என்பதே வாக்கியம். நீ - எழுவாய். என்னை அழைத்தாயா - பயனிலைத் தொடர். அம்மா என்னும் விளி, வாக்கியத்துக்கு வெளியே நிற்கிறது.

வினைக்கும் விளிக்கப்படும் பெயருக்கும் இடையே நேரடி உறவில்லை. இதன் காரணமாக விளி வேற்றுமையை ஒரு வேற்றுமையாகக் கொள்ளவியலாதென இன்றைய மொழியியலாளர்கள் கருதுவர்.

நீ, நான், அவன் முதலிய மூவிடப் பெயர்கள் விளிக்கப்படுவதில்லை. மூவிடப் பெயர் அல்லாத படர்க்கைப் பெயர்களே விளிக்கப்படுகின்றன. விளிக்கப்படும் சில பெயர்ச் சொற்கள் ஏகார ஈறு பெறுகின்றன. சில சொற்களின் ஈறு திரிபடைவன. சில எவ்வித திரிபும் அடைவதில்லை.

**ஏகார ஈறு பெறுதல்**

★ மகன் ஏ - மகனே
★ ஐயன் ஏ - ஐயனே

**ஈற்று இகரம் ஈகாரமாகுதல்**

★ தம்பி - தம்பீ
★ சாமி - சாமீ

**ஈற்று அயல் திரிதல்**

★ மக்கள் - மக்காள்
★ புலவர்கள் - புலவர்காள்

**ஐ ஈற்றுப் பெயர் ஆய் விகுதி பெறுதல்**

★ *தங்கை - தங்காய்*
★ *நாரை - நாராய்*

*(தற்காலத்தில் ஆய் விகுதி பயன்படுத்தப்படுவதில்லை)*

**பயிற்சி**

1. வேற்றுமை என்றால் என்ன?
2. ஐந்தாம் வேற்றுமையின் பொருள்கள் எவை?
3. ★ **ஆசையிலிருந்து விடுபட வேண்டும்.**
   ★ **பூவிலிருந்து தேன் வந்தது.**
   ★ **விளக்கிலிருந்து ஒளி பிறந்தது.**
   ★ **அறியாமையிலிருந்து விடுபட வேண்டும்.**
   மேலுள்ள வாக்கியங்கள் நீங்கல் பொருளில் 'பருப் பொருள் சார்ந்த இடம்' கொண்டவை எவை? 'பருப் பொருள் சாராத இடம்' கொண்டவை எவை?
4. பழந் தமிழில் ஒப்புப் பொருளுக்குப் பயன்படுத்தப்பட்ட வேற்றுமை உருபு எது? தற்காலத்தில் ஒப்புப் பொருளுக்குப் பயன்படுத்தப்படும் உருபுகள் எவை? வாக்கியம் அமைத்து விளக்கம் தருக.
5. ★ **வீட்டின் முன்னால் மல்லிகை நிற்கிறது.**
   ★ **இலங்கையின் கிழக்கே கடல் பரந்துள்ளது.**
   இவ்வாக்கியங்களில் வந்த வேற்றுமை உருபுகளையும் அவை உணர்த்தும் பொருள்களையும் எடுத்துக் கூறுக.
6. ★ **இனிய கானத்திலே உயர்ந்த கண்ணனின் வேய்ங்குழல்.**
   ★ **மானத்திலே சிறந்த கவரி மான்.**
   இவ்வாக்கியங்களில் 'இல்' உருபு என்ன பொருளில் வந்துள்ளது?
7. ஆறாம் வேற்றுமை, ஏனைய வேற்றுமைகளிலிருந்து எந்த வகையில் வேறுபடுகிறது?
8. கம்பன் பாடல், என் தந்தை, கர்ணன் கவசம் என்பன என்ன வேற்றுமை என்பதைக் கூறுக.
9. இட வேற்றுமையின் உருபுகள் எவை?
10. ★ **புத்தகம் மேசையில் இருக்கிறது.**
    ★ **நீ கூறியது நினைவில் இருக்கிறது.**
    இவ்வாக்கியங்களில் வந்துள்ள உருபுகளை எடுத்துக்காட்டி, அவை என்ன பொருளில் வந்துள்ளன எனக் குறிப்பிடுக.
11. பின்வரும் பெயர்ச் சொற்களை 'விளிப் பெயர்களாக' மாற்றி எழுதுக.
    ★ மகன் ★ தாய் ★ பிள்ளை ★ பெண்
    ★ நண்பன் ★ அரசன் ★ புலவர்